# உ யுத்தகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.





ஆறாவது,

# உயுத்தகாண்டம்.



## முதலாவது கடல்காண்படலம்.

### தனியன்கள்.

மகிழ்மாறனை வழுத்துவாயென்றுனக்கு
நெகிழ்மாறனை நினைக்குநேயம்—முகிழ்மா
முலைக்கமலையேற்றமொழிகாவியத்தால்
நிலைக்கமலையேகவருணீ.

கம்பன் கவித்திறங் கழறல்.

கம்பர்வீட்டுவொருசிறுபுன்கட்டுத்தறியுங்கவிசெயுமென்
றிம்பர்நாட்டுமென்பதைகூறிருஞ்சொல்புலவீர்கேட்டுவந்தாம்
சம்புநீட்டுசெடைத்தலைக்குத்தருவர்தலைக்குத்திருப்பாத
அம்புநாட்டுமொல்சரிதமன்னோர்பாடலதுவியப்பே.

காப்பு.

ஒன்றேயென்னினொன்றேயாம்பலவென்றுரைக்கிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயாமாமேயென்னினாமேயாம்
இன்றேயென்னினின்றேயாமிலதென்றுரைக்கினிலதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கைநமக்கிங்கென்னோபிழைப்பம்மா. (௧)

நூல்.

* ஊழிதிரியுங்காலத்துமுலையாநிலையவுயர்கிரியும்
வாழிவற்றாமறிகடலுமண்ணும்வடபால்வான்றோயப்
பாழித்தெற்குள்ளனகிரியுநிலனுந்தாழப்பாரெழுந்த
எழுபத்தின்பெருவெள்ளமகரவெள்ளத்திறுத்ததால். (௨)

பொங்கிப்பரந்தபெருஞ்சேனைபுறத்துமகத்தும்புடைசுற்றச்
சங்கிற்பொலிந்தகையாளைப்பிரிந்தபின்புதமக்கினமாம்

---

* ஊழிதிரியுங்காலத்தும் — உலகமாறுபடுஞ்சமயத்தும்.

கொங்கிற்பொலிந்ததாமரையின்குழுவுந்துயில்வுற்றிதழ்குவிக்கும்
கங்குற்பொழுதுந்துயிலாதகண்ணன்கடலைக்கண்ணுற்றான். (௩)

* சேயகாலம்பிரிந்தகலத்திரிந்தான்மீண்டுஞ்சேக்கையின்பால்
மாயன்வந்தானினிவளர்வானென்றுகருதிவருந்தென்றல்
தூயமலர்போனுரைத்தொகையுமுத்துஞ்சிந்திப்புடைசுருட்டிப்
பாயலுதறிப்படுப்பதேயொத்ததிரையின்பரப்பம்மா. (௪)

வழிக்குங்கண்ணீரழுவத்துவஞ்சியழுங்கவந்தடுத்த
பழிக்குங்காமன்பூங்கணைக்கும்பற்றாநின்றான்பொற்றோளைச்
சுழிக்குங்கொல்லனெல்லுலையிற்றுள்ளும்பொறியிற்சுடுமென்றே
கொழிக்குங்கடலினெடுந்திரைவாய்த்தென்றறாற்றுங்குறுந்திவலை. (௫)

னென்னற்கண்டதிருமேனியின்றுபிறிதாய்நிலைதளர்வான்
தன்னைக்கண்டிரங்காதுதனியேகதறுந்தடங்கடல்வாய்ப்
பின்னற்றிரைமேற்றவழ்கின்றபிள்ளைத்தென்றல்கள்ளுயிர்க்கும்
புன்னைக்குறும்பூநறுஞ்சுண்ணம்பூசாதொருகாற்போகாதே. (௬)

சிலைமேற்கொண்டதிருநெடுந்தோட்குவமைமலையுஞ்சிறிதேய்ப்ப
நிலைமேற்கொண்டுமெலிகின்றநெடியோன்றன்முன்படியேழும்
தலைமேற்கொண்டகற்பினுண்மணிவாயென்னத்தனித்தோன்றிக் [ழ்,
கொலைமேற்கொண்டாருயிர்குடிக்குங் கூற்றங்கொல்லோகொடிப்பவள

தூரமில்லைமயிலிருந்த † சூழலென்றுமனஞ்செல்ல
வீரவில்லிநெடுமோனம்வெல்லநாளுமெலிவானுக்
கீரமில்லாநிருதரோடென்னவுறவுண்டுனக்கேழை
மூரன்முறுவற்குறிகாட்டிமுத்தேயுலகைமுடிப்பாயோ. (௭)

இந்துவன்னநுதற்பேதையிருந்தாணீங்காவிடர்கொடியேன்
தந்தபாவைதவப்பாவைதனிமைதகவோவெனத்தளர்ந்து
சிந்துகின்றநறுந்தரளக்கண்ணீர்ததும்பித்திரைத்தெழுந்து
வந்துவள்ளன்மலர்த்தாளின்வீழ்வதேய்க்குமறிகடலே. (௮)

பள்ளியரவிற்பேருலகம்பசுங்கல்லாகப்பணிக்கற்றை
துள்ளுநறுமென்புனறெளிப்பத்தூநீர்க்குழவிமுறைசுற்றி
வெள்ளிவண்ணநுரைக்கலவைவெதும்புமண்ணறிருமேனிக்
கள்ளியப்பத்திரைக்கரத்தாலரைப்பதேய்க்குமணியாழி. (௧0)

கொங்கைக்குயிலைத்துயர்நீக்கியிமையோர்க்குற்றகுறைமுற்ற
வெங்கைச்சிலையன்றூணியினன்விடாதுமுனிவின்மேற்செல்லும்
கங்கைத்திருநாடுடையானைக்கண்டுநெஞ்சங்களிகூர
அங்கைத்திரள்களெடுத்தோடியார்த்ததொத்ததணியாழி. (௧௧)

* சேயகாலம் – வெகுகாலம்.

† சூழலென்று – இடமென.

இன்னதாயகருங்கடலையெய்தியிதனுக்கெழுமடங்கு
தன்னதாயநெடுமோனத்துயரங்காதலிவைதழைப்ப
என்னதாகுமேல்விளைவென்றிருந்தானிராமனிகலிலங்கைப்
பின்னதாயகாரியமுநிகழ்ந்தபொருளும்பேசுவாம். (கஉ)

க-வது, கடல்காண்படலம் - முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - கச.



## உ-வது, மந்திரப்படலம்.

பூவருமயனொடும்புகுந்துபொன்னகர்
மூவகையுலகினுமழகுமுற்றுற
ஏவினனியற்றினன்கணத்தினென்பரால்
தேவருமருள்கொளத்தெய்வத்தச்சனே. (க)

பொன்னினுமணியினுமமைந்தபொற்புடை
நன்னகர்நோக்கினனகநோக்கினன்
முன்னையினழகுடைத்தென்றுமொய்கழல்
மன்னனுமுவந்துதன்முனிவுமாறினன். (உ)

முழுப்பெருந்தனிமுதலுலகின்முந்தையோன்
எழிற்குறிகாட்டிடின்றியற்றியிந்தனன்
பழிப்பருமுலகங்களெவையும்பன்முறை
அழித்தழித்தியற்றுவாற்கரிதுண்டாகுமோ. (ங)

திருநகர்முழுவதுந்திருந்தநோக்கிய
பொருகழலிராவணனயற்குப்பூசனை
வரன்முறையியற்றிநீவழிக்கொள்வாயென்றான்
அரியனதச்சற்குமுதவியானையான். (ச)

அவ்வழியாயிரமாயிரம்மவிர்
செவ்வழிச்செம்மணித்தூணஞ்சேர்த்திய
இவ்வழிமண்டபத்தரிகளேந்திய
வெவ்வழியாசனத்தினிதுமேவினான். (ரு)

வரம்பறுசுற்றமுமந்திரத்தொழில்
நிரம்பியமுதிஞருஞ்சேனைநீள்கடற்
றரம்பெறுதலைவருந்தழுவத்தோன்றினன்
அரம்பையர்கவரியோடாடுந்தாரினான். (சு)

முதன்மந்திரியான மகோதரன் தன்மனநிலை உரைத்தல்.

மற்றவன்பின்னுறமகோதரப்பெயர்க்
கற்றடந்தோளினனெரியுங்கண்ணினன்
முற்றுறநோக்கினன்முடிவுமன்னதால்
கொற்றவகேளெனவினையகூறினன். (உரு)

ஏற்றமென்பிறிதினியெவர்க்குமின்னுயிர்
மாற்றருமுறைமைசால்வலியின்மாண்பமை
கூற்றுவன்றன்னுயிர்கொள்ளுங்கூற்றெனத்
தோற்றுநின்னேவறன்றலையிற்சூடுமோல். (உசு)

வெள்ளியங்கிரியினைவிடையின்பாகனோ
டள்ளிவிண்டொடவெடுத்தார்த்தவாற்றலாய்
* சுள்ளியினிருந்துறைகுரங்கின்றோள்வலிக்
கெள்ளுதிபோலுநின்புயத்தையெம்மொடும். (உஎ)

மண்ணினும்வானினுமற்றுமுற்றுநின்
கண்ணினுநீங்கினர்யாவர்கண்டவர்
நண்ணரும்வலத்தினர்யாவர்நாயக
எண்ணிலரிறந்தவரெண்ணிலாவரோ. (உஅ)

† இடுக்கிவணியம்புவதில்லையீண்டெனை
விடுக்குவையாமெனிற்குரங்கைவேரறுத்
தொடுக்கருமனிசரையுயிருண்டுன்பகை
முடிக்குவென்யானெனமுடியக்கூறினன். (உஎ)

வச்சிரதந்தன் தன்மனநிலைகூறுதல்.

இச்சிரத்தவனுரைத்திறுக்குமெல்லையின்
வச்சிரத்தெயிற்றவன்வல்லைகூறினன்
‡ அச்சிரத்தைக்கொருபொருளின்றாயினும்
பச்சிரத்தம்பொழிபரிதிக்கண்ணினன். (உஅ)

போயினிமனிசரைக்குரங்கைப்பூமியில்
தேயுமின்கைகளாற்றின்மினென்றமை
ஏயினையிருக்குவதன்றியென்னினி
ஆயுமதெம்வயினயிர்ப்புண்டாங்கொலோ. (உகூ)

எவ்வுலகத்துநின்னேவல்கேட்கிலாத்
தெவ்வினையறுத்துனக்கடிமைசெய்தயான்

* சுள்ளி — உலர்ந்தசிறுவிறகு. † இடுக்கு — உத்தரவளிப்பாயாக.
‡ அச்சிரத்தைக்கு — அம்மந்திராலோசனையின் தன்மைக்கேற்ற.

தவ்வினபணியுள தாகத்தான்கொலோ
இவ்வினையென்வயினீகலாதென்றான். (௩0)

துன்முகன் தன் மனநிலைகூறல்.

நின்மினென்றவன் றனைவிலக்கிநீயிவை
என்முனுமெளியர்போலிறுத்தியோவென
மன்முகநோக்கினன் வணங்கிவன்மையால்
துன்முகனென்பவனினையசொல்லினன். (௩க)

திக்கயம்வலியிலதேவர்மெல்லியர்
முக்கணன்கயிலையுமுரணின்றாயது
மக்களுங்குரங்குமேவலியவாமெனின்
அக்கடவிராவணற்கமைந்தவாற்றலே. (௩உ)

பொலிவதுபொதுவுறவெண்ணும்புன்றொழில்
மெலியவர்கடனமக்கிறுதிவேண்டுவார்
வலியினரெனினவர்க்கொதுங்கிவாழ்துமோ
ஒலிகழலொருவாம்முயிருக்கன்பினால். (௩௩)

கண்ணியமந்திரக்கருமங்காவல
மண்ணியன்மனிசருங்குரங்குமற்றவும்
உண்ணியவமைந்தனவுணவுக்குட்குமேல்
திண்ணியவரக்கரிற்றீரர்யாவரே. (௩௪)

எரியுறமடுப்பதுமெதிர்ந்துளோர்படப்
பொருதொழில்யாவையும்புரிந்துபோவதும்
வருவதுங்குரங்குநம்வாழ்க்கையூர்கடந்
தரிதுகொலிராக்கதர்க்காழிநீந்துதல். (௩௫)

வந்துனதிருக்கையுமரணும்வன்மையும்
வெந்தொழிற்றனையின்விரிவும்வீரமும்
சிந்தையினுணர்பவர்யாவரேசிலர்
உய்ந்துதம்முயிர்கொடிவ்வுலகத்துள்ளுளார். (௩௬)

ஒல்வதுநினையினுமுறுதியோரினும்
வெல்வதுவிரும்பினும்வினையம்வேண்டினும்
செல்வதங்கவருழைச்சென்றுதீர்ந்தறக்
கொல்வதுகருமமென்றுணரக்கூறினன். (௩எ)

பெரும்பக்கன் தன்மனநிலை கூறுதல்.

காவலன்கண்ணெதிரவனைக்கைகவித்
தியாவதுண்டினிநமக்கென்னச்சொல்லினன்

கோவமும்வன்மையுங்குரங்குக்கேயெனு
மாபெரும்பக்கனென்ஞெருவன்வன்மையான். (௩அ)

மூந்தினர்முரணிலர்சிலவர்மொய்யமர்
நந்தினர்தமரொடுநனிநயந்ததோ
வந்தொருகுரங்கிடுதீயின்வன்மையால்
வெந்ததோவிலங்கையோடரக்கர்வெம்மையும். (௩கூ)

மானுடரேவுவார்குரங்குவந்திவ்வூர்
தானெரிமடுப்பதுநிருதர்தானையே
ஆனவராதுகுறித்தழுங்குவாரெனின்
மேனிகழ்வதற்கினிவிளம்பல்வேண்டுமோ. (சO)

நின்றுநின்றிவைசிலவிளம்பநேர்கிலன்
நன்றெனினரரொடுகுரங்கை * நாமறக்
கொன்றுதின்றல்லதோரெண்ணுங்கூடுமோ
என்றனனிகல்குறித்தெரியுங்கண்ணினுன். (சக)

பிசாசன் தன்மனநிலை கூறுதல்.

திசாதிசைபோதுநாமரசன்செய்வினை
உசாவினனுட்கினனுழிதும்வாழ்வென்றுன்
பிசாசனென்ஞெருபெயர்பெற்றபெய்கழல்
† நிசாசரனுருப்புணர்நெருப்புநீர்மையான். (சஉ)

பானுகோபன் தன் மனநிலைமை கூறுதல்.

ஆரியன்றன்மையீதாயினுய்வுறு
காரியமீதெனிற்கண்டவாற்றினுல்
சீரியர்மனித்தரேசிறியம்யாமெனுச்
சூரியன்பகைஞனென்ஞெருவன்சொல்லினுன். (ச௩)

வேள்விப்பகைஞனென்பவன் தன்மனநிலை கூறுதல்.

ஆள்வினைநிலைமையுமரக்கராற்றலும்
தாழ்வினியிதனின்மேற்பகரத்தக்கதோ
சூழ்வினைமனிசராற்றேன்றிற்றுமெனு
‡ வேள்வியின்பகைஞனுமுரைத்துவெள்கினுன். (சச)

தூமிராட்சன் தன்மனநிலை கூறுதல்.

தொகைநிறக்குரங்குடைமனிசர்ச்சொல்லினென்
சிகைநிறச்சூலிதன்றிறத்திற்செல்லினும்
தகைநிறத்தண்ணறன்சமைதனன்றெனுப்
புகைநிறக்கண்ணனும்புகன்றுபொங்கினுன். (சரு)

* நாமற — பெயரற.
† நிசாசரன் — அசுரன்.
‡ வேள்வியின்பகைஞன் — எக்ஞவிரோதன்.

மற்றவன்பின்னுறமற்றைறயோர்களும்
இற்றிதுவேநலமெண்ணமற்றிலென்
றுற்றனவுற்றனசொல்லியோங்கினர்
புற்றுறையரவெனப்புழுங்குநெஞ்சினர். (௬௬)

வேறு.

கும்பகருணன் தன் மனநிலை கூறுதல்.

வெம்பிகலரக்கரைவிலக்கிவினைதேரா
நம்பியரிருக்கவெனநாயகனைமுன்னா
எம்பியெனகிற்கிலுரைசெய்வலிதமென்னாக்
கும்பகருணப்பெயரினானிவைகுறித்தான். (௬௭)

நீயயன்முதற்குலமிதற்கொருவனின்றாய்
ஆயிரமறைப்பொருளுணர்ந்தறிவமைந்தாய்
தீவினைநயப்புறுதல்செய்தனைதெரிந்தால்
ஏயினவுறத்தகையையித்துணையவேயோ. (௬௮)

ஓவியமமைந்தநகர்தீயுண * வுளைந்தாய்
கோவியலழிந்ததெனவேறொருகுலத்தோன்
தேவியைநயந்துசிறைவைத்தசெயனன்றோ
பாவியருறும்பழியிதிற்பழியுமுண்டோ. (௬௯)

நன்னகரழிந்ததெனநாணினைநயத்தால்
உன்னுயிரெனத்தகையதேவியர்களுன்மேல்
இன்னகைதரத்தரவொருத்தன்மனையுற்றாள்
பொன்னடிதொழத்தொழமறுத்தல் † புகழ்போலாம். (௭௦)

என்னொருவனில்லுறைதவத்தியையிரங்காய்
வன்றொழிலினுய்மறைதுறந்துசிறைவைத்தாய்
அன்றொழிவதாயினுமரக்கர்புகழைய
புன்றொழிலினுவிசைபொறுத்தல்புலமைத்தோ. (௭௧)

ஆசில்பரதாரமவையஞ்சிறையடைப்பேம்
மாசில்புகழ்காதலுறவேம்வளமைகூரப்
பேசுவதுமானமிடைபேணுவதுகாமம்
கூசுவதுமானுடரைநன்றுநமகொற்றம். (௭௨)

சிட்டர்செயல்செய்திலைகுலச்சிறுமைசெய்தாய்
மட்டவிழ்மலர்க்குழலினாளையினிமன்றொ
விட்டிடுதுமேலினியமாதுமவர்வெல்லப்
பட்டிடுதுமேலதுவுநன்றுபழியன்றால். (௭௩)

* உளைந்தாய் — வருந்தினை.
† புகழ்போலாம் — அன்றென்பது குறிப்பு.

அறந்துறந்தமரரைவென்றவாண்டொழில்
திறந்தெரிந்திடினதுதானுஞ்செய்தவம்
நிறந்திறம்பாவகையியற்றுநீர்மையால்
மறந்துறந்தவர்தரும்வரத்தின்வண்மையால். (சுக)

மூவரைவென்றுமூன்றுலகுமுற்றுறக்
காவலினின்றுதங்களிப்புக்கைம்மிக
வீவதுமுடிவெனவீந்ததல்லது
தேவரைவென்றவர்யாவர்தீமையோர். (எ0)

வினைகளைவென்றுமேல்வீடுகண்டவர்
எனைவரென்றியம்புகேனெவ்வந்தீர்க்கையால்
முனைவருமமரருமுன்னும்பின்னரும்
அனையவர்திறத்துளர்யாவராற்றினர். (எக)

விபீடணன் என்னுரையை இகழாதிருத்தியே லுரைக்கின்றேனென
இராவணனை நோக்கிக் கூறுதல்.

பிள்ளைமைவிளம்பினைபேதைநீயெனு
ஒள்ளியபுதல்வனையுரப்பியென்னுரை
எள்ளலையாமெனினியம்பலாற்றுவன்
தெள்ளியபொருளென * வரசற்செப்பினன். (எஉ)

எந்தைநீயாயுநீயெம்முனீதவம்
வந்தனைத்தெய்வநீமற்றுமுற்றுநீ
இந்திரப்பெரும்பதமிழக்கின்றாயென
மந்தரநதமனனுகலனுவலவதாயினேன். (எங)

கற்றுறுமாட்சியென்கண்ணின்றாயினும்
உற்றுறுபொருடெரிந்துணர்தலோயினும்
† சொற்றுறுசூழ்ச்சியின்றுணிவுசோரினும்
முற்றுறக்கேட்டபின்முனிதிமொய்ம்பினேய். (எச)

கோனகர்முழுவதுநினதுகொற்றமும்
சானகியெனும்பெயருலகின்றம்மனை
ஆனவள்கற்பினால்வெந்ததல்லதோர்
வானரஞ்சுட்டதென்றுணர்தன்மாட்சியோ. (எரு)

எண்பொருட்டொன்றநின்றெவருமெண்ணினால்
விண்பொருட்டொன்றியவுயர்வுமீட்சியும்

* அரசற்செப்பினன் — இராவணனுக்குரைத்தான்.

† சொற்றுறுசூட்சியின் றுணிவுசோரினும்-மந்திராலோசனைச்சொ
ளின் தீர்மானத்துக்கு மாறுபட்டாலும்.

அறந்துறந்தமரரைவென்றவாண்டொழில்
திறந்தெரிந்திடினதுதானுஞ்செய்தவம்
நிறந்திறம்பாவகையியற்றுநீர்மையால்
மறந்துறந்தவர்தரும்வரத்தின்வண்மையால். (௬௯)

மூவரைவென்றுமூன்றுலகுமுற்றுறக்
காவலினின்றுதங்களிப்புக்கைம்மிக
வீவதுமுடிவெனவீந்ததல்லது
தேவரைவென்றவர்யாவர்தீமையோர். (௭0)

வினைகளைவென்றுமேல்வீடுகண்டவர்
எனைவரென்றியம்புகேனெவ்வந்தீர்க்கையால்
முனைவருமமரருமுன்னும்பின்னரும்
அனையவர்திறத்துளர்யாவராற்றினர். (௭௧)

## விபீடணன் என்னுரையை இகழாதிருத்தியே லுரைக்கின்றேனென இராவணனை நோக்கிக் கூறுதல்.

பிள்ளைமைவிளம்பினைபேதைநீயெனு
ஒள்ளியபுதல்வனையுரப்பியென்னுரை
எள்ளலையாமெனினியம்பலாற்றுவென்
தெள்ளியபொருளென * வரசற்செப்பினன். (௭௨)

எந்தைநீயாயுநீயெம்முனீதவம்
வந்தனைத்தெய்வநீமற்றுமுற்றுநீ
இந்திரப்பெரும்பதமிழக்கின்றாயென
மந்தணமனுகலனுவலவதாயினேன். (௭௩)

கற்றுறுமாட்சியென்கண்ணின்றாயினும்
உற்றுறுபொருடெரிந்துணர்தலோயினும்
† சொற்றுறுசூழ்ச்சியின்றுணிவுசோரினும்
முற்றுறக்கேட்டபின்முனிதிமொய்ம்பினோய். (௭௪)

கோனகர்முழுவதுநினதுகொற்றமும்
சானகியெனும்பெயருலகின்றம்மனை
ஆனவள்கற்பினால்வெந்ததல்லதோர்
வானரஞ்சுட்டதென்றுணர்தன்மாட்சியோ. (௭௫)

எண்பொருட்டொன்றநின்றெவருமெண்ணினால்
விண்பொருட்டொன்றியவுயர்வுமீட்சியும்

---

* அரசற்செப்பினன் — இராவணனுக்குரைத்தான்.

† சொற்றுறுசூட்சியின் றுணிவுசோரினும்-மந்திராலோசனைச்சொ ளின் தீர்மானத்துக்கு மாறுபட்டாலும்.

அறந்துறந்தமரரைவென் றவாண்டொழில்
திறந்தெரிந்திடினது தானுஞ்செய்தவம்
நிறந்திறம்பாவகையியற்றுநீர்மையால்
மறந்துறந்தவர் தரும்வரத்தின்வண்மையால். (சுக)

மூவரைவென் றுமூன் றுலகுமுற்றுறக்
காவலினின் றுதங்களிப்புக்கைம்மிக
வீவதுமுடிவெனவீந்ததல்லது
தேவரைவென் றவர்யாவர்தீமையோர். (எ0)

வினைகளைவென் றுமேல்வீடுகண்டவர்
எனைவரென் றியம்புகேனெவ்வந்தீர்க்கையால்
முனைவருமமரருமுன்னும்பின்னரும்
அனையவர்திறத்துளர்யாவராற்றினர். (எக)

விபீடணன் என்னுரையை இகழாதிருத்தியே லுரைக்கின்றேனென இராவணனை நோக்கிக் கூறுதல்.

பிள்ளைமைவிளம்பினேபேதைநீயெனு
ஒள்ளியப்புதல்வனையுரப்பியென்னுரை
எள்ளலையாமெனினியம்பலாற்றுவென்
தெள்ளியபொருளென * வரசற்செப்பினன். (எஉ)

எந்தைநீயாயுநீயெம்முனீ தவம்
வந்தனைத்தெய்வநீமற்றுமுற்றுநீ
இந்திரப்பெரும்பதமிழக்கின்றாயென
நொந்தனனாகலனுவலவதாயினேன். (எ௩)

கற்றுறுமாட்சியென்கண்ணின்றாயினும்
உற்றுறுபொருடெரிந்துணர்தலோயினும்
† சொற்றுறுசூழ்ச்சியின்றுணிவுசோரினும்
முற்றுறக்கேட்டபின்முனிதிமொய்ம்பினோய். (எச)

கோனகர்முழுவதுநினதுகொற்றமும்
சானகியெனும்பெயருலகின்றம்மனை
ஆனவள்கற்பினால்வெந்ததல்லதோர்
வானரஞ்சுட்டதென்றுணர்தன்மாட்சியோ. (எரு)

எண்பொருட்டொன்றநின்றெவருமெண்ணினால்
விண்பொருட்டொன்றியவுயர்வுமீட்சியும்

* அரசற்செப்பினன் — இராவணனுக்குரைத்தான்.

† சொற்றுறுசூட்சியின் றுணிவுசோரினும்-மந்திராலோசனைச்சொ ளின் தீர்மானத்துக்கு மாறுபட்டாலும்.

அறந்துறந்தமரரைவென்றவாண்டொழில்
திறந்தெரிந்திடினதுதானுஞ்செய்தவம்
நிறந்திறம்பாவகையயற்றுநீர்மையால்
மறந்துறந்தவர்தரும்வரத்தின்வண்மையால். (சுகூ)

மூவரைவென்றுமூன்றுலகுமுற்றுறக்
காவலினின்றுதங்களிப்புக்கைம்மிக
வீவதுமுடிவெனவீந்ததல்லது
தேவரைவென்றவர்யாவர்தீமையோர். (எ0)

வினைகளைவென்றுமேல்வீடுகண்டவர்
எனைவரென்றியம்புகேனெவ்வந்தீர்க்கையால்
முனைவருமமரருமுன்னும்பின்னரும்
அனையவர்திறத்துளர்யாவராற்றினர். (எக)

விபீடணன் என்னுரையை இகழாதிருத்தியே லுரைக்கின்றேனென இராவணனை நோக்கிக் கூறுதல்.

பிள்ளைமைவிளம்பினைபேதைநீயெனு
ஒள்ளியபுதல்வனையுரப்பியென்னுரை
எள்ளலையாமெனினியம்பலாற்றுவென்
தெள்ளியபொருளென * வரசற்செப்பினன். (எஉ)

எந்தைநீயாயுநீயெம்முனீதவம்
வந்தனைத்தெய்வநீமற்றுமுற்றுநீ
இந்திரப்பெரும்பதமிழக்கின்றாயென
நொந்தனனாகலனுவலவதாயினேன். (எ௩)

கற்றுறுமாட்சியென்கண்ணின்றாயினும்
உற்றுறுபொருடெரிந்துணர்தலோயினும்
† சொற்றுறுசூழ்ச்சியின்றுணிவுசோரினும்
முற்றுறக்கேட்டபின்முனிதிமொய்ம்பினோய். (எச)

கோனகர்முழுவதுநினதுகொற்றமும்
சானகியெனும்பெயருலகின்றம்மனை
ஆனவள்கற்பினால்வெந்ததல்லதோர்
வானரஞ்சுட்டதென்றுணர்தன்மாட்சியோ. (எரு)

எண்பொருட்டொன்றநின்றெவருமெண்ணினால்
விண்பொருட்டொன்றியவுயர்வுமீட்சியும்

---

* அரசற்செப்பினன் — இராவணனுக்குரைத்தான்.

† சொற்றுறுசூட்சியின் றுணிவுசோரினும்-மந்திராலோசனைச்சொ ளின் தீர்மானத்துக்கு மாறுபட்டாலும்.

மய்யுரைத்துலவுகண்யனைவிபால்வரமளித்தவைமருதே
மெய்யுரைத்துயிர்கொடுத்தமரரும்பெறுகிலாவீடுபெற்ருன். (௮௪)

அனையவன்சிறுவரெம்பெருமவுன்பகைஞரானவரையம்மா
இனையரென்றுணர்தியேலிருவரும்மொருவரும்மெதிர்கிலாதார்
முனைவரும்மமரரும்முழுதுணர்ந்தவர்களும்முற்றுமற்றும்
நினைவருந்தகையர்நம்வினையினுன்மனிசராயெளிதினின்ருர். (௮௫)

கோசிகப்பெயருடைக்குலமுனிதத்லயவை குளா மலா பமப
ராசனத்தவனொடெவ்வுலகமுந்தருவெனென்றமையலுற்ருன்
ஈசனிற்பெறுபடைக்கலமிமைப்பளவினெவ்வுலகம்யாவும்
நாசமுற்றிடநடப்பனகொடுத்தவைபிடித்துடையர்நம்பா. (௮௬)

எறுழ்வலிப்பொருவிரேளவுணரோடமரர்பண்டிகல்செய்காலத்
துறுதிறற்கலுழன்மீதொருவனின்றமர்செய்தானுடையவில்லும்
தெறுசினத்தவர்கண்முப்புரநெருப்புறவுருத்தெய்தவம்பும்
குறுமுனிப்பெயரினுனிறைதவர்க்கிறைதரக்கொண்டுநின்ருன். (௮௭)

நாவினுலுலகைநக்கிடுவதிக்களவிடற்குரியநாளும்
மேவுதீவிடமுயிர்ப்பனவெயிற்பொழியெயிற்றனையவீரர்
ஆவமாமரியபுற்றுறைவமுற்றறிவருக்கழிவுசெய்யும்
பாவகாரியருயிர்ப்பதமலாதிரைபெருப்பகழிநாகம். (௮௮)

பேருமோவொருவராலவர்களாலல்லதிஃபெரியவேனும்
நாருமூரியுமருநம்முடைச்சிலைகள்போனலியலாமோ
தாருவோவேணுவோதாணுவாயுலகினைத்தழுவிநிற்கும்
மேருவோமால்வரைக்குலமதோவல்லவோவில்லுமன்னே. (௮௯)

உரமொருங்கியுதுந்கடையும்வாலியது ார்புலகைமூடும்
மரமொருங்கியகராதியர்விராதனதுமா வரகண்மானும்
சிரமொருங்கினவனிச்செருவொருங்கு ரதெனிற்றெவ்வரென்பார்
பரமொருங்குவதலாற்பிறிதொருங்காததோர்பகையுமுண்டோ. (௯௦)

சொல்வரம்பெரியமாமுனிவரென்பவர்கடந்துணையிலாதார்
ஒல்வரம்பெரியதோளிருவரும்மமரரோடுலகம்யாவும்
வெல்வரென்பதுதெரிந்தெண்ணினுர்நிருதர்வேர்முதலும்வீயக்
கொல்வரென்றுணர்தலாலவரைவந்தமைவதோரியைபுகொண்டார். ()

துஞ்சுகின்றிலர்களாலிரவுநன்பகலுநிற்சொல்லவொல்கி
நெஞ்சுகின்றயருமிந்நிருதர்பேர்சனகியாநெடியதாய
நஞ்சுதின்றவர்களாநண்ணுவார்நரகமென்றெண்ணிநம்மை
அஞ்சுகின்றிலர்கணின்னருளலாற்சாணிலாவமரரையா. (௯௨)

ஊனவில்லிறுத்தோட்டைமாமரத்துளம்போட்டிக்
கூனிசூழ்ச்சியாலரசழிந்துயர்வனங்குறுகி
யானிழைத்திடவில்லிழந்தின்னுயிர்சுமக்கும்
மானுடன்வலிநீயலாதாருளர்மதிப்பார். (க0கூ)

பின்னும் விபீடணன் கூறுதல்.

என்றுதன்னுரையிழித்துநீயுணர்விலியென்று
நன்றுபோதுநாமெழுகெனுமரக்கனைநணுகா
ஒன்றுகேளினமுறுதியென்றன்பினனொழியான்
துன்றுதாரவன்பின்னருமினையனசொல்வான். (கக0)

தன்னின்முன்னியபொருளிலாவொருதனித்தலைவன்
அன்னமானுடனாகிவந்தவதரித்தமைந்தான்
சொன்னநம்பொருட்டும்பர்தஞ்சூழ்ச்சியின்றுணிவால்
இன்னமேகுதிபோலுமென்றடிதொழுதிரந்தான். (ககக)

பின்னுமிராவணன் கூறுதல்.

அச்சொற்கேட்டவனழியானென்றனையாயின்
கொச்சைத் * துன்மதியெத்தனைப்போரிடைக்குறைந்தான்
இச்சைக்கேற்றனயான்செய்தவித்தனைகாலம்
முச்சற்றான்கொலம்முழுமுதலோனெனமுனிந்தான். (கக௨)

இந்திரன்றனையிருஞ்சிறையிட்டநாளிமையாத்
தந்திகோடிறத்தகர்ந்தநாடன்னையான்முன்னம்
வந்தபோர்தொறுந்துரந்தநாள்வானவருலகைச்
சிந்தவென்றநாள்சிறியன்கொனீசொன்னதேவன். (கக௩)

சிவனுநான்முகத்தொருவனுந்திருநெடுமாலாம்
அவனுமற்றுளவமரருமுடனுறைந்தடங்காப்
புவனமூன்றும்யானுண்டுளதாண்டவப்பொருவில்
உவனிலாமையிலோவலியொதுங்கியோவுரையாய். (கக௪)

ஆயிரம்பெருந்தோள்களுமத்துணைத்தலையும்
மாயிரும்புவியுள்ளடியடக்குறும்வடிவும்
தீயசாலவுஞ்சிறிதெனநினைந்துநாந்தின்னும்
ஓயுமானுடவுருவுகொண்டனன்கொலாமொருவன். (கக௫)

† பித்தனாகியவ்சனுமானுமென்பெயர்கேட்
டெய்த்தசிந்தையரேகுழியேகுழியெல்லாம்
கைத்தவேற்றினுங்கடாவியபுள்ளினுமுதுகில்
தைத்தவாளிகணின்றளகுன்றின்வீழ்தடித்தின். (கக௬)

* துன்மதி-துற்புத்தியையுடையாய.

† பித்தனாகிய-உன்மத்தமுடையவனாகிய.

இச்சைநல்லனவுறுதிகளிசைக்குவெனென்றாய்
பிச்சர்சொல்லுவசொல்லினையென்பெருவிறலைக்
கொச்சைமானுடர்வெல்குவரென்பதுகுறித்த
தச்சமோவவர்க்கன்பினேயாவதோவையா. (க0க)

ஈங்குமானுடப்பசுக்களுக்கிலைவரமென்றாய்
தீங்குசொல்லினைதிசைகளையுலகொடுஞ்செருக்கால்
தாங்குமானையைத்தள்ளியத்தழனிறத்தவனை
ஓங்கநின்னொடுமெடுக்கவும்வரங்கொண்டதுளதோ. (க0உ)

மனக்கொடன்றியும்வறியனவழங்கினைவானோர்
சினக்கொடும்படைசெருக்களத்தென்னையென்செய்த
எனக்குநிற்கமற்றென்னொடிங்கொருவயிற்றுதித்த
உனக்குமானுடர்வலியராந்தகைமையுமுளதோ. (க0௩)

சொல்லுமாற்றங்கடெரிந்திலைபன்முறைதோற்றும்
வெல்லுமாற்றலுமொருமுறைபொறுத்தனன்விண்ணைக்
கல்லுமாற்றலென்கிளையையுமென்னையுங்களத்தில்
கொல்லுமாற்றலருளரெனக்கோடலுங்கொண்டாய். (க0ச)

தேவரிற்பெற்றவரத்தினிற்பெருஞ்செருக்கென்னின்
மூவரிற்பெற்றமுடையவன்றன்னொடுமுழுதும்
காவலிற்பெற்றதிகிரியோன்றன்னொடுங்கடந்த
தேவரிற்பெற்றவரத்தினலியம்புதியினையோய். (க0ரு)

நந்திசாபத்தினமையுமெங்குரங்கெனினம்பால்
வந்தசாபங்களெனைப்பலவவைசெய்தவலியென்
இந்தியாதிகளவித்தவர்தேவர்நம்மிறுதி
சிந்தியாதவர்யாரவைநம்மையென்செய்த. (க0சு)

* அரங்கினுடுவொற்கன்பூண்டுடைவரமறியேன்
இரங்கியானிற்பவென்வலியவன்வயினெய்த
வரங்கொள்வாலிபாற்றோற்றனென்மற்றும்வேறுள்ள
குரங்கெலாமெனைவெல்லுமென்றெங்ஙனங்கோடி. (க0எ)

நீலகண்டனு † நேமியுநேர்நின்றுநேரின்
ஏலுமன்னவருடைவலியவன்வயினெய்தும்
சாலுநல்வரநினைந்தவனெதிர்செலத்தவிர்ந்து
வாலிதன்னையுமணிதனுமறைந்துநின்றெய்தான். (க0அ)

* அரங்கில் — நடனசாலையில்.

ஊனவில்லிறுத்தோட்டைமாமரத்துளம்போட்டிக்
கூனிசூழ்ச்சியாலரசழிந்துயர்வனங்குறுகி
யானிழைத்திடவில்லிழந்தின்னுயிர்சுமக்கும்
மானுடன்வலிநீயலாதாருளர்மதிப்பார். (௪0௯)

பின்னும் விபீடணன் கூறுதல்.

என்றுதன்னுரையிழித்துநீயுணர்விலியென்று
நன்றுபோதுநாமெழுகெனுமரக்கனைநணுகா
ஒன்றுகேளினமுறுதியென்றன்பினனொழியான்
துன்றுதாரவன்பின்னருமினையனசொல்வான். (கக0)

தன்னின்முன்னியபொருளிலாவொருதனித்தலைவன்
அன்னமானுடனாகிவந்தவதரித்தமைந்தான்
சொன்னநம்பொருட்டும்பர்தஞ்சூழ்ச்சியின்றுணிவால்
இன்னமேகுதிபோலுமென்றடிதொழுதிரந்தான். (ககக)

பின்னுமிராவணன் கூறுதல்.

அச்சொற்கேட்டவனொழியானென்றனையாயின்
கொச்சைத் * துன்மதியெத்தனைப்போரிடைக்குறைந்தான்
இச்சைக்கேற்றனயான்செய்தவித்தனைகாலம்
முச்சற்றான்கொலம்முழுமுதலோனெனமுனிந்தான். (ககஉ)

இந்திரன்றனையிருஞ்சிறையிட்டநாளிமையாத்
தந்திகோடிறத்தகர்ந்தநாடன்னையான்முன்னம்
வந்தபோர்தொறுந்துரந்தநாள்வானவருலகைச்
சிந்தவென்றநாள்சிறியன்கொனீசொன்னதேவன். (ககங)

சிவனுநான்முகத்தொருவனுந்திருநெடுமாலாம்
அவனுமற்றுளவமரருமுடனுறைந்தடங்காப்
புவனமூன்றும்யானுண்டெனதாண்டவப்பொருவில்
உவனிலாமையிலோவலியொதுங்கியோவுரையாய். (ககச)

ஆயிரம்பெருந்தோள்களுமத்துணைத்தலையும்
மாயிரும்புவியுள்ளடியடக்குறும்வடிவும்
தீயசாலவுஞ்சிறிதெனநினைந்துநாந்தின்னும்
ஓயுமானுடவுருவுகொண்டனன்கொலாமொருவன். (ககரு)

† பித்தனாகியவ்சனுமானுமென்பெயர்கேட்
டெய்த்தசிந்தையரேகுழியேகுழியெல்லாம்
கைத்தவேற்றினுங்கடாவியபுள்ளினுமுதுகில்
தைத்தவாளிகணின்றுளகுன்றின்வீழ்தடித்தின். (ககசு)

* துன்மதி-துற்புத்தியையுடையாய.

† பித்தனாகிய-உன்மத்தமுடையவனாகிய.

வெஞ்சினந்தருபோரிலென்னுடனெழவேண்டா
இஞ்சிமாநகரிடமுடைத்தீண்டினிதிருத்தி
அஞ்சலஞ்சலென்றயலிருந்தவர்முகநோக்கி
நஞ்சின்வெய்யவன்கையெறிந்துருமெனநக்கான். (ககஎ)

விபீடணன் இரணியன் சரிதைகேளென உரைத்தல்.

பின்னும்வீடணனையரின்றரமலபெரியோர்
முன்னைநாளவன்முனிந்திடக்கிளையொடுமுடிந்தார்
இன்னமுண்டியானியம்புவதிரணியனென்பான்
றன்னையுள்ளவாகேட்டியென்றுரைசெயச்சமைந்தான். (கக அ)

உ-வது, மந்திரப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-கரு உ.

---

## ௩-வது, இரணியன் வதைப்படலம்.

வேதங்கண்ணியபொருளெலாம்விரிஞ்சனேயீந்தான்
போதங்கண்ணியவரமவன்றரக்கொண்டுபோந்தான்
காதுங்கண்ணுதலோனயன்கடைமுறைகாணப்
பூதங்கண்ணியவலியெலாமொருதனிபொறுத்தான். (க)

எற்றைநாளினுமுளனெனுமிறைவனுமயனும்
கற்றையஞ்சடைக்கடவுளுங்காத்தளித்தழிக்கும்
ஒற்றையண்டத்தினளவினோவிதன்புறத்துலவா
மற்றையண்டமுந்தன்பெயரேசொலவாழ்ந்தான். (உ)

பாழிவன்றடந்திசைசுமந்தோங்கியபணைக்கைப்
பூழிவன்கரியிரண்டிருகைகொடுபொருத்தும்
ஆழங்காணுதற்கரியவாயகன்றவோராழி
ஏழுந்தன்னிருதாளளவெனக்கடந்தேறும். (௩)

வண்டற்றெண்டிரையாற்றுநீர்சிலவென்றுமருவான்
கொண்டல்கொண்டநீர்குளிர்ப்பிலவென்றவைகுடையான்
பண்டைத்தெண்டிரைப்பரவைநீருவரென்றுபடியான்
அண்டத்தைப்பொதுத்தப்புறத்தப்பினலாடும்.

சார்விமானத்திற்சந்திரன்றனிப்பதஞ்சரிக்கும்
தேரின்மேனின்றுமிரவிதன்பெரும்பதஞ்செலுத்தும்

பேர்விலெண்டிசைக்காவலர்கருமமும்பிடிக்கும்
மேருமால்வரையுச்சிமேலரசுவீற்றிருக்கும். (௫)

நிலனுநீரும்வெங்கனலொடுகாலுமாய்நிமிர்ந்த
தலனுணீடியவவற்றினத்தலைவரைமாற்றி
உலவுங்காற்றொடுகடவுளர்பிறருமாயுலகின்
வலியுஞ்செய்கையும்வருணன்றன்கருமமுமாற்றும். (௬)

* தாமரைத்தடங்கண்ணினான்பேரவைதவிர
நாமந்தன்னதேயுலகங்கள்யாவையுநவிலத்
தூம்வெங்கனலந்தணர்முதலினர்சொரிந்த
ஓமவேள்வியினிறையவர்பேறெலாமுண்ணும். (எ)

காவல்காட்டுதறுடைத்தலென்றித்தொழில்கடவ
மூவரும்மவைமுடிக்கிலர்பிடிக்கிலர்முறையின்
ஏவர்மற்றவர்யோகிகளுறுபதமிழந்தார்
தேவரும்மவன்றாளலாதருச்சனைசெய்யார். (அ)

மரபின்மாபெரும்புறக்கடன்மஞ்சனமருவி
அரவினாட்டிடைமகளிரோடின்னமுதருந்திப்
பரவுமிந்திரன்பதியிடைப்பகற்பொழுதகற்றி
இரவினோலக்கநான்முகனுலகத்துளிருக்கும். (௯)

பண்டுவானவர்தானவர்யாவரும்பற்றித்
தெண்டிரைக்கடல்கடைதரவலியதுதேடிக்
கொண்டமத்தினைக்கொற்றத்தன்குவவுத்தோட்கமைந்த
தண்டெனக்கொளலுற்றதுநொய்தெனத்தவிர்ந்தான். (க0)

மண்டலந்தருகதிரவன்வந்துபோய்மறையும்
எண்டலந்தொடற்கரியனதடவரையிரண்டும்
கண்டலம்பசும்பொன்னவன்முன்னவன்காதின்
குண்டலங்கண்மற்றென்னினிப்பெருவிறல்கூறின். (கக)

மருக்கொடாமரைநான்முகனைம்முகன்முதலோர்
குருக்களோகெற்றோதுவதவன்பெருங்கொற்றம்
சுருக்கநான்மறைதொன்றுதொட்டுரைதொறுந்தோன்றா
திருக்குந்தெய்வமுமிரணியனேநமவென்னும். (கஉ)

மயருமன்னெடுஞ்சேவடிமண்ணிடைவைப்பின்
அயரும்வாளெயிற்றாயிரம்பணத்தலையநந்தன்
உயருமேலண்டமுகடுதன்முடியுறவுயரும்
பெயருமேனெடும்பூதங்களைந்தொடும்பெயரும். (க௩)

---

* தாமரைத்தடங்கண்ணினான் – புண்டரீகாட்சனான திருமாலின்.

பெண்ணிற்பேரெழிலாணினி * லலியினிற்பிறிதும்
உண்ணிற்கும்முயிருள்ளதினில்லதி † னுலவான்
கண்ணிற்காண்பனகருதுவயாவினுங்கழியான்
மண்ணிற்சாகிலன்வானினுஞ்சாகிலன்வரத்தால். (கச)

தேவராயினரேவருந்திரிதருமியக்கர்
யாவராயினுமெண்ணவுநினைக்கவுமியன்ற
கோவைமாலயன்மானுடன்யாவருங்கொல்ல
ஆவிதீர்கிலனுற்றலுந்தீர்கிலனனையான். (கரு)

நீரிற்சாகிலனெருப்பினுஞ்சாகிலனிமிர்ந்த
மாருதத்தினுமண்ணின்மற்றெவற்றினுமாளான்
ஓருந்தேவருமுனிவரும்பிறர்களுமுரைப்பச்
சாருஞ்சாபமுமன்னவன்றனைச்சென்றுசாரா. (கசு)

உள்ளிற்சாகிலன்புறத்தினு ‡ மூலக்கிலனுலவாக்
கொள்ளைத்தெய்வவான்படைக்கலம்யாவையுங்கொல்லா
$ நள்ளிற்சாகிலன்பகலிடைச்சாகிலனமனார்
கொள்ளச்சாகிலனரினியவனுயிர்கொள்வார். (கஎ)

பூதமைந்தொடும்பொருந்தியவுணர்வினிற்புணரும்
வேதநான்கினும்விளம்பியபொருள்களால்விளியான்
தாதைதன்னைத்தான்றனிக்கொலைசூழினுஞ்சாகான்
ஈதவன்னிலையெவ்வுலகங்கட்குமிறைவன். (கஅ)

ஆயவன்றனக்கருமகன்றினுரினறிஞன்
தூயரென்பவர்யாரினும்மறையினுந்தூயன்
நாயகன்றனிஞானநல்லறத்துக்குநாதன்
தாயின்மன்னுயிர்க்கன்பினனுளனொருதக்கோன். (கக)

வாழியானவன்றனைக்கண்டுமனமுவந்துருகி
ஆழியையநீயறிதியான்மறையெனவறைந்தான்
§ ஊழியுங்கடந்துயர்கின்றவாயுளானுலகம்
ஏழுமேழும்வந்தடிதொழவரசுவீற்றிருந்தான். (௨௦)

என்றொரந்தணனெல்லையிலறிஞனையேவி
நன்றுநீயிவற்குதவுதிமறையெனநவின்றான்
சென்றுமற்றவன்றன்னொடுமொருசிறைசேர்ந்தான்
அன்றுநான்மறைமுதலியவோதுவானமைந்தான். (௨க)

---

* அலியினில் — பேட்டினில்; பேடுநபுஞ்சகம்-ஆண்டன்மையற்றது.
† உலவான் — நீங்காதிருப்பான். ‡ உலக்கிலன் — குறயான்.
$ நள்ளில் — உச்சிப்பொழுதில். § ஊழி — விதி.

ஓதப்புக்கவனுந்தைபேருரையெனலோடும்
போதத்தன்செவித்தொளையிருகைகளாற்பொத்தி
மூதக்கோயிதுநற்றவமன்றெனமொழியா
* வேதத்துச்சியின்மெய்ப்பொருட்பெயரினைவிரித்தான். (உ உ)

ஓநமோநாராயணாயவென்றுரைத்துளமுருகித்
தானமைந்திருதடக்கையுந்தலையின்மேற்றாங்கிப்
பூநிறக்கண்கள்புனலுகமயிர்புறம்பொடிப்ப
ஞானநாயகனிருந்தனனந்தணனடுங்கி. (உ௩)

கெடுத்தொழிந்தனையென்னையுமுன்னையுங்கெடுவாய்
படுத்தொழிந்தனைபாவியத்தேவரும்பகர்தற்
கடுத்ததன்றியேயயலொன்றுபகரநின்னறிவின்
எடுத்ததென்னிதுவென்செய்தவண்ணநீயென்றான். (உ௪)

என்னையுய்வித்தேனெந்தையையுய்வித்தேனினைய
உன்னையுய்வித்திவ்வுலகையுமுய்விப்பானமைந்து
முன்னைவேதத்தின்முதற்பெயர்மொழிவதுமொழிந்தேன்
என்னைகுற்றநானியம்பியதியம்புதியென்றான். (உ௫)

முந்தைவானவர்யாவர்க்குமுதல்வற்குமுதலோன்
உந்தைமற்றவன்றிருப்பெயருரைசெயற்குரிய
அந்தணாளனேனென்னினுமறிதியோவையா
இந்தவிப்பெயருரைத்தெனைக்கெடுத்திடலென்றான். (உ௬)

வேதபாரகனவ்வுரைசெய்தலும்விமலன்
ஆதிநாயகன்பெயரன்றியான்பிறிதறியேன்
ஓதவேண்டுவதில்லையென்னுணர்வினுக்கொன்றும்
போதியாததுமில்லையென்றிவையிவைபுகலும். (உ௭)

தொல்லைநான்மறையாவையுந்துணிபொருட்கெல்லாம்
† எல்லைகொண்டவனகம்புகுந்திடங்கொண்டதென்னுள்
இல்லைவேறினிப்பெரும்பதம்யானறியாத
வல்லையேலினியோதுவிநீதியின்வழாத. (உ௮)

ஆரைச்சொல்லுவதந்தணாருமறையறிந்தோர்
ஓரச்சொல்லுவதெப்பொருளுபநிடதங்கள்
தீரச்சொல்லுவதேவரும்முனிவருஞ்செப்பும்
பேரைச்சொல்லுவதல்லதுபிறிதுமொன்றுளதோ. (உ௯)

---

* வேதத்துச்சியின் மெய்ப்பொருள்பெயர் - ஹரியென்பது.

† எல்லைகொண்டவன்-முடிபொருளாகநின்றுள்ளவன்.

வேதத்தானுநல்வேள்வியினனுமெய்யுணர்ந்த
போதத்தானுமப்புறத்துளவெப்பொருளானும்
சாதிப்பார்பெறும்பெரும்பதந்தலைக்கொண்டுசெமைந்தேன்
ஓதிக்கேட்பனபரம்பொருளினினுமொன்றுளதோ. (௧௦)

காடுபற்றியுங்கனவரைபற்றியுங்கலைத்தோல்
மூடுபற்றியுமுண்டித்துநீட்டியுமுறையால்
வீடுபெற்றவர்பெற்றதின்விழுமிதென்றுரைக்கும்
மாடுபெற்றனென்மற்றினியென்பெறவருந்தி. (௧௧)

செவிகளாற்பலகேட்கிலராயினுந்தேவர்க்
கவிகொளுன்மறையகப்பொருள்புறப்பொருளறிவார்
கவிகளாகுவார்காண்குவார்மெய்ப்பொருள்காலால்
புவிகொளுயகற்கடியவர்க்கடிமையிற்புக்கார். (௧உ)

எனக்குநான்முகத்தொருவற்கும்யாரினுமுயர்ந்த
தனக்கும்வேறுளசராசரமனைத்திற்குந்தலைவன்
மனக்குவந்தனன்வந்தனயாவையுமறையோய்
உனக்கு * மின்னதினல்லதொன்றில்லெனவுரைத்தான். (௧௩)

மாற்றம்யாதொன்றுமுரைத்திலன்மறையவன்மறுகி
ஏற்றமென்னெனக்கிறுதிவந்தெய்தியதென்னு
ஊற்றமில்லவனேடினன்கனகனையுற்றான்
தோற்றவந்ததோர்கனவுகண்டானெனச்சொன்னான். (௧௪)

எந்தைகேளெனக்கிம்மைக்குமறுமைக்குமியம்பச்
சிந்தையா † லிறைநினைத்தற்குமடாதனசெப்பி
முந்தையேநினைந்தென்பொருண்முற்றுமென்றுரைத்தான்
மைந்தனேதிலன்வேதமென்றுரைத்தனன்வணங்கி. (௧௫)

அன்னகேட்டவனந்தணவந்தணர்க்கடாத
முன்னர்யாவருமொழிதருமுறைமையிற்படாத
தன்னதுள்ளுடையுணர்ச்சியாற்புதுவதுதந்த
தென்னசொல்லவனியம்பியதியம்புதியென்றான். (௧௬)

அரசனன்னவையுரைசெயமறையவனஞ்சிச்
சிரதலங்கரஞ்சேர்த்திடச்செவித்தொளைசேர்ந்த
உரகமன்னசொல்யானுனக்குரைசெயினுரவோய்
நரகமெய்துவெனுவும்வெந்துகுமெனநவின்றான். (௧௭)

---

* இன்னதின் — இந்நமோநாராயணவென்பதின்.

† இறை — ஒருசிறிதும்.

கொணர்கென்மைந்தனைவல்விரைந்தென்றனன்கொடியோன்
உணர்வினெஞ்சினனேவலாற்கடிதினிேனுடிக்
கணனினெய்தினர்பணியெனத்தாதையைக்கண்டான்
* துணையிலான்றனைத்துணையெனவுடையவன்ருெழுதான். (௩அ)

தொழுதமைந்தனைச்சுடர்மணிமார்பிடைச்சுண்ணம்
எழுதவன்பினேடிறுகுறத்தழுவிமாடிருத்தி
முழுதுநோக்கிநீவேதியன்கேட்கலின்முனியப்
பழுதுசொன்னசொலன்னதுபகருதியென்றுன். (௩௯)

சுருதியாதியிற்ருெடங்குறுமெல்லையிற்சொன்ன
ஒருவன்யாவர்க்குநாயகன்றிருப்பெயருணரக்
கருதக்கேட்டிடக்கட்டுரைத்திடர்க்கடல்கடக்க
உரியமற்றிதினல்லதொன்றில்லெனவுரைத்தான். (௪0)

தேவர்செய்கையனங்ஙன்முறைசெயத்தீயோன்
தாவில்வேதியன்றக்கதேயுரையெனத்தகுவன்
ஆவதாகுகவன்றெனினறிகுவமென்றே
ஏவதவ்வுரைவிளம்புதிவிளம்புதியென்றுன். (௪௧)

† காமம்யாவையுந்தருவதுமப்பதங்கடந்தால்
சேமவீடுறச்செய்வதுஞ்செந்தழன்முகந்த
ஓமவேள்வியினுறுபதமுய்ப்பதுமொருவன்
நாமமன்னதுகேணமோநாராயணுய. (௪௨)

மண்ணினின்றுமேன்மலரயனுலகுறவாழும்
எண்ணில்பூதங்களிற்பனதிரிவனவிவற்றின்
உண்ணிறைந்துறைகாரணத்தினுங்குளவுணர்வின்
எண்ணுகின்றதிவ்வெட்டெழுத்தேபிறிதில்லை. (௪௩)

முக்கட்டேவனுநான்முகத்தொருவனுமுதலா
மக்கட்காறுமிம்மந்திரமறந்தவர்மறந்தார்
புக்குக்காட்டுவதரிதிதுபொதுவுறக்காண்பார்
ஒக்கநோக்கினரல்லவரதனிலையுணரார். (௪௪)

தோற்றமென்னுமத்தொல்வினைத்தொடுகடற்சுழிநின்
றேற்றுநன்கலனருங்கலன்யாவர்க்குமினிய
மாற்றமங்கலமாதவவேதத்தின்வரம்பின்
தேற்றமெய்ப்பொருடெரிந்தமற்றிதனிலைசிறந்த. (௪௫)

உன்னுயிர்க்குமென்னுயிர்க்குமிவ்வுலகத்தினுள்ள
மன்னுயிர்க்குமீதுறுதியென்றுணர்வுறமதித்துச்

* துணையிலான் — ஒப்பற்றஸ்ரீஹரி.
† காமம் — சேதனரினிச்சை.

சொன்னவிப்பெயரென்றனனறிஞரிற்றூயான்
மின்னுயிர்க்கும்வேலிரணியன்றழலெழவிழித்தான். (௪௬)

அற்றைநாண்முதல்யானுளநாள்வரையப்பேர்
சொற்றவாயையுங்கருதியமனத்தையுஞ்சுடுமென்
ஒற்றையாணைமற்றியாருனக்கிப்பெயருரைத்தார்
கற்றதாரொடுசொல்லுதிவிரைந்தெனக்கனன்றான். (௪௭)

முனைவர்வானவர்முதலினர்மூன்றுலகத்தும்
இனையருள்ளவர்யாவருமென்னிருகழலே
நினைவதேத்துவதென்பெயர்நினக்கிதுநேர
அனையரஞ்சுவர்மைந்தநீயாரிடையறிந்தாய். (௪௮)

மறங்கொள்வெஞ்செருமலைகுவான்பன்முறைவந்தான்
கறங்குவெஞ்சிறைக்கலுழன்றன்கடுமையிற்கரந்தான்
பிறங்குதெண்டிரைப்பெருங்கடல்புக்கினம்பெயரா
துறங்குவான்பெயருறுதியென்றாருனக்குரைத்தார். (௪௯)

புரவைநுண்மணலெண்ணினுமெண்ணரும்பரப்பின்
குரவர்நங்குலத்துள்ளவரவன்கொலக்குறைந்தார்
அரவினாமத்தையெலியிருந்தோதினாலதற்கு
விரவுநன்மையென் * றுன்மதிவிளம்பெனவெகுண்டான். (௫0)

வயிற்றினுள்ளுலகேழினோடேழையும்வைக்கும்
அயிர்ப்பிலாற்றலென்னநுசனையேனமொன்றாகி
எயிற்றினாலெறிந்தின்னுயிருண்டவனுமம்
பயிற்றவோநினைப்பயந்ததுநானெனப்பகர்ந்தான். (௫௧)

ஒருவன்யாவர்க்குமேவற்றிற்குமுலகிற்குமுதல்வன்
தருதல்காத்தலைதவிர்த்தலென்றிவைசெய்தக்கோன்
கருமத்தாலன்றிக்காரணத்தாலுள்ளகாட்சி
திருவிலீமற்றிதெம்மறைப்பொருளெனத்தெரிந்தாய். (௫௨)

ஆதியந்தங்களிதனின்மற்றில்லைபேருணரின்
வேதமெங்ஙனமங்ஙனமவைசொன்னவிதியால்
கோதினல்வினைசெய்தவருயர்குவர்குறித்துத்
தீதுசெய்தவர்தாழ்குவரிதுமெய்ம்மைதெரியின். (௫௩)

செய்தமாதவமுடைமையினரியயன்சிவனென்
றெய்தினார்பதமிழந்தனர்யான்றவமியற்றிப்
பொய்யினாயகம்பூண்டவினினியிதுபுரிதல்
நொய்யதாகுமென்றாருமென்காவலினுழைவார். (௫௪)

* துன்மதி-துன்மதியே.

வேள்வியாகியபுண்ணியந்தவத்தொடும்விலக்கிக்
கேள்வியாவையுந்தவிர்த்தனெனிவைகிளர்பகையைத்
தாழ்வியாதனசெய்யுமென் றனையவர்தம்பால்
வாழ்வியாதயலெவ்வழிப்புறங்கொண்டுவாழ்வார். (ருரு)

பேதைப்பிள்ளைநீபிழைத்ததுபொறுத்தனென்பெயர்த்தும்
ஏதில்வார்த்தைகளினையனவிளம்பலைமுனிவன்
யாதுசொல்லினனவையவையிதமெனவெண்ணி
ஓதி * போர்தியென்றுரைத்தனனுலகெலாமுயர்ந்தோன். (ருசு)

வேறு.

உரையுளதுணர்த்துவதுணர்ந்துகோடியேல்
விரையுளவலங்கலாய்வேதவேள்வியின்
கரையுளதியாவருங்கற்குங்கல்வியின்
பிரையுளதென்பதுமைந்தன்பேசினன். (ருஎ)

வித்தின்றிவிளைவதொன்றில்லைவேந்தநின்
பித்தின்றியுணர்தியேலளவைப்பெய்தனன்
உய்த்தொன்றுமொழிவின்றியுணர்தற்பாற்றெனுக்
† கய்த்தொன்றுநெல்லியின்கனியிற்காண்டியால். (ருஅ)

தன்னுளேயுலகங்களெவையுந்தந்தவை
தன்னுளேநின்றுதானவற்றுட்டங்குவான்
பின்னிலன்முன்னிலனொருவன்பேர்இலன்
தொன்னிலையொருவராற்றுணியற்பாலனே. (ருகூ)

சித்தெனவருமறைச்சிரத்திற்றேறிய
தத்துவமவனதுதம்மைத்தாமுணர்
வித்தகரறிகுவர்வேறுவேறுணர்
பித்தருமுளர்சிலர்வீடுபெற்றிலார். (சுO)

‡ அளவையானளப்பரிதறிவினப்புறத்
துளவையாயுபநிடதங்களோதுவ
கிளவியாற்பொருள்களாற்கிளக்குறாதவன்
களவையாரறிகுவார்மெய்ம்மைகண்டிலார். (சுக)

மூவகையுலகுமாய்க்குணங்கண்மூன்றுமாய்
யாவையுமெவையுமாயெண்ணில்வேறுபட்
டோவலினொருநிலையொருவன்செய்வினை
தேவருமுனிவருமுணரத் ¶ தேயுமோ. (சுஉ)

* ஓதி-ஓதுதி. போர்தி-போவாயாக.
† கய்த்து-கையினிடத்து.
‡ அளவையான்-காண்டல்கருதலாதிய காட்சி அவைகளால்.
¶ தேயுமோ-குறைவுறுமோ.

* சாங்கியம் † யோகமென்றிரண்டுதன்மைய
வீங்கியபொருளெலாம்வேறுகாண்பன
ஆங்கவையுணர்ந்தவர்க்கன்றியன்னவன்
ஓங்கியமேனியையுணரற்பாலதோ. (சுங)

கருமமுங்கருமத்தின்பயனுங்கண்ணிய
தருமுதற்றலைவனுந்தானுந்தானவன்
அருமையும்பெருமையுமறிவரேலவர்
இருமையென்றுரைசெயுங்கடலினின்றேறுவார். (சுச)

மந்திரமாதவமென்னுமாலைய
தந்துறுபயனிவைமுறையிற்சாற்றிய
நந்தலிறெய்வமாய்நல்குநான்மறை
அந்தயில்வேள்விமாட்டவிசுமாமவன். (சுரு)

முற்பயப்பயன்றருமுன்னினின்றவர்
பிற்பயப்பயன்றரும்பின்புபோலவன்
தற்பயன்முன்னெறிதருமமில்லையஃ
தற்புதமாயையாலறிகிலார்பலர். (சுசு)

ஒருவினையொருபயனன்றியுய்க்குமோ
இருவினையென்பவையியற்றியிட்டவை
கருதினகருதினகாட்டுகின்றன
தருபரனருளினிற்சான்றுவேண்டுமோ. (சுஎ)

ஓராவுதிகடைமுறைவேள்வியோம்புவோர்
அராவணையமலனுக்களிப்பராலது
சராசரமனைத்தினுஞ்சாருமென்பது
பராவருமறைப்பொருள்பயலுமன்னதால். (சுஅ)

பகுதியினுட்பயன்பயந்ததன்னதின்
மிகுதியின்மிகுதிகளவையுமேலவர்
வகுதியின்வசத்தனவரவுபோக்கது
புகுதியில்லாதவர்புலத்திற்றுகுமோ. (சுகூ)

எழுத்தியனுளத்தினெண்ணலாவகை
முழுத்தனிநான்முகன்முதலமற்றுயிர்
வழுத்தரும்பொகுட்டதோர்புரையின்வைகுமால்
விழுத்தனிப்பல்லிதழ்விரையிலாமுகிழ். (எ0)

கண்ணினுங்கரந்துளன்கண்டுகாட்டுவான்
உண்ணிறைந்திடுமுணர்வாகியுண்மையால்

---

* சாங்கியம்-கபிலமதம்.

† யோகம்-பதஞ்சலிமதம்.

மண்ணினும்வானினுமற்றைமூன்றினும்
எண்ணினுநெடியவனொருவனெண்ணிலான். (எக

சிந்தையிற்செய்கையிற்சொல்லிற்சேர்ந்துளன்
இந்தியந்தொறுமுளனுற்றதெண்ணினல்
முந்தையோரெழுத்தெனவந்துமும்முறைச்
சந்தியும்பதமுமாய்த்தழைத்ததன்மையான். (எஉ

காமமும்வெகுளியுமுதலகண்ணிய
தீமையும்வன்மையுந்தீர்க்குஞ்செய்கையால
நாமமுமவன்பிறநலிகொடாநெடுஞ்
சேமமும்பிறர்களாற்செப்பற்பாலவோ. (எங

காலமுங்கருவியுமிடனுமாய்க்கடைப்
பாலமைபயனுமாய்ப்பயன்றுய்ப்பானுமாய்
சீலமுமவைதருந்திருவுமாயுளன்
ஆலமும்வித்துமொத்தடங்குமாண்மையான். (எச

உள்ளுறவுணர்வினிதுணர்ந்தவோசையோர்
தெள்விளியாழிடைத்தெரியுஞ்செய்கையான்
உள்ளுளன்புறத்துளனென்றுநண்ணலான்
தள்ளருமறைகளு * மருளுந்தன்மையான். (எரு

ஓமெனுமோரெழுத்ததனினுள்ளுயிர்
ஆமவனறிவினுக்கறிவுமாயினன்
தாமமூவுலகமுந்தழுவிச்சார்தலால்
† தூமமுங்கனலும்போற்றொடர்ந்ததோற்றத்தான். (எசு

காலையினறுமலரொன்றக்கட்டிய
மாலையின்மலர்புரைசமயவாதியர்
சூலையின்றிருக்கலாற்சொல்லுவோர்க்கெலாம்
வேலையுந்திரையும்போல்வேறுபாடிலான். (எஎ

இன்னதோர்தன்மையனிகழ்வுற்றெய்திய
நன்னெடுஞ்செல்வமுநாளுநாமற
மன்னுயிரிழத்தியென்றிறைஞ்சிவாழ்த்தினேன்
சொன்னவனுமமென்றுணரச்சொல்லினன். (எஅ

வேறு.

எதிரினின்றவனிவையுரைத்திடுதலுமெவ்வுலகமுமஞ்ச
முதிரும்வெங்கதமொழிகொடுமூண்டதுமுதுகடற்கடுவேய்ப்பக்

---

* மருளுந்தன்மையான் - தன்னிலைபுணராது மயங்கத்தக்க தகுதி
யினையுடையான்.

† தூமம் - புகை.

கதிரும்வானமுஞ்சுழன்றனநெடுநிலங்கம்பித்தகனகன்கண்
உதிரங்கான்றனதோன்றினபுகைக்கொடியுமிழ்ந்ததுகொடுந்தீயே. (எகூ)

வேறுமென்னொடுதெரும்பகைபிறிதினிவேண்டலென்வினையத்தால்
ஊறியென்னுளேயுதித்ததுகுறிப்பினியுணர்குவதுளதன்றால்
ஈறிலென்பெரும்பகைஞனுக்கன்புசாலடியென்யானென்கின்றான்
* கோறிரென்றனனென்றலும்பற்றினர்கூற்றினுங்கொலைவல்லார். ()

குன்றுபோன்மணிவாயிலின்பெரும்புறத்துய்த்தனர்மழுக்கூர்வாள்
ஒன்றுபோல்வனவாயிரமீதொடுத்தோச்சினருயிரோடும்
தின்றுதீர்குதுமென்குநருருமெனத்தெழித்தனர்சினவேழக்
கன்றுபுல்லியகோளரிக்குழுவெனக்கனல்கின்றதறுகண்ணார். (அக)

தாயின்மன்னுயிர்க்கன்பினன்றனையத்தவமெனுந்தகவில்லோர்
ஏயெனுந்துணைமாத்திரத்தெய்தனவெறிந்தனவெறிதோறும்
தூயவன்றனைத்துணையெனவுடையவவ்வொருவனைத்துன்னுதார்
வாயின்வைதனவொத்தன † வத்துனைமழுவொடுகொலைவாளும். (அஉ)

எறிந்தவெய்தனவெற்றினகுத்தினவீர்த்தனபடையாவும்
முறிந்தநுண்பொடியாயினமுடிந்தனமுனிவிலான்முழுமேனி
சொறிந்ததன்மையுஞ்செய்திலவாயனதூயவன்றுணிவொன்றா
அறிந்தநாயகன்சேவடிமறந்திலனயர்த்திலனவனுமம். (அங)

உள்ளவான்பெரும்படைக்கலம்யாவையுமுக்கனவுரவோய்நின்
பிள்ளைமேனிக்கோரானிவந்திலதினிச்செயலென்கொல்பிறிதென்னக்
கள்ளவுள்ளத்தன்கட்டினன்கருவிகள்கதுமெனக்கனல்பொத்தித்
தள்ளுமின்னெனவுரைத்தனன்வயவருமத்தொழிற்றலைநின்றார். (அச)

குழியிலிந்தனமடுக்கினர்குன்றெனக்குடந்தொறுங்கொணரெண்ணெய்
இழுதுநெய்சொரிந்திட்டனர்நெருப்பெழுந்திட்டதுவிசும்பெட்ட
அழுதுநின்றவரயர்வுறவ்வயனைப்பெய்தனரரீஇயென்று
தொழுதுநின்றனனாயகன்றாளிணைகுளிர்ந்ததுசுடுதீயே. (அரு)

காலவெங்கனல்கதுவியகாலையிற்கற்புடையவள்சொற்ற
சீலநல்லுரைசீதமிக்கடுத்தலிற்கிழியொடுநெய்தீற்றி
ஆலமன்னவர்கரங்களால்வயங்கெரிமடுத்தலிலநுமன்றன்
‡ கூலமாமெனவென்புறக்குளிர்ந்ததக்குருமணித்திருமேனி. (அசு)

சுட்டதில்லைநின்றோன்றலைச்சுடர்க்கனல்சுழிபடரழுவத்துள்
இட்டபோதினுமென்னினிச்செயத்தக்கதென்றனரிகல்வெய்யோர்
கட்டித்தீயையுங்கடுஞ்சிறையிடுமினக்கள்வனைக்கவர்ந்துண்ணை
எட்டுப்பாம்பையும்விடுமின்களென்றனனெரியெழுதறுகண்ணன். (அஎ)

---

* கோறிர்-கொல்லுதிர். † அத்துனை-அவ்வளவு.
‡ கூலம்-வால்.

அநந்தனேமுதலாகியநாகங்களருளென்கொலெனவன்னான்
நினைந்தமாத்திரத்தெய்தினவொய்தினினெருப்புகுபகுவாயால்
வனைந்ததாமன்னமேனியினுன்றன்மேல்வாளெயிறுறவூன்றிச்
சினந்தமீக்கொளக்கடித்தனதுடித்திலன்றிருப்பெயர்மறவாதான். (அஅ)

பக்கநின்றவைபயத்தினிற்புயற்கறைப்பசும்புனல்பகுவாயில்
கக்கவெஞ்சிறைக்கலுழனுநடுக்குறகவ்வியகாலத்துள்
செக்கர்மேகத்துச்சிறுபிறைநுழைந்தனசெய்கையவலிசிந்தி
உக்கபற்குலமொழுகினவெயிற்றிரும் * புரைதொறுமமிழ்துறி. (அக)

வேறு.

சூழப்பற்றினசுற்றுமெயிற்றின்
போழக்கிற்றிலவென்றுபுகன்றான்
வாழித்திக்கின்மயக்கின்மதந்தாழ்
வேழத்துக்கிடுமின்னெனவிட்டான். (கo)

† பசையிற்றங்கலில்சிந்தையர்பல்லோர்
திசையிற்சென்றனர்செப்பினனென்னும்
இசையிற்றந்தனனிந்திரனென்பான்
விசையிற்றிண்பணைவெஞ்சினவேழம். (௬க)

கய்யிற்கால்களின்மார்புகழுத்தில்
தெய்வப்பாசமுறப்பிணிசெய்தார்
மய்யற்காய்கரிமுன்னுறவைத்தார்
பொய்யற்றானுமிதொன்றுபுகன்றான். (கஉ)

எந்தாய்பண்டொரிடங்கர்விழுங்க
முந்தாய்நின்றமுதற்பொருளேயென்
றுந்தாய்தந்தையினத்தவனேத
வந்தாயென்றன்மனத்தினனென்றான். (கங)

என்றாமுன்னமிருங்களிறுந்தன்
பொன்றோரோடைபொருந்தநிலத்தின்
அன்னைத்தொழுதஞ்சியகன்ற
தொன்றாரத்திறமெய்தியுரைத்தார். (கச)

‡ வல்வீரைத்துயில்வானைமதித்தென்
நல்வீரத்தையழித்ததுநண்ணாற்
றால்வீரொற்றையுரக்கரிதன்னைக்
கொல்வீரென்றனனெஞ்சுகொதிப்பான். (கரு)

---

* புரைதொறும்-துவாரந்தோறும்.

† பசையில்தங்கலில்-இரக்கமற்ற.

‡ வல்வீரை-பெரியசமுத்திரம்.

தன்னைக்கொல்லுநர்சாருதலோடும்
பொன்னைக்கொல்லுமொளிப்புகழ்பொய்யா
மன்னைக்கொல்லியவந்ததுவாரா
மின்னைக்கொல்லும்வெயிற்றினெயிற்றால். (௯௬)

வீரத்திண்டிறன்மார்பினில்வெண்கோ
டாரக்குத்தியழுத்தியநாகம்
வாரத்தண்குலைவாழைமடற்சூழ்
ஈரத்தண்டெனவிற்றனவெல்லாம். (௯௭)

வெண்கோடிற்றனமெய்யிலர்செய்யும்
கண்கோடற்பொறியிற்கடிதேகி
எண்கோடற்கரிதென்னவெகுண்டா
திண்கோடைக்கதிரிற்றெறுகண்ணான். (௯௮)

தள்ளத்தக்கில்பெருஞ்சயிலத்தோ
டெள்ளக்கட்டியெடுத்துவிசித்துக்
கள்ளத்திங்கிவனைக்கரைகாணு
வெள்ளத்துய்த்திடுவீரெனவிட்டான். (௯௯)

ஒட்டிக்கொல்லவுணர்ந்துவெகுண்டான்
விட்டிட்டானலனென்றுவிரைந்தார்
கட்டிக்கல்லொடுகால்விசையிற்போய்
இட்டிட்டார்கடலின்னடுவெந்தாய். (௧௦௦)

நடுவொக்குந்தனிநாயகனும்மம்
விடுகிற்கின்றிலனுகலின்வேலை
மடுவொத்தங்கதின்வங்கமுமன்றாய்க்
* குடுபத்தன்மையதாயதுகுன்றம். (௧௦௧)

மோதுற்றார்திரைவேலையின்மூழ்கான்
மீதுற்றார்சிலைமீதுகிடந்தான்
ஆதிப்பண்ணவனுயிரநாமம்
ஓதுற்றான்மறையொல்லையுணர்ந்தான். (௧௦௨)

தலையிற்கொண்டதடக்கையினன்றன்
நிலையிற்றீர்வின்மனத்தினினைந்தான்
சிலையிற்றிண்புனலிற்சினையாலின்
இலையிற்பிள்ளையெனப்பொலிகின்றான். (௧௦௩)

---

* உடுபத்தன்மையதாயது-ஓடத்தின்றன்மையால் மிதந்துநின்றது.

வேறு.

அடியாரடியேனெனுமார்வமலால்
ஒடியாவலியானுடையேனுளனோ
கொடியாய்குறியாய்குணமேதுமிலாய்
நெடியாயடியேனிலைநேர்குதியோ. (௧0௪)

கள்ளந்திரிவாரவர்கைதவநீ
உள்ளந்தெரியாதவுனக்குளவோ
துள்ளும்பொறியின்னிலைசோதனைதான்
வெள்ளந்தருமின்னமுதேதவிதியோ. (௧0௫)

வருநான்முகனைம்முகன்வானவர்கோன்
திருநான்மறையின்னெறியேதிரிவார்
பெருநாடெரிகின்றிலர்பேதைமையேன்
ஒருநாளுனையெங்ஙனமுள்ளுவனோ. (௧0௬)

செய்யாதனவோவிலைதீவினைதான்
பொய்யாதனவந்துபுணர்ந்திடுமால்
மெய்யேயுயிர்தீர்வதொர்மேல்வினைநீ
அய்யாவொருநாளுமயர்த்தனையோ. (௧0௭)

ஆயப்பெறுநன்னெறிதம்மறிவென்
றேயப்பெறுமீசர்களெண்ணிலரால்
நீயப்புறநிற்கநினைக்கிலர்நின்
மாயப்பொறிபுக்குமயங்குவரால். (௧0௮)

தாமேதனிநாயகராயெவையும்
போமேபொருளென்றபுராதனர்தாம்
யாமேபரமென்றனரென்றவர்க்
* காமேபிறர்நின்னலதாருளரே. (௧0௯)

ஆதிப்பரமாமெனிலன்றெனலாம்
ஓதப்பெருநூல்களுலப்பிலவால்
பேதிப்பனநீயவைபேர்கிலையால்
வேதப்பொருளேவிளையாடுதியோ. (௧௧0)

அம்போருகனாரனாதியார்
எம்போலியரெண்ணிடினென்பலவாக்
கொம்போடடைபூக்கனிகாயெனினும்
வம்போமரமொன்றெனும்வாசகமே. (௧௧௧)

ஆகும் — ஆகுமா ஆகாது.

நின்னிற்பிறிதாய்நிலையிற்றிரியா
தன்னிற்பிறிவாயினதானறமும்
உன்னிற்பிறிதாயினவோவுலகம்
பொன்னிற்பிறி * தாகியபொற்கலனே. (கக௨)

தாய்தந்தையெனுந்தகைவந்தனைதான்
நீய்தந்தனைநீயுறுநெஞ்சினனன்
நோய்தந்தவனேநுவநீர்வுமெனு
வாய்தந்தனசொல்லிவணங்கினனல். (ககரு)

அத்தன்மையறிந்தவருந்திறலோன்
உய்த்துய்ம்மினென்முன்னெனவுய்த்தனரால்
பித்துண்டதுபேர்வுறுமாபெறுதும்
கைத்துங்கநெஞ்சினெனக்கனலா. (ககச)

இட்டார்கவெல்விடமெண்ணுடையான்
தொட்டானுகரத்தொகைவன்கசையிற்
கட்டார்கமெத்திகைகண்கொடியோன்
விட்டானவன்மேலவர்வீசினரால். (ககரு)

வெய்யார்முடிவில்லவர்வீசியபோ
துய்யானெனும்வேலையினுள்ளுறைவோன்
கய்யாயிரமல்லகணக்கிலவென்
றெய்யாவுலகியாவையுமெண்ணினவால். (ககசு)

ஊனேடுயிர்வேறுபடாவுபயம்
தானேயுடையன்றனிமாயையினல்
யானேயுயிருண்பலெனக்கனலா
வானேழுநடுங்கிடவந்தனனல். (ககஎ)

வந்தானைவணங்கியென்மன்னுயிர்தான்
எந்தாய்கொளவெண்ணினையேலிதுதான்
† உந்தாரியதன்றுலகியாவுமுடன்
தந்தார்கொளநின்றதுதானெனலும். (ககஅ)

வேறு.

எவரேயுலகந்தந்தாரென்பெயரேத்திவாழும்
மூவரேயல்லராகின்முனிவரேமுழுதுந்தோற்ற
தேவரேபிறரேயாரேசெப்புதிதெரியவென்றான்
கோவமூண்டெழுந்துங்கொல்லான்காட்டுமேற்காட்சிகொள்வான். ()

* ஆகிய—வினை.

† உந்தாரியதன்று-நும்வழிப்பட்டதன்று.

உலகுதந்தானும்பல்வேறுயிர்கடந்தானுமுள்ளுற்
றலைவிலாவுயிர்கடோறுமங்கங்கேயுறைகின்றானும்
மலரினில்வெறியுமெள்ளிலெண்ணெயுமற்றுங்கேளாய்
அலகிறொல்புகழும்பற்றிமுற்றியவரிகாணத்தா. (௧௨0)

என்கணானோக்கிக்காண்டற்கெங்குமுளன் * காணெந்தை
உன்கணானன்பிற்சோறலுறுகோளென்றுணரகில்லாய்
நின்கணானோக்கிக்காண்டற்கெளியனோநினக்குப்பின்னோன்
பொன்கணானாவியுண்டபுண்டரீகக்கணம்மான். (௧௨௧)

மூன்றவன்குணங்கள்செய்கைமூன்றவனுருவமூன்று
மூன்றுகண்சுடர்கள்சோதிமூன்றுதன்னுலகமூன்று
தோன்றலுமிடையுமீறுந்தொடங்கியபொருள்கட்கெல்லாம்
சான்றவனிதுவேவேதமுடிவதுசரதமென்றான். (௧௨௨)

என்றலுமவுணர்வேந்தனெயிற்றரும்பிலங்கநக்கான்
ஒன்றலில்பொருள்கட்கெல்லாமொருவன்புக்குறைவனென்றாய்
நன்றதுகண்டுபின்னர்நல்லவாபுரிதுதூணில்
நின்றுளதென்னிற்கள்வநிரப்புதிநிலைமையென்றான். (௧௨௩)

சாணினுமுளனோர்தன்மையணுவினைச்சதகூறிட்ட
கோணினுமுளன்மாமேருக்குன்றினுமுளனிந்நின்ற
தூணினுமுளன்முன்சொன்னசொல்லினுமுளனித்தன்மை
காணுதிவிரைவினென்றானன்றெனக்கனகன்சொன்னான். (௧௨௪)

உம்பர்க்குமுனக்குமொத்திவ்வுலகெங்கும்பரந்துளானைக்
கம்பத்தின்வழியேகாணக்காட்டுதிகாட்டிடாயேல்
கும்பத்தின்கரியைக் † கொண்மாக்கொன்றெனநின்னைக்கொன்றுன்
செம்பொத்தகுருதிதேக்கியுடலையுந்தின்பெனென்றான். (௧௨௫)

என்னுயிர்நின்னாற்கோறற்கெளியதொன்றன்றியான்முன்
சொன்னவன்றொட்டதொட்டவிடந்தொறுந்தோன்றானாயின்
என்னுயிர்யானேமாய்ப்பல்பின்னும்வாழ்வுகப்பலென்னின்
அன்னவற்கடியேனல்லேனென்றனனறிவின்மிக்கான். (௧௨௬)

நரசிங்காவதாரம்.

நசைதிறந்திலங்கப்பொங்கிநன்றுநன்றென்னநக்கு
விசைபிறந்துருமுவீழ்ந்ததென்னவோர்தூணின்வென்றி
இசைதிறந்தமர்ந்தகையாலெற்றினனெற்றலோடும்
திசைதிறந்தண்டங்கீறிச்சிரித்ததுசெங்கட்சீயம். (௧௨௭)

---

* காண் — முன்னிலையசை.

† கொண்மா — சிங்கம்.

நாடிநான் றருவெனென் றநல்லறிவாளனும்
தேடிநான்முகனுங்காணாச்சேயவன்சிரித்தலோடும்
ஆடினனழுதான்பாடியரற்றினன்சிரத்திற்செங்கை
சூடினன்றொழுதானோடியுலகெலாந் * துகைத்தான்றுள்ளி. (கஉஅ)

ஆரடாசிரித்தாய்சொன்னவரிகொலோவஞ்சிப்புக்க
நீரடாபோதாதென்றுநெடுந்தறிநேடினாயோ
போரடாபொருதியாயிற்புறப்படுபுறப்படென்றான்
பேரடாநின்றதாளோடுலகெலாம்பெயரப்போவான். (கஉகூ)

பிளந்தது தூணுமாங்கேபிறந்ததுசீயம்பின்னை
வளர்ந்ததுதிசைகளெட்டும்பகிரண்டமுதலமற்றும்
அளந்ததப்புறத்துச்செய்கையாரறிந்தறையகிற்பார்
கிளர்ந்தது † ககனமுட்டைகிழிந்ததுகீழுமேலும். (கஙo)

மன்றலந்துளபமாலைமானுடமடங்கல்வானில்
சென்றதுதெரிதறேற்றாஞ்சேவடிபடியிற்றீண்டி
நின்றதோர்பொழுதினண்டநெடுமுகட்டிருந்தமுன்னோன்
அன்றவனுந்திவந்தானுமெனத்தோன்றினானால். (கஙக)

எத்துணைபோதுங்கையென்றியம்பினாலெண்ணற்கேற்ற
வித்தகருளரேயந்தத்தானவர்விரிந்தசேனை
பத்துநூறமைந்தகோடிவெள்ளத்தாற்பகுதிசெய்த
அத்தனைகடலுமாளத்தனித்தனியள்ளிக்கொண்ட. (கஙஉ)

ஆயிரங்கோடிவெள்ளத்தயிலெயிற்றவுணர்க்கங்கங்
கேயினவொருவர்க்கோரோர்திருமுகமிரட்டிப்பொற்றோள்
தீயெனக்கனலுஞ்செங்கண்சிரந்தொறுமூன்றுந்தெய்வ
வாயினிற்கடல்களேழுமலைகளுமற்றுமுற்றும். (கஙங)

முடங்குவாருளையவண்டமுழுவதுமுடிவினுண்ணும்
கடங்கொள்வெங்காலச்செந்தீயதனைவந்தழிக்குங்கால
மடங்கலினுயிர்ப்புமற்றக்காற்றினைமாற்றுமானால்
அடங்கலும்பகுவாயாக்கையப்புறத்தகத்ததம்மா. (கஙச)

‡ குயிற்றியவண்டங்குஞ்சையிட்டிலாமுட்டைமுட்டப்
பயிற்றியபருவமொத்தகாலத்துளமுதுபல்கும்
எயிற்றுவன்பகுவாயுள்புக்கிருக்குநரிருக்கையெய்தி
வயிற்றின்வந்தநாளிந்நாள்வாழுமன்னுயிர்கண்மன்னோ. (கஙரு)

---

*1 துகைத்தான்-மிதித்தான். † ககனமுட்டை-அண்டமுகடு.

‡ குயிற்றிய - தான்செய்த. அண்டம்-அண்டமாகிய. குஞ்சையிட்டிலாமுட்டை-குஞ்சுபொரிக்காத முட்டை.

நன்மையிற்றொடர்ந்தார்க்குண்டோகேடுநான் * முகத்தோனாதி
† தொன்மையிற்றொடர்ந்தவாய்மையறத்தொடுந்தொடர்ந்திலோரை
அன்வயித்தோருந்தீயவவுணரல்லாரையந்நாள்
தன்வயிற்றகத்துவைத்துத்தந்ததச்சியந்தாயின். (௧௩௬)

பேருடையவுணர்தம்மைப்பிறையெயிற்றடக்கும்பேராப்
பாரிடைத்தேய்க்குமீளப்பகிரண்டத்தடிக்கும்பற்றி
மேருவிற்புடைக்குமாளவிரல்களிற்பிசையும்வேலை
நீரிடைக்குமிழியூட்டுநெருப்பிடைச்சுரிக்கநீட்டும். (௧௩௭)

வகிர்ப்படுத்தூரக்கும்பற்றிவாய்களைப்பிளக்கும்வன்றோல்
துகிற்படுத்துரிக்குஞ்செந்தீக்கண்களைச்சூலுஞ்சுற்றிப்
பகிர்ப்படக்குடரைக்கொய்யும்பசையறப்பிசையும்பல்கா
லுகிர்ப்புரைபுக்கோர்தம்மையுகிர்களாலுறக்குமூன்றி. (௧௩௮)

யானையுந்தேருமாவும்யாவையுமுயிரிராமை
ஊனொடுந்தின்னும்பின்னையொலிதிரைப்பரவையேழும்
மீனொடுங்குடிக்குமேகத்துருமொடும்விழுங்கும்விண்ணில்
தானொடுங்காதென்றஞ்சித்தருமமுஞ்சலித்ததம்மா. (௧௩௯)

ஆழிமால்வரையோடெற்றுஞ்சிலவரையண்டகோளச்
சூழிருஞ்சுவரிற்றேய்க்குஞ்சிலவரைத்துளக்கில்குன்றம்
ஏழினோடெற்றிக்கொல்லுஞ்சிலவரையெட்டுத்திக்கும்
தாழிருட்பிழம்பிற்றேய்க்குஞ்சிலவரைத்தடக்கைதாக்கி. (௧௪0)

மலைகளிற்புரண்டுவீழவள்ளுகிர்நுதியால்வாங்கித்
தலைகளைக்கிள்ளுமள்ளித்தழலெழப்பிசையுந்தக்க
கொலைகளிற்கொல்லும் ‡ வாங்கியுயிர்களைக்குடிக்கும்வான
நிலைகளிற்பரக்கவேலைநீர்களைநிரம்பத்தூர்க்கும். (௧௪௧)

முப்புறத்துலகத்துள்ளுமொழிவறமுற்றும்பற்றித்
தப்புதலின்றிக்கொன்றுதையலார்கருவுந்தள்ளி
இப்புறத்தண்டத்தியாருமவுணரில்லாமையெற்றி
அப்புறத்தண்டந்தோறுந்தடவினசிலகையம்மா. (௧௪௨)

கனகனு § மவனில்வந்தவானவர்களைகணென
அநகனுமொழியப்பல்வேறவுணரானவரையெல்லாம்
நினைவதன்முன்னங்கொன்றுநின்றதந்நெடுங்கட்சீயம்
வினைகழலவனுமற்றமடங்கலின்வரவுநோக்கி. (௧௪௩)

* நான்முகத்தோனாதி-பிரமன்முதலாக.
† தொன்மையிற்றொடர்ந்துவந்த-புராதனமாக ஒட்டிவந்த.
‡ வாங்கி-எடுத்து.
§ அவனில்வந்த-அவனிடத்துமகனாகவந்த.

வயிரவாளுறையின்வாங்கிவானகமறைக்கும்வட்டச்
செயிரறுகிடும்பற்றிவானவருள்ளந்தீய
அயிர்படர்வேலையேழுமலைகளுமஞ்சவார்த்தங்
குயிருடைமேருவென்னவாய்மடித்துருத்துநின்றான். (கசச)

நின்றவன்றன்னைநோக்கிநிலையிதுகண்டுநீயும்
ஒன்றுமுன்னுள்ளத்தியாதுமுணர்ந்திலைபோலுமன்றே
வன்றொழிலாழிவேந்தைவணங்குதிவணங்கவேயுன்
புன்றொழில்பொறுக்குமென்றானுலகெலாம் * புகழநின்றான். (கசரு)

கேளிதுநீயுங்காணக்கிளர்ந்தகோளரியின்கேழில்
தோளொடுதாளுநீக்கிநின்னையுந்துணித்துப்பின்னென்
வாளினைத்தொழுவதல்லால்வணங்குதன்மகளீருடல்
நாளினுமுளதோவென்னாவண்டங்கணங்கநக்கான். (கசசு)

நகைசெயாவாயுங்கையும்வாளொடுநெடந்ததாளும்
புகைசெயாநெடுந்தீப்பொங்கவுருத்தெதிர்பொருந்தப்புக்கான்
தொகைசெய்வார்க்கரியதோளாற்றான்களாற்சுற்றிச்சூழ்ந்தான்
மிகைசெய்வார்வினைகட்கெல்லாமேற்செயும்வினையம்வல்லான். (கசஎ)

இரணிய சிங்கப்போர்.

இருவரும்பொருந்தப்பற்றியெவ்வுலகுக்குமேலாய்
ஒருவருங்காணாவண்ணமுயர்ந்ததற்குவமைவேண்டின்
வெருவருதோற்றத்தஞ்சாவெஞ்சினவவுணன்மேரு
அருவரையொத்தானண்ணலல்லவையெல்லாமொத்தான். (கசஅ)

ஆர்ப்பொலிமுழக்கின்வெவ்வாய்வள்ளுகிர்ப்பாரமான்ற
ஏற்றருங்கரத்திற்பல்வேறெறிதிரைப்பரப்பினுற்ற
பாற்கடல்பரந்துபொங்கிப்பங்கயத்தொருவனாட்டின்
மேற்சென்றதொத்தான்மாயன்கனகனுமேருவொத்தான். (கசகூ)

வாளொடுதோளுங்கையுமகுடமுமலரோன்வைத்த
நீளிருங்ககனமுட்டைநெடுஞ்சுவர்தேய்ப்ப † நேமி
கோளொடுந்திரிவதென்னக்குலமணிக்கொடும்பூண்மின்னத்
தாளிணையிரண்டும்பற்றிச்சுழற்றினன்றடக்கையொன்றால். (கரு0)

சுழற்றியகாலத்திற்றூங்குகுண்டலங்கணீங்கிக்
கிழக்கொடுமேற்கினொடுவிழுந்தனகிடந்தவின்றும்
அழற்றருகதிரோன்றோன்றுமுதயத்தோடத்தமான
நிழற்றருங்காலைமாலைநெடுமணிச்சுடரினீத்தம். (கருக)

* புகழநின்றான்-பிரகலாதாழ்வான்.

† நேமி-சக்கரவாளகிரி.

போன்றனவினையதன்மைபொருவியதினையதென்று
தான்றனியொருவன்றன்னையுரைசெயுந்தரத்தினோ
வான்றருவள்ளல்வெள்ளைவள்ளுகிர்வயிரமார்பின்
ஊன்றலுமுதிரவெள்ளம்பரந்துளதுலகமெங்கும். (௧௫௨)

இரணியனைக் கொல்லுதல்.

ஆயவன்றன்னைமாயனந்தியினவன்பொற்கோயில்
வாயிலின்மணிக் * கவான்மேல்வயிரவாளுகிரின்வாயில்
மீயெழுகுருதிபொங்கவெயில்விரிவயிரமார்பு
தீயெழப்பிளந்துநீக்கித்தேவர்களிடுக்கண்டீர்த்தான். (௧௫௩)

முக்கணனெண்கணனுமுளரியாயிரக்கணனும்
திக்கணந்தேவரோடுமுனிவரும்பிறருந்தேடிப்
புக்கநாடறிகுறாமற்றிரிகின்றார்புகுந்துமொய்த்தார்
எக்கணற்காண்டுமெந்தையுருவமென்றிரங்கிநின்றார். (௧௫௪)

நோக்கினார்நோக்கினார்முன்னோக்குறுமுகமுங்கையும்
ஆக்கையுந்தாளுமாகியெங்கணுந்தானேயாகி
வாக்கினன்மனத்தினன்மற்றறிவினலளக்கவாரா
மேக்குயர்சீயந்தன்னைக்கண்டனர்வெருவுகின்றார். (௧௫௫)

பல்லொடுபல்லுக்கெல்லையாயிரகாதப்பத்தி
சொல்லியவதனங்கோடிகோடிமேல்விளங்கித்தோன்ற
எல்லையிலுருவிற்றாகியிருந்ததையெதிரநோக்கி
அல்லியங்கமலத்தண்ணலவன்புகழ்விரிப்பதானான். (௧௫௬)

வேறு.

பிரமதேவன் உக்கிரநரசிங்கத்தை துதித்தல்.

தன்னைப்படைத்ததுவுந்தானேயெனுந்தன்மை
பின்னைப்படைத்ததுவேகாட்டும்பெரும்பெருமை
உன்னைப்படைத்தாய்நீயென்றாலுயிர்படைப்பான்
என்னைப்படைத்தாய்நீயெனுமிதுவுமெற்றாமோ. (௧௫௭)

பல்லாயிரகோடியண்டம்பணிக்கடலுள்
நில்லாதமொக்குளெனத்தோன்றுமாநின்னுழையே
எல்லாவுருவமுமாய்நின்றகாலிவ்வுருவம்
வல்லேபடைத்தால்வரம்பின்மைவாராதோ. (௧௫௮)

பேரையொருபொருட்கேபல்வகையாற்பேர்த்தெண்ணும்
தாரைநிலையைதமியைபிறரில்லை

* கவான்மேல் — தொடைமீது.

யாரைப்படைக்கின்றதியாரையளிக்கின்ற
தியாரைத்துடைக்கின்றதையாவறியேமால். (கஙகூ)

நின்னுளேயென்னைநிரும்பித்தாய் * நீயல்லா
தென்னுளேயெப்பொருளும்யாவரையும்யானீன்றேன்
பின்னிலேன்முன்னிலேனெந்தைபெருமானே!
பொன்னுளேதோன்றியதோர்பொற்கலனேபோல்கின்றேன். (கசு0)

என்றாங்கியம்பியிமையாதவெண்கணனும்
வன்றாண்மழுவோனும்யாரும்வணங்கினரால்
நின்றாரிருமருங்குநேமிப்பெருமானும்
ஒன்றாதசீற்றத்தையுள்ளேயொடுக்கினான். (கசுக)

† எஞ்சுமுலகனைத்துமிப்பொழுதேயென்றென்று
நெஞ்சுநடுங்குநெடுந்தேவரைநோக்கி
அஞ்சன்மினென்னாவருள்சுரந்தநோக்கினால்
கஞ்சமலர்பழிக்குங்கையபயங்காட்டினான். (கசுஉ)

பூவிற்றிருவையழகின்புனைகலத்தை
யாவர்க்குஞ்செல்வத்தைவீடெனுமின்பத்தை
ஆவித்துணையையமுதிற்பிறந்தாளைத்
தேவர்க்குந்தம் ‡ மோயையேவினார்பாற்செல்ல. (கசுங)

செந்தாமரைப்பொகுட்டிற்செம்மாந்துவீற்றிருக்கும்
நந்தாவிளக்கைநறுந்தாழிளங்கொழுந்தை
முந்தாவுலகுமுயிருமுறைமுறையே
தந்தாளைநோக்கினான்றன்னொப்பொன்றில்லாதான். (கசுச)

தீதிலாவாகவுலகீன்றதெய்வத்தைக்
காதலாளுக்கினான்கண்டமுனிக்கணங்கள்
ஓதினார்சீர்த்தியுயர்ந்தபரஞ்சுடரும்
நோதலாங்கில்லாதவன்பனையேநோக்கினான். (கசுரு)

பிரகலாதாழ்வானை நரசிங்கப்பெருமாள் புகழ்தல்.

உந்தையையுன்முன்கொன்றுடலைப்பிளந்தளையச்
சிந்தைதளராதநம்பிழையாச்செய்கையாய்
அந்தமிலாவன்பென்மேல்வைத்தாயளியத்தாய்
எந்தையினியிதற்குக்கைம்மாறியாதென்றான். (கசுசு)

¶ அயிராவிமைப்பினையோராயிரங்கூறிட்ட
செயிரிலொருபொழுதினுந்தையையாஞ்சீறி

* நீயல்லாது — உன்னையன்றி. † எஞ்சும் — அழியும்.
‡ மோய் — அன்னை. ¶ அயிரா — ஓய்ந்துநில்லாத.

உயிர்நேடுவேபோலுடலையக்கண்டும்
செயிர்சேராவுள்ளத்தாய்க்கென்னினியாஞ்செய்கேம். (௧௬௭)

கொல்லேமினியுன்குலத்தோரைக்குற்றங்கள்
எல்லையிலாதனசெய்தாரேயென்றாலும்
நல்லேமுனக்கெம்மைநாணுமனுன்செய்வ
தொல்லையுளதேலியம்புதியாலென்றுரைத்தான். (௧௬அ)

முன்புபெறப்பெற்றபேறேமுடிவில்லை
பின்புபெறும்பேறுமுண்டோபெறுகுவெனேல்
என்புபெறாதவிழிபிறவியெய்திடினும்
அன்புபெறுகையரும்பேறெனக்கென்றான். (௧௬௯)

அன்னானைநோக்கியருள்சுரந்தநெஞ்சினனாய்
என்னானைவல்லேலெனமகிழ்ந்தபேரீசன்
முன்னானபூதங்கள்யாவையுமுற்றிடினும்
எந்நாளுமுலவாய்நீ * யென்போலுமையென்றான். (௧௭0)

மின்னைத்தொழுவனைத்ததன்னமினிரொளியாய்
முன்னைத்தொழும்புனக்கேயாமன்றேமூவுலகும்
என்னைத்தொழுதேத்தியெய்தும்பயனெய்தி
உன்னைத்தொழுதேத்தியுய்கவுலகெல்லாம். (௧௭௧)

எனவர்க்குவேண்டினெளிதன்றேவெற்கன்பர்
ஆனவர்க்கமெல்லாநினக்கன்பராயினார்
தானவர்க்குவேந்தனீயென்னுந்தரத்தாயோ
வானவர்க்குநீயேயிறைதொன்மறைவல்லோய். (௧௭௨)

நல்லறமுமெய்ம்மையுநான்மறையுநல்லருளும்
எல்லையின்ஞானமுமீறிலாவெப்பொருளும்
தொல்லைசாலெண்குணனுநின்சொற்றொழில்செய்க
வல்லவுருவொளியாய்நாளுவளர்கநீ. (௧௭௩)

பிரகலாதாழ்வானுக்கு முடிசூட்டுதல்.

என்றுவரமருளியெவ்வுலகுங்கைகூப்ப
முன்றின்முரசமுழங்கமுடிசூட்டி
நின்றவமரரைவீருநேர்ந்திவனுக்
கொன்றுபெருமையுரிமைபுரிகென்றான். (௧௭௪)

† தேமனுரிமைபுரியத்திசைமுகத்தோன்
ஓமமியற்றவுடையான்முடிசூட்டக்

* என்போலுமை என்றது – தனது நித்தியத்துவத்தை விளக்கி நின்றது.

† தேமன் – இந்திரன்.

கோமன்னவனுகிமூவுலகுங்கைக்கொண்டான்
நாமமறையோதாதோதிநனியுயர்ந்தான். (௧௭௫)

ஈதாகுமுன்னிகழ்ந்ததெம்பெருமானென்மாற்றம்
யாதானுமாகநினையாதிகழ்தியேல்
தீதாய்விளைதனனிதிண்ணமெனச்செப்பினான்
மேதாவிகட்கெல்லாமேலாயமேன்மையான். (௧௭௬)

௩-வது, இரணியன்வதைப்படலம் — முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩0அ.

---

## ௪-வது, விபீடணனடைக்கலப்படலம்.

இராவணன் விபீடணன்மீது கோபங்கொள்ளுதல்.

கேட்டனனிருந்துமக்கேள்விதேர்கலாக்
கோட்டியசிந்தையனுறுதிகொண்டிலன்
மூட்டியதீயெனமுடுகிப்பொங்கினான்
ஊட்டரக்கூட்டியவனையவொண்கணான். (௧)

இரணியனென்பவனெம்மனோரினும்
முரணியனவன்றனைமுருக்கிமுற்றினான்
அரணியனென்றவற்கன்புபூண்டனை
மரணமென்றொருபொருண்மாற்றும்வன்மையோய். (௨)

ஆயவன்வளர்த்ததன்றாதையாகத்தை
மாயவன்கல்லியமகிழ்ந்தமைந்தனும்
ஏயுநம்பகைஞனுக்கினியநண்புசெய்
நீயுமேநிகர்பிறர்நிகர்க்கநேர்வரோ. (௩)

* பாழிசாலிரணியன்புதல்வன்பண்பெனச்
சூழ்வினைமுற்றியானவர்க்குத்தோற்றபின்
ஏழைநீயென்பெருஞ்செல்வமெய்திப்பின்
வாழவோகருத்ததுவரவற்றாகுமோ. (௪)

முன்புறவனையர்பானண்புமுற்றினை
† வன்பகைமனிசரின்வைத்தவன்பினை

* பாழிசால் — வன்மைமிக்க.
† வன்பகை — கொடியபகையினையுடைய.

என்புறவுருகுதியழுதியேத்துதி
உன்புகலவர்பிறிதுரைக்கவேண்டுமோ. (௫)

நண்ணினமனிசரைநண்புபூண்டனை
எண்ணினைசெய்வினையென்னைவெல்லுமா
றுன்னினையரசின்மேலாசையூன்றினை
திண்ணிதுன்செயல்பிறர்செறுநர்வேண்டுமோ. (௬)

வேறு.

அன்றுவானரம்வந்துநஞ்சோலையையழிப்பக்
கொன்றுதின்றிடுமின்னெனத்தூதரைக்கோறல்
வென்றியன்றெனவிலக்கினைமேல்விளைவெண்ணித்
துன்றுதாரவற்றுணையெனக்கோடலேதுணிந்தாய். (௭)

வேறு.

அஞ்சினையாதலினமர்க்குமாளலை
தஞ்செனமனிசர்பால்வைத்தசார்பினை
வஞ்சனைமனத்தினை * பிறப்புமாற்றினை
நஞ்சினையுடன்கொடுவாழ்தனன்றரோ. (௮)

பழியினையுணர்ந்தியான்படுக்கிலேனுனை
ஒழிசிலபுகலுதலொல்லைநீங்குதி
விழியெதிர்நிற்றியேல்விளிதியென்றனன்
அழிவினை † யெய்துவானறிவுநீங்கினான். (௯)

என்றலுமிளவலுமெழுந்துவானிடைச்
சென்றனன்றுணைவருந்தானுஞ்சிந்தியா
நின்றனன்பின்னருநீதிசான்றன
ஒன்றலபலபலவுறுதியோதினான். (௧0)

வாழியாய்கேட்டியால்வாழ்வுகைம்மிக
ஊழிகாண்குறுநினதுயிரையோர்கிலாய்
கீழ்மையோர்சொற்கொடுகெடுதனேர்தியோ
வாழ்மைதானநம்பிழைத்தவர்க்குமாகுமோ. (௧௧)

புத்திரர்குருக்கணின்பொருவில்கேண்மையர்
மித்திரரடைந்துளோர்மெலியர்வன்மையோர்
இத்துணைபேரையுமிராமன்வெஞ்சரம்
சித்திரவதஞ்செயக்கண்டுதீர்தியோ. (௧௨)

* பிறப்புமாற்றினை-அரக்கர்குலவியற்கையையொழித்தனை.
† எய்துவான்-எய்துதற்கு.

பேய்விளிப்பநடிப்பனபெட்புறும்
தீய்விளிப்புறுதீபங்கர்த்தவால். (கடுரு)

நெய்கொள்சோரிநிறைந்தநெடுங்கடல்
அய்யவாடையளன்னசெந்தாளினள்
வய்யமங்கைபொலிந்தனண்மங்கலச்
செய்யகோலம்புனைந்தன்னசெய்கையாள். (கடுசு)

உப்புத்தேனுநெய்யொண்டயிர்பால்கரும்
பப்புத்தானென்றுரைப்பனவாழிகள்
துப்புப்போற்குருதிப்புனல்சுற்றலால்
தப்பிற்றவ்வுரையின்றோர்தனுவினே. (கடுஎ)

ஒன்றுமேதொடைகோலொருகோடிகள்
சென்றுபாய்வனதிங்களிளம்பிறை
அன்றுபோலெனவாகியதச்சிலை
என்றுமாள்வரெதிர்த்தவிராக்கதர். (கடுஅ)

வேறு

எடுத்தவரிரைத்தவரெரிந்தவரெதிர்ந்தவர்மறங்கொடெடுதிரே
தடுத்தவர்சலித்தவர்சரிந்தவரிருந்தவர்தனிக்களிறுபோல்
கடுத்தவர்கலித்தவர்கறுத்தவர்செறுத்தவர்கலந்துசரமேல்
தொடுத்தவர்துணிந்தவர்தொடர்ந்தனர்கிடந்தனர்துரந்தகணையால். ()

தொடுப்பதுசுடர்ப்பகழியாயிரநிரைத்தவைதுரந்துதுறைபோய்ப்
படுப்பதுவயப்பகழியாயிரரையன்றுபதினுயிரவரைக்
கடுப்பதுகருத்துமதுகட்புலன்மனங்கருதல்கையினயில்வேல்
எடுப்பதுபடப்பொருவதன்றியவர்செய்வதொருநன்றியுளதோ. (கசo)

தூசியொடுநெற்றியிருகையினெடுபேரணிகடைக்குழைதொகுத்
தூசிநுழையாவகைசரத்தணிவகுக்குமவையுண்ணுமுயிரை
ஆசைகளையுற்றுருவுமப்புறமுமோடுமெதனிப்புறமுளார்
ஈசனெதிருற்றுகுவதல்லதிகன்முற்றுவதொர்கொற்றமெவனே. (கசக)

ஊனகுவடிக்கணைகளூழியனலொத்தனவுலந்தவுலவைக்
கானகநிகர்த்தனரரக்கர்மலையொத்தனகளித்தமதமா
மானவன்வயப்பகழிவீசுவலையொத்தனவளைப்புனலுள்வாழ்
மீனகுலமொத்தனகடற்படையினத்தொடும்விளிந்துறுதலால். (கசஉ)

ஊழியிறுதிக்கடுகுமாருதமுமொத்தனனிராமனுடனே
பூழியெனவுக்குதிருமால்வரைகளொத்தனரரக்கர்பொருதார்
ஏழுலகுமுற்றுயிர்கள்யாவையுமுருக்கியிறுதிக்கணின்வரும்
ஆழியையுமொத்தனனம்மன்னுயிருமொத்தனரலைக்குநிருதர். (கசங)

மூலமுதலாயிடையுமாயிறுதியாயெவையுமுற்றுமுறலும்
காலமெனலாயினனிராமனவ்வரக்கர்கடைநாளில்விளியும்
கூலமில்சராசரமனைத்தினையுமொத்தனர்குரைக்கடலெழும்
ஆலமெனலாயினனிராமனவர்மீனமெனலாயினர்களால். (௧௪௪)

வஞ்சவினைசெய்துநெடுமன்றில்வளனுண்டெரிபொய்க்குமறமார்
நெஞ்சமுடையோர்கள்குலமொத்தனரரக்கரறனுக்குநெடியோன்
நஞ்சநெடுநீரினையுமொத்தனனடுத்ததனைநக்குநரையும்
பஞ்சமுறுநாளில்வறியோர்களையுமொத்தனரரக்கர்படுவார். (௧௪௫)

வெள்ளமொருநூறொடிருநூறுபடும்வேலையினிலங்கைவெளியும்
பள்ளமொடுமேடுதெரியாதவகைசோர்குருதியம்பியெழலும்
உள்ளுமதிளும்புறமுமொன்றுமறியாதலறியோடினர்களால்
கள்ளநெடுமான்விழியரக்கியர்கலக்கமொடுகோல்கள்குலைவார். (௧௪௬)

நூறுகோடி சேனாதிபர்கள் ராமனொடுபொருதல்.

நீங்கினர்நெருங்கினர்முருங்கினருலைந்துலகினீளுமலைபோல்
வீங்கினர்பெரும்பிணம்விசும்புறவசும்புபடுசோரிவிரிவுற்
றோங்கினனெடும்பரவையொத்துயரவெத்திசையுமுற்றெதிருறத்
தாங்கினபடைத்தலைவர்நூறுசதகோடியர்தடுத்தலரியார். (௧௪௭)

தேருமதமாவும்வரையாளியொடுவாசிமிகுசீயமுதலா
ஊருமவையாவையுநடாயினர்கடாயினர்களுந்தினர்களால்
காருமுருமேறுமெரியேறுநிகர்வெம்படையொடம்புகடிதின்
தூரும்வகைதூயினர்துரந்தனர்களெய்தனர்தொடர்ந்தனர்களால். ()

வம்மினடவம்மினெதிர்வந்துநமதாருயிர்வரங்கள்பிறவும்
தம்மினெனவின்னனமொழிந்தெதிர்பொழிந்தனதடுப்பரியவாம்
வெம்மினெனவெம்பகழிவேலையெனவேயினனவ்வெய்யவினையோர்
தம்மினமனைத்தையுமுனைக்கெதிர்தடுத்தனதனித்தனியரோ. (௧௪௯)

இப்போரெவ்வாறுமெனச் சிவனைத் தேவர்வினாதல்.

அக்கணையயக்கணமறுத்தனர்செறுத்திகலரக்கரடரப்
புக்கணையலுற்றனர்மறைத்தனர்புயற்கதிகம்வாளிபொழிவார்
திக்கணைவகுத்தனரெனச்செலநெருக்கினர்செருக்கின்மிகையால்
முக்கணனையுற்றடிவணங்கியிமையோரிவைமொழிந்தனர்களால். (௧௫0)

படைத்தலைவருற்றொருவர்மும்மடியிராவணனெனும்படிமையோர்
கிடைத்தனரவர்க்கொருகணக்கிலைவளைத்தனர்கிளர்ந்துலகெலாம்
அடைத்தனர்தெழித்தனரழித்தனர்தனித்துளனிராமனவரே
துடைத்தனரெம்வெற்றியெனவுற்றனரினிச்செயல்பணித்திசுடரோய்.

எய்தகணையெய்துவதன்முன்பிடையறுத்திவர்களேழுலகமும்
பெய்தகணைமாமுகிலெனப்புடைவளைத்தனர்பிடித்தனர்கள்போல்
வய்தகலினல்லதுமறப்படைகொடிப்படைகடக்கும்வலிதான்
செய்ததிருமாலுடனுனக்குமரிதென்றனர்திகைத்துவிழுவார். (கறுஉ)

சிவன் இராமனை வெல்வாரெனை ஆறுதல் கூறுதல்.

அஞ்சியயரன்மினவரெத்தனையராயிடினுமத்தனைவரும்
பஞ்சியெரியுற்றதெனவெந்தழிவரிந்தவுரைபண்டுமுளதால்
நஞ்சமமிழ்தத்தைநனிவென்றிடினுநல்லறநடக்குமதனை
வஞ்சவினைபொய்க்கருமம்வெல்லினுமிராமனையம்மாயர்கடவார். (கறுங)

அரக்கருளரார்சிலரவ்வீடணனலாதுலகிறுவியுடையார்
இரக்கமுளதாகினதுநல்லறமெழுந்துவளர்கின்றதினிநீர்
கரக்கமுழைமுதேடியுழல்கின்றிலிர்களின்றெருகடும்பகலிலே
குரக்கின்முதனுயகனையாளுடையகோளுழுவைகொல்லுமிவரை. (கறுச)

என்று * பரமன்பகரநான்முகனுமன்னபொருளேயிசைதலும்
நின்றுநிலையாறினர்கள்வானவருமானவனுநேமியெனலாத்
துன்றுநெடுவாளிமழைமாரியினுமேலனதுரந்துவிரைவில்
குன்றகுலமால்வரைகண்மானுதலைமாமலைகுவித்தனனரோ. (கறுரு)

வேறு.

மகரமறிகடலின்வளையும்வயநிருதர்
சிகரமனையவுடல்சிதறியிறுவருயிர்
பகரவரியபதம்விரவவமரர்பழ
நகரமிடமருகநவையர்நலிவுபட. (கறுசு)

உகளுமிவுளிதலைதுமியவுறுகழல்கள்
தகளியுறவலியதலைகளறுதலைவர்
துகளினுடல்கள்விழவுயிர்கள்சுரருலகின்
மகளிர்வனமுலைகடமுவியகமகிழ. (கறுஎ)

மலையுமறிகடலும்வனமுமுறுநிலமும்
உலைவிலமரருறையுலகுமுயிர்களொடு
தலையுமுடலுமிடைதழுவுதவழ்குருதி
அலையுமரியதொருதிசையுமிலதருகு. (கறுஅ)

இனையசெருநிகழுமளவினெதிர்பொருத
வினையமுடைமுதல்வரெவருமுடன்விளிய
அனையபடைநெளியவமரர்சொரிமலர்கள்
நனையவிசையினெழுதுவலைமழைநலிய. (கறுகூ)

---

* பரமன் — சிவன்.

இரியலுறுபடையைநிருதரிடைவிலகி
எரிகள்சொரியுநெடுவிழியரிழுதையர்கள்
திரிகதிரிகவெனவுரறுதெழிகுரலர்
கரிகளரிகள்பரிகடிதினெதிர்கடவ. (௧௯0)

உலகுசெவிடுபடமழைகளுதிரவுயர்
அலகின்மலைகுலையவமரர்தலையதிர
இலகுதொடுபடைகளிடியொடுருமனைய
விலகியதுதிமிரம்வளையும்வகைவிளைய. (௧௯௧)

அழுகிதழுகிதெனவழகனுவகையொடு
பழகுமதிதியரையெதிர்கொள்பரிசுபட
விழைகுமெதிரவெதிரெதிர்கொள்விரிபகழி
மழைகண்மழைசொரியவமரர்மலர்சொரிய. (௧௯௨)

தினகரனையனையகொடிகடிசையடைவ
சினவுபொருபரிகள்செறிவவனுகவுயர்
அனகனுமெமரின்முடுகியெதிரவெழு
கனகவரைபொருவுகதிர்கொண்மணியிரதம். (௧௯௩)

பாறுபடுசிறகுகழுகுபகழிபட
நீறுபடுமிரதநிரையினுடறவிர
வேறுபடர்படரவிரவிசுடர்மலைய
மாறுபடவுலகின்மலைகளளறுபட. (௧௯௪)

அருகுகடறிரியவலகின்மலைகுலைய
உருகுசுடர்களிடைதிரியவுரனுடைய
இருகையொருகளிறுதிரியவிடுகுயவர்
திரிகையெனவுலகுமுழுதுமுறைதிரிய. (௧௯௫)

சிவனுமயனுமெழுதிகிரியமரர்பதி
அவனுமமரர்குலமெவருமுனிவரொடு
கவனமுறுகரணமிடுவர்கழுகினமும்
நமனும்வரிகிலையுமறனுநடனவில. (௧௯௬)

தேவர்திரிபுவனநிலையர்செருவிறல
ஏவரறிவுறுவரிறுதிமுதலறிவின்
மூவர்தலைகள்பொதிரெறிவரறமுதல்வ
பூவைநிறவவெனவேதமுறைபுகழ. (௧௯௭)

எய்யுமொருபகழியேழுகடலுமிடு
வெய்யகளிறுபரியாளொடிரதம்விழ

ஒய்யவொருகதியினோடவுணரமரர்
கய்கனெனவவுணர்கால்கள்கதிகுலைய. (கசுஅ)

அண்ணல்விடுபகழியானையிரதமயல்
பண்ணுபுரவிபடைவீரர்தொகுபகுதி
புண்ணினிடுகுறிகள்புள்ளியெனவிரைவின்
எண்ணுவனவனையவெல்லையினினுழைய. (கசுகூ)

வே று.

சுருக்கமுற்றதுபடைசுருக்கத்தாலினிக்
கரக்கமுற்றொருபுறத்தென்னுங்கண்ணினால்
அரக்கருக்கன்றுசெல்வரியதாம்வகை
சரக்கொடுநெடுமதில்சமைத்திட்டானரோ. (கஎ0)

மாலியைமாலியவானைமால்வரை
போலுயர்கயிடனைமதுவைப்போன்றுளார்
சாலிகையாக்கையர்தணிப்பில்வெஞ்சர
வேலியைக்கடந்திலருலகைவென்றுளார். (கஎக)

மாண்டனர்மாண்டனர்மற்றுளோரெலாம்
மீண்டனரொருதிசையேழுவேலையும்
மூண்டறமுருங்கியவூழிக்காலத்தில்
தூண்டுறுசுடர்சுடச்சுருங்கித்தொக்கபோல். (கஎ௨)

புரஞ்சுடுகடவுளும்புள்ளின்பாகனும்
அரஞ்சுடுகுலிசவேலமரர்வேந்தனும்
உரஞ்சுடுகிற்கிலரொருவனுமுடை
வரஞ்சுடும்வலிசுடும்வாழுநாள்சுடும். (கஎ௩)

ஆயிரவெள்ளமுண்டொருவராழிசூழ்
மாயிருஞாலத்தைமறிக்கும்வன்மையோர்
மேயினபெரும்படையதனையோர்விலால்
ஏயெனுமாத்திரத்தெய்துகொன்றனன். (கஎச)

இடைபடும்படாதனவிமைப்பிலோர்படை
புடைபடுவலங்கொடுவிலங்கிப்போகுமால்
படைபடுங்கோடியோர்சரத்திறற்பழிக்
கடைபடுமரக்கர்தம்பிறவிக்கட்டமால். (கஎரு)

பண்டுலகுய்த்தவனோடும்பண்ணமை
குண்டையின்பாகனும்பிறருங்கூடினார்
அண்டர்கள்விசும்பினின்றார்க்கின்றாருழைக்
கண்டிலமிவனெடுமாயக்கள்வனால். (கஎசு)

கொன்றனனினியொருகோடிகோடிமற்
றன்றெனிற்பதுமமன்றுயின்வெள்ளமா
நின்றதுநின்றினிநினைவதென்பிற
ஒன்றெனநினைகெனவன்னியோதினான். (க௭௭)

விழித்துமோவிராவணன்முகத்துமீண்டியாம்
பழித்துமோநம்மைநாம்படுத்தலஞ்சினும்
அழித்துமோர்பிறப்புறுநெறிசென்றண்மயாம்
கழித்துமிவ்யாக்கையைப்புகழைக்கண்ணுற. (க௭அ)

இடுக்கினிப்பெயர்ந்துரையெண்ணுவேமெனின்
அடுத்தகூர்வாளியினரணநீங்கலோம்
எடுத்தொருமுகத்திறலெய்தியாமினிக்
கொடுத்துநம்முயிரெனவொருமைகூறினான். (க௭௯)

இளக்கருநெடுவரையீர்க்குமாறெலாம்
அளக்கரிற்பாய்ந்தெனப்பதங்கமாரழல்
விளக்கினில்வீழ்ந்தெனவிதிகொண்டுந்தலால்
வளைத்திரைத்தடர்த்தனர்மலையின்மேனியார். (க௮௦)

மழுவெழுத்தண்டுகோல்வலயநாஞ்சில்வாள்
எழுவயிற்குலிசவேலீட்டிதோமரம்
கழுமுதற்கற்பணமுதலகைப்படை
தொழுவினிற்புலியனுனுடலிற்றூவினர். (க௮க)

இராமன் காந்தர்ப்பாத்திரம்விடுதல்.

காந்தருப்பம்மெனுங்கடவுண்மாப்படை
வேந்தருக்கரசனும்வில்லினூக்கினான்
பாந்தளுக்கரசெனப்பறவைக்கேறெனப்
போந்துருத்தனநெருப்பனையபோர்க்கணை. (க௮௨)

இராமன்விடுத்த அத்திரத்தின் உருவம்.

மூன்றுகண்ணமைந்தனவைம்முகத்தன
ஆன்றனநெய்கனல்புனலுமாடின
வான்றொடநிமிர்வனவாளிமாமழை
தோன்றினபுரஞ்சுடுமொருவன்றோற்றத்த. (க௮௩)

ஐயிருகோடியரரக்கர்வேந்தர்கள்
மொய்வலிவீரர்களொழியமுற்றுற
எய்யெனுமாத்திரத்தவிந்ததென்பரால்
செய்தவத்திராவணன்மூலச்சேனையே. (க௮௪)

மாப்பெருந்தீவுகளேழுமாதிரம்
பாப்பரும்பாதலத்துள்ளும்பல்வகைக்
காப்பருமலைகளும்பிறவுங்காப்பவர்
யாப்புறுகாதலரிராவணற்கவர். (கஅரு)

மாத்தடமேருவைவளைந்தவான்சுடர்
கோத்தகன்மார்பிடையணியுங்கொள்கையார்
பூத்தவிசுகந்தவன்புகன்றுபொய்யறு
நாத்தழும்பேறியவரத்தர்நண்ணினர். (கஅசு)

நம்முளீண்டொருவனைவெல்லுநன்கெனின்
வெம்முனையிராவணன்றனையும்வெல்லுமால்
இம்மெனவுடனெடுத்தெழுந்துசேறுமோ
செம்மையிற்றனித்தனிச்செய்துமோசெரு. (கஅஎ)

வேறு.

எல்லோமெல்லோமொன்றிவனைத்திந்நெடியோனை
வல்லோம்வல்லபோர்வளமுற்றிமலையோமேல்
வெல்லோம்வெல்லோமென்றனன்வன்னிமிடலோரும்
தொல்லோர்சொல்லேநன்றெனவஃதேதுணிவுற்றார். (கஅஅ)

அன்னார்தாமுமார்கலியேழுமெனவார்த்தார்
மின்னார்வானமிற்றுறுமென்றேவிளிசங்கம்
கொன்னேயூதித்தோள்புடைகொட்டிக்கொடுசேர்ந்தால்
என்னும்வையமென்படும்வானந்திசையெல்லாம். (கஅக)

ஆர்த்தாரன்னாரன்னகணத்தேயவராற்றல்
தீர்த்தானுந்தன்வெஞ்சிலைநாணைத்தெரிவுற்றான்
பேர்த்தான்பேர்த்தான்முற்றுமளந்தான்பிறழ்சங்கம்
ஆர்த்தாலொத்ததவ்வொலியெல்லாவுலகுக்கும். (ககо)

வேறு.

பல்லாயிரகோடியர்பல்கலைநூல்
வல்லாரவர்மெய்ம்மைவழுங்கவலார்
எல்லாவுலகங்களுமேறியபோர்
வில்லாளரரக்கரின்மேதகையார். (ககக)

வென்றாருலகங்களைவிண்ணவரோ
டொன்றாவுயர்தானவர்யூகமெலாம்
கொன்றார்நிமிர்கூற்றெனவெவ்வுயிரும்
தின்றாரெதிர்சென்றுசெறிந்தனரால். (ககஉ)

வளைத்தார்மதயானையைவன்றொழுவில்
தளைத்தாரெனவந்துதனித்தனியே

உளைத்தாருருமேறெனவொன்னலர்போர்
விளைத்தாரிமையோர்கள்வெதும்பினரால். (க௯௩)

விட்டெயவழங்கியவெம்படையில்
சுட்டெயுமிழ்ந்தசுடர்ச்சுடரும்
கட்டெயுமொருங்குகலந்தெழலால்
உட்டெயுறவெந்தனவேழுலகும். (க௯௪)

தேரார்ப்பொலிவீரர்தெழிப்பொலியும்
தாரார்ப்பொலியுங்கழுறுக்கொலியும்
போராற்சிலைநாணிபுடைப்பொலியும்
காரார்ப்பொலியுங்களிறார்ப்பொலியும். (க௯௫)

எல்லாருமிராவணனேயனையார்
வெல்லாவுலகில்லவர்மெய்வலியார்
தொல்லார்படைவந்துதொடர்ந்ததெனு
நல்லானுமுருத்தெதிர்நண்ணினனால். (க௯௬)

ஊழிக்கனல்போல்பவருந்தினபோர்
ஆழிப்படையம்பொடுமற்றகலப்
பாழிக்கடைநாள்விடுபன்மழைபோல்
வாழிச்சுடர்வாளிவழங்கினனால். (க௯௭)

சூரோடுதொடர்ந்தசுடர்க்கணைதான்
தாரோடகலங்கடிந்திடலும்
தேரோடுமடிந்தனர்செங்கதிரோன்
ஊரோடுமடிந்தனனைத்துரவோர். (க௯௮)

கொல்லோடுசுடர்க்கணைகூற்றினிணப்
பல்லோடுதொடர்ந்தனபாய்தலினால்
செல்லோடெழுமாமுகில்சிந்தினபோல்
வில்லோடும்விழுந்தமிடற்கரமே. (க௯௯)

செம்போடுதிரத்திரையாழியின்வாய்
வெம்போடரவக்குலமேனிமிரும்
கொம்போடும்விழுந்தனவொத்தகுறைந்
தம்போடுவிழுந்தவடற்கரமே. (உ00)

முன்னோடுதிரப்புனன்மூதுலகைப்
பின்னோடிவளைந்தபெருங்கடல்வாய்
மின்னோடும்விழுந்தனமேகமெனப்
பொன்னோடைநெடுங்கிரிபுக்கனவால். (உ0க)

மறவெற்றியரக்கர்வலக்கையொடும்
நறவக்குருதிக்கடல்வீழ்நகைவாள்
சுறவொத்தனமீதுதுடித்தெழலால்
இறவொத்தனவாவுமினப்பரியே. (உ0உ)

தாமச்சுடர்வாளிதடிந்தகலப்
பாமக்குருதிப்படிகின்றபடைச்
சேமப்படர்கேடகமால்கடல்சேர்
ஆமைக்குலமொத்தனவத்தனையால். (உ0ந)

காம்போடுபதாகைகள்காருதிரப்
பாம்போடுகெடற்படிவுற்றனவால்
வாம்போர்நெடுவாடைமலைந்தகலக்
கூம்போடுயர்பாய்கள்குறைந்தனபோல். (உ0ச)

மண்டப்படுசோரியின்வாரியின்வீழ்
கண்டத்தொகைகவ்வியகாலொடுதோள்
முண்டத்திரிதண்டின்முரட்டொருவன்
றுண்டச்சுறவொத்ததுடித்தனவால். (உ0ரு)

தெளிவுற்றபளிங்குறுசில்லிகொடேர்
விளிவுற்றுறவேறுறவீழ்வனதாம்
அளிமுற்றியசோரியின்வாரியினும்
ஒளிமுற்றியதிங்களையொத்துளவால். (உ0சு)

நிலைகோடலில்வென்றியரக்கரைநேர்
கொலைகோடலின்மன்குறிகோளுறுமேல்
சிலைகோடியதோறுசிரத்திரள்வன்
மலைகோடியின்மேலுமறிந்திடுமால். (உ0எ)

திண்மார்பின்மிசைச்செறிசாலிகையின்
கண்வாளிகடைச்செறிகானநுழைந்
தெண்வாயுறமொய்த்தனவின்னறையுற்
றுண்வாய்வரிவண்டினமொத்தனவால். (உ0அ)

பாறுகெளத்தொருவன்பகலின்
கூறுகியநாலிலொர்கூறிடையே
நூறாயினயோசனைநூழில்களம்
மாறாதுழல்சாரிகைவந்தனனால். (உ0க)

நின்றாருடனின்றுநிமிர்ந்தயலே
சென்றாரெதிர்சென்றுசிதைத்திடலால்

தன்றாதையையோர்வுறுதன்மகனேர்
கொன்றானிவனென்பதெனென்றுகொள்வார். (உகo)

இங்கேயுளனிங்குளனிங்குளனென்
றங்கேயுணர்கின்றவலந்தலைவாய்
வெங்கோபநெடும்படைவெஞ்சரம்விட்
டெங்கேனும்வழங்குவரேகுவரால். (உகக)

ஒருவன்னெனவுன்னுமுணர்ச்சியிலார்
இரவன்றிதுவோர்பகலென்பர்களால்
கரவன்றிதிராமர்கணக்கிலரால்
பரவைம்மணலிற்பலரென்பர்களால். (உகஉ)

ஒருவன்னொருவன்மலைபோலுயர்வோன்
ஒருவன்படைவெள்ளமொராயிரமே
ஒருவன்னொருவன்னுயிருண்டதலால்
ஒருவன்னுயிருண்டதுமுள்ளதுவே. (உகங)

தேர்மேலுளர்மாவொடுசெந்தறுகட்
கார்மேலுளர்மாகடன்மேலுளரிப்
பார்மேலுளரும்பர்பரந்துளரால்
போர்மேலரிராமர்புகுந்தடர்வார். (உகச)

என்னும்படியெங்கணுமெங்கணுமாய்த்
துன்னுஞ்சுழலுந்திரியுஞ்சுடரும்
பின்னும்மருகும்முடலும்பிரியான்
மன்னன்மகன்வீரர்மயங்கினரால். (உகரு)

வேறு.

படுமதகரிபரிசிந்தினபணிவரையிரதமலிந்தன
விடுதிசைசெவிடுபிளந்தனவிரிகடலளறுதெழுந்தன
அடுபுலியவுணர்தமங்கையரலர்விழியருவிகள்சிந்தின
கடுமணிநெடியவெனுஞ்சிலைகணகணகணவெனுந்தொறும். (உகசு)

வேறு.

ஊனேறுபடைக்கைவீரரெதிரெதிருருவந்தோறும்
கூனேறுசிலையுந்தானுங்குதிக்கின்றகடுப்பின்கோட்பால்
வானேறினார்கடேருமலைகின்றவயவர்தேரும்
* தானேறிவந்ததேரேயாக்கினன்றனியேறன்னான். (உகஎ)

காயிருஞ்சிலையொன்றேனுங்கணைப்புட்டிலொன்றதேனும்
தூயெழுபகழிமாரிமழைத்துளித்தொகையின்மேல

* தானேறிவந்ததேர் — தரை.

ஆயிரங்கைகள்செய்தசெய்தனவமலன்செங்கை
ஆயிரங்கையுங்கூடியிரண்டுகையாயவன்றே. (உக௮)

பொய்யொருமுகத்தனுகிமனிதனும்புணர்ப்பிதன்றால்
மெய்யுறவுணர்ந்தோம்வெள்ளமாயிரமிடைந்தசேனை
செய்யுறுவினையமெல்லாமொருமுகந்தெரிவதுண்டே
ஐயிருநூறுமல்லவநந்தமாமுகங்களம்மா. (உகக)

கண்ணுதன்மூர்த்திதானுநான்முகக்கடவுடானும்
எண்ணுதுந்தொடரவெய்தகோலெனவெண்ணலுற்றார்
பண்ணையால்வகுக்கமாட்டார்தனித்தனிப்பார்க்கலுற்றார்
ஒண்ணுமோகணிக்கவென்பாருவகையினுயர்ந்ததோளார். (உஉ0)

வெள்ளமீரைந்துநூறேனவிடுகணையவற்றின்மெய்யே
உள்ளவாறுளவாமென்றோருரைக்கணக்குணர்துமேனும்
கொள்ளையோருருவைநூறுகொண்டனபலவாற்கொற்ற
வள்ளலேவழங்கினனேயென்றனர்மற்றைவானோர். (உஉக)

குடைக்கெலாங்கொடிகட்கெல்லாங்கொண்டனகுவிந்தகொற்றப்
படைக்கெலாம்பகழிக்கெல்லாம்யானைதேர்பரிமாவாதிக்
கடைக்கெலாந்துரந்தவாளிக்கணித்ததிறகளவைகாட்டி
அடைக்கலாமறிஞர்யாரேயென்றனர்முனிவரப்பால். (உஉஉ)

கண்டத்துங்கழுத்துமீதாய்க்கபாலத்துங்கடக்கலுற்ற
சண்டப்போரரக்கர்தம்மைத்தொடர்ந்துகோல்புணருந்தன்மை
பிண்டத்திற்கருவாந்தன்பேருருக்களைப்பிரமன்றந்த
அண்டத்தைநிறையப்பெய்துகுலுக்கியதனையவான. (உஉ௩)

கோடியையிரண்டுதொக்கபடைக்கலமள்ளார்கூவி
ஓடியோர்பக்கமாகவுயிரிழந்துலத்தலோடும்
வீடிநின்றழிவதென்னேவிண்ணவர்படைகள்வீசி
மூடுதுமிவனையென்றியாவருமூண்டுமொய்த்தார். (உஉ௪)

தேவாஸ்திரப்பிரயோககண்டனம்.

விண்டுவின்படையேயாதிமேவயன்படையீறாகக்
கொண்டொருங்குடனேவிட்டார்குலுங்கியதமரர்கூட்டம்
அண்டமுங்கீழ்மேலாவாகியததனையண்ணல்
கண்டொருமுறுவல்காட்டியவற்றினையவற்றாற்காத்தான். (உஉ௫)

தானவைதொடுத்தபோதுதடப்பரிதுலகந்தானே
பூனனிவடவைத்தீயிற்புக்கெனப்பொரிந்துபோமென்
றூனதுதெரிந்தவள்ளலளப்பருங்கோடியம்பால்
ஏனையர்தலைகளெல்லாமிடியுண்டமலையினிட்டான். (உஉ௬)

மூலபல முற்றிலுமழிதல்.

ஆயிரவெள்ளத்தோருமகௌத்தவிந்துவீழ்ந்தார்
மாயிருஞாலத்தாடன்வன்பொறைப்பாரநீங்கி
மீயுயர்ந்தெழுந்தானன்றேவீங்கொலிவேலைநின்றும்
போயொருங்கண்டத்தோடுங்கோடியோசனைகள்பொங்கி. (உஉ௭)

வேறு.

ஆனையாயிரந்தேர்பதினாயிரமடர்பரியொருகோடி
சேனைகாவலராயிரம்பேர்படிற்செழுமணிக்கவந்தமொன்றாடும்
கானமாயிரமாயிரகோடிக்குக்கவின்மணிகணிலென்னும்
ஏனவம்மணியேழரைநாழிகையாடியதினிதன்றே. (உஉ௮)

வேறு.

நினைந்ததுமுடித்தேமென்னாவானவர்துயரநீத்தார்
புனைந்தனனென்வாகையென்னாவிந்திரனுவகைபூத்தான்
வினைந்தனவல்லவேதம்வரம்புபெற்றுயர்ந்தமாதோ
அனந்தனுந்தலைகளேந்தியயர்வுயிர்த்தவலந்தீர்ந்தான். (உஉ௯)

தேவாதிய ரிராமனை வாழ்த்துதல்.

தாய்படைத்துடையசெல்வமீகெனத்தம்பிக்கீந்து
வேய்படைத்துடையகானம்விண்ணவர்தவத்தின்மேவி
தோய்படைத்தொழிலால்யார்க்குந்துயர்துடைத்தானைநோக்கி
வாய்படைத்துடையாரெல்லாம்வாழ்த்தினார்வணக்கஞ்செய்தார். (உ௩0)

தீமொய்த்தவனையசெங்கணரக்கரைமுழுதுஞ்சிந்திப்
பூமொய்த்தகரத்தராகிவிண்ணவர்போற்றநின்றான்
பேய்மொய்த்தநரிகளீண்டிப்பெரும்பிணம்பிறங்கித்தோன்றும்
ஈமத்துட்டமியனின்றகறைமிடற்றிறைவனொத்தான். (உ௩௧)

* அண்டமர்க்களமும்வீந்தவரக்கரெவ்வுயிருமாகக்
கொண்டதோருருவந்தன்னாலிறுதிநாள்வந்துகூட
மண்டொண்மறித்துங்காட்டமன்னுயிரனைத்தும்வாரி
உண்டவன்றானேயானதன்னொருமூர்த்தியொத்தான். (உ௩உ)

தேவர் மலர்மழைபொழிதல்.

ஆகுலந்துறந்ததேவரள்ளினர்சொரிந்தவெள்ளச்
சேகறுமலருஞ்சாந்துஞ்செருத்தொழில்வருத்தந்தீர்க்க
மாகொலைசெய்தவள்ளல்வாளமர்க்களத்தைக்கைவிட்
டேகினனிளவலோடுமிராவணனேற்றகைம்மேல். (உ௩௩)

* அண்டமதளவவீந்த என்றும் பாடம்.

இவ்வழியியன்றவெல்லாமியம்பினுமிரிந்துபோன
தெவ்வழியாற்றல்வெற்றிச்சேனையின்செலவுஞ்சென்ற
வெவ்வழியரக்கர்கோமான்செய்கையுமிளையவீரன்
எவ்வமிலாற்றற்போருமுற்றுநாமியம்பலுற்றும். (உநச)

பெரும்படைத்தலைவர்யாரும்பெயர்ந்திலர்பெயர்ந்துபோய்நாம்
விரும்பினம்வாழ்க்கையென்றால்யாரிடைவிலக்கற்பாலார்
வரும்பழிதுடைத்தும்வானின்வைகுதும்யாமுமென்று
இருங்கடல்பெயர்ந்ததென்னத்தானையுமீண்டதிப்பால். (உநரு)

ந0-வது, மூலபலவதைப்படலம் — முற்றிற்று.

ஆ திருவிருத்தம் — நசஅக.

---

## நக-வது, வேலேற்றுப்படலம்.

சில்லியாயிரஞ்சில்லுளைப்பரியொடுஞ்செறிந்த
எல்லவாங்கதிர்மண்டிலமாறுகொண்டிமைக்குஞ்
செல்லுந்தேர்மிசைச்சென்றனன்றேவரைத்தொலைத்த
வில்லும்வெங்கணைப்புட்டிலுங்கொற்றமும்விளங்க. (க)

அரக்கர்சேனையோராயிரவெள்ளத்தையமரில்
துரக்கமானுடர்தம்மையென்றொருபுடைதுரந்து
வெருக்கொள்வானரச்சேனைமேற்றான்செல்வான்விரும்பி
இருக்குந்தேரொடும்போயவனிராவணனெதிர்ந்தான். (உ)

நூறுகோடிதேர்நொறிற்பரிநூறிருகோடி
யாறுபோன்மதமாகளிறையிருகோடி
ஏறுகோளுறுபதாதியுமிவற்றிவற்றிரட்டி
சீறுகோளரியேறனனுடனன்றுசென்ற. (ந)

மூன்றுவைப்பினுமப்புறத்துலகினுமுனையின்
என்றுகோளுறும்வீரர்கள்வம்மினென்றிசைக்கும்
ஆன்றபேரியுமதிர்குரற்சங்கமுமசனி
ஈன்றகாளமுமேழொடேழுலகமுமிசைப்ப. (ச)

அனையவாகியவரக்கர்க்குமரக்கனையவுணர்
வினையைவானவர்வெவ்வினைப்பயத்தினைவீரர்

நினையுநெஞ்சினைச்சுடுவதோர்நெருப்பினைநிமிர்ந்து
கனையுமெண்ணையுங்கடப்பதோர்கடலினைக்கண்டார். (ரு)

கண்டுகைகளோடணிவகுத்தருமுறழ்கழற்கள்
கொண்டுகூற்றமுநடுக்குறத்தோள்புடைகொட்டி
அண்டகோளங்களடுக்கழிந்துலைவுறவார்த்தார்
மண்டுபோரிடைமடிவதேநலனெனமதித்தார். (சு)

அசுரவானரயுத்தம்.

அரக்கன்சேனையுமாருயிர்வழங்குவானமைந்த
குரக்குவேலையுமொன்றொடொன்றெதிரெதிர்கோத்த
நெருக்கிநேர்ந்தனநெருப்பிடைபொடித்தனநெருப்பின்
உருக்குசெம்பெனவம்பரத்தோடினதுதிரம். (எ)

அற்றவன்றலையறுகுறையெழுந்தெழுந்தண்டத்
தொற்றவானகமுதயமண்டிலமெனவொளிரச்
சுற்றுமேகத்தைத்தோற்றியகுருதிநீர்துளிப்ப
முற்றும்வையகம்போர்க்களமாமெனமுயல. (அ)

தூவியம்பெடையரியினமறிதரச்சூழி
தூவியம்படைசோர்ந்தனசொரியுடல்சுரிப்ப
மேவியம்படைபடப்படர்குருதியின்வீழ்ந்த
மேவியம்படைக்கடலிடைக்குடரொடுமிதப்ப. (கூ)

இ-ள். (யானைகள்) அம் – அழகிய, படைக்கடலிடை – சேனைக் கடலினடுவே, மேவி – சேர்ந்து, (ஸ்ரீராமபிரான்) அம்பு – அம்புகளை, எடை – (தொடுக்க) எடுக்கையில், (மதநீருண்ணவரும்) தூவி – சிறகு வனத்தையுடைய, பெடையினம் – பெண்வண்டுக்கூட்டமும் அரியினம்- ஆண்வண்டுக்கூட்டமும், மறிதர – மீண்டுபோக, சூழி – முகபடாத்தை, தூவி – சின்னப்படுத்தியெறிந்து, சோர்ந்தன – சோர்வடைந்து, மேவி யம் – பெருமைமேவிய, படை – அந்த அம்புகள், பட – பட்டதனால், படர்குருதியின் – பரவியோடுகின்ற உதிரத்தில், சொரியுடல் – இரத்தத் தைச்சொரிகின்ற தம்முடல், சுரிப்ப – சுழன்றமிழும்படி, வீழ்ந்த – வீழ் ந்து, குடரொடு – (வயிற்றினின்றும் வெளிப்பட்ட, குடரோடு, மிதப்ப- மிதப்பன;—எ-று.

இனமென்பதைப் பெடையென்பதனோடுங் கூட்டுக. யானைகள் சொல்லெச்சம், இது சூழிதூவியென்றமையால் பெறப்பட்டது. ஒழிந்த வகலம் இசையெச்சம். மேவி என்னும் வினையெஞ்சுகிளவி தூவியென் னும் வினைகொண்டது. அம் சாரியை. (கூ)

கண்டிறந்தனகணவர்தம்முகத்தவர்முறுவல்
கண்டிறந்தனமடந்தையருயிரொடுங்கலந்தார்

பண்டிறந்தனபழம்புணர்க்கன்புகப்பன்னிப்
பண்டிறந்தனபுலம்பொலிசிலம்பொலிபணிப்ப. (க0)

இ-ள். பண்டு – முன்னாள்களில், இறந்தன – உண்டுகழிந்தனவாகிய, பழம்புணர்க்கு – பழமையாகிய சுரதநூலிற்கூறும் புணர்ச்சிகள் காரணமாக, அன்புக – அன்பின்கண்ணீர்சிந்த, பன்னி – அப்புணர்ச்சிகளைப் பலவாறுகூறி, பண் – நிறைநரம்பியாழினிசையையும், திறம்-குறைநரம்பியாழினிசையையும், தனபுலம்பொலி – தமது அழுகையொலியும், சிலம்பொலி – சிலம்பினொலியும்,பணிப்ப – இயம்பும்படி, (அழுதுகொண்டோடி) கணவர்தம் – நாயகருடைய, கண் – கண்கள், திறந்தன-விழித்தவாகிய, முகத்து – முகங்களில், அவர் முறுவல் – அவர்களுடைய நகையை, கண்டு – பார்த்து மகிழ்ந்து, இறந்து – உடலைவிட்டு, அனமடந்தையர்-அக்கற்புடையமகளிர்கள், உயிரொடும்-கணவருடைய உயிரோடும், கலந்தார் – சேர்ந்தனர்கள்;—எ-று.

பண் – ஏழ்நரம்புமுள்ளது. திறம் – ஏழிற்குறைநரம்புள்ளது. இவ்விரண்டுந் தம்மகத்தெழுமோசைக் கானமையினிவையும் அன்பும் ஆகுபெயர். அழுதுகொண்டோடி – இசையெச்சம். புணர் – முதனிலைத்தொழிற்பெயர். புணர்க்கு – உருபுமயக்கம். பணிப்ப, உபசாரவழக்கு. நூலினது பழமையை அதனாலுணர்த்தப்படும் பொருண்மேலேற்றிப் பழம்புணர்க்கெனக்கூறினார். அன்னமடந்தையர், சீராமபிரானுடைய அம்பு தம்முரத்தையுருவிச் செல்லாநிற்கையில் வேல்கொண்டெறிய விழித்தகணிமைத்தலு மோட்டாமெனக் கருது மியல்பினராகலின் விழித்துநின்று, விண்ணவர் முதலியோரையும் வென்றிகொண்ட நம் மருமத்தை யுருவிற்றன்றோ விம்மனிசன் வாளியென வியந்து நகைத்துடலை நீத்து விண்ணடைந்த கணவரோடு கலந்தன ரென்பது கருத்து. இது தன்னைவேட்டல். (க0)

ஏழுமேழுமென் றுரைக்கின்றவுலகங்கள்யாவும்
ஊழிபோவதேயொப்பதோருலைவுறவுடற்ற
நாழில்வெஞ்சமநோக்கியவிராவணனுவன்றன்
தாழிலென்படைதருக்கறுமென்பதோர்தன்மை. (கக)

மரமுங்கல்லுமேவில்லொடுவாண்மழுச்சூலம்
அரமுங்கல்லும்வேன்முதலியவயிற்படையடுக்கிச்
சிரமுங்கல்லெனச்சிந்தலிற்சிதைந்ததென்சேனை
உரமுங்கல்வியுமுடையவன்செருநின்றதொருபால். (கஉ)

அழலுங்கட்களிறணியொடுந்துணிபடுமாவி
சுழலும்பல்பரித்தேரொடுபுரவியுஞ்சுற்றக்
கழலுஞ்சோரிநீராற்றொடுங்கடலிடைக்கலக்கும்
குழலுநூலும்போன்மநுமனுந்தானுமக்குமரன். (கங)

வில்லுங்கூற்றுவற்குண்டெனத்திரிகின்றவீரன்
கொல்லுங்கூற்றெனக்குறைக்குமிந்நிறைப்பெருங்குழுவை

ஒல்லுங்கோளரியுருமன்னகுரங்கினதுகிரும்
பல்லுங்கூர்க்கின்றகூர்க்கிலவரக்கர்தம்படைகள். (கச)

இராவணன்வானரசேனையைப் பொருதழிழித்தல்.

கண்டுநின்றிறைப்பொழுதினிக்காலத்தைக்கழிப்பின்
உண்டுகைவிடுங்கூற்றுவனிருதர்பேருயிரை
மண்டுவெஞ்செருநாளொருகளத்திடைமடித்தே
கொண்டுமீள்கவென்கொற்றமென்றிராவணன்கொதித்தான். (கரு)

ஊதைபோல்வனவுருமுறழ்திறலனவுருவிப்
பூதரங்களைப்பிளப்பனவண்டத்தைப்பொதுப்ப
மாதிரங்களையளப்பனமாற்றருங்கூற்றின்
தூதுபோல்வனசுடுகணைமுறைமுறைதுரந்தான். (கசு)

ஆளிபோன்றுளனெதிர்ந்தபோதமர்க்களத்தடைந்த
ஞாளிபோன்றுளவென்படுதென்னள்ளிருளடைந்த
காளிபோன்றனனிராவணன்வெள்ளிடைக்கரந்த
பூனைபோன்றதப்பொருசினத்தரிகடம்புணரி. (கஎ)

இரியல்போகின்றசேனையையிலக்குவன்விலக்கி
அரிகளஞ்சன்மினஞ்சன்மினென்றருள்வழங்கித்
திரியுமாருதிதோளெனுந்தேர்மிசைச்சென்றான்
எரியும்வெஞ்சினத்திராவணனெதிர்புகுந்தேற்றான். (கஅ)

இலக்குமணன் இராவணனம்புகளை யழித்தல்.

ஏற்றுக்கோடலுமிராவணனெரிமுகப்பகழி
நூற்றுக்கோடியின்மேற்செலச்சிலைகொடுநூக்கக்
காற்றுக்கோடியபஞ்செனத்திசைதொறுங்கரக்க
வேற்றுக்கோல்கொடுவிலக்கினனிலக்குவன்விசையால். (கசு)

விலக்கினான்றடந்தோளினுமார்பினும்விசிகம்
உலக்கவுய்த்தனனிராவணனைந்தொடைந்துருவக்
கலக்கமுற்றிலனிளவலுமுள்ளத்திற்கனன்றான்
அலக்கணெய்துவித்தானடலரக்கனையம்பால். (உ0)

காக்கலாகலாக்கடுப்பினிற்றொடுப்பனகணைகள்
நூக்கினான்கணைநுறுக்கினனரக்கனுநூழில்
ஆக்கும்வெஞ்சமத்தரிதிவன்றனைவெல்வதம்பால்
நீக்கியென்னினிச்செய்வதென்றிராவணனினைந்தான். (உக)

கடவுண்மாப்படைதொடுக்கின்மற்றவைமுற்றுங்கடக்க
விடவுமாற்றவும்வல்லனேல்யாரையும்வெல்லும்

தடவுமாற்றலைக்கூற்றையுந்தமையனைப்போலச்
சுடவுமாற்றுமெவ்வுலகையுமெவனுக்குந்தோலான். (உஉ)

மோகமொன்றுண்டுமுதலவன்வகுத்ததுமுன்னாள்
ஆகமற்றதுகொற்றமுஞ்சிவன்றனையழிப்ப
தேகமுற்றியவிஞ்சையையிவன்வயினேவிக்
காகமுற்றுழல்களத்தினிற்கிடத்துவென்கடிதின். (உரு)

மோகனுத்திரப் பிரயோகமு மாழியாலழிவும்.

என்பதுன்னியவ்விஞ்சையைமனத்திடையெண்ணி
முன்பன்மேல்வரத்தூர்தனனதுகண்டுமுடுகி
அன்பின்வீடணனுழியான்படையினினறுத்தி
என்படுதோதினனிலக்குவனதுதொடுத்தெய்தான். (உச)

வீடணன்சொலவிண்டுவின்படைக்கலம்விட்டோன்
மூடுவெஞ்சினமோகத்தைநீக்கலுமுனிந்தான்
மாடுநின்றவனுபாயங்கண்மதித்திடவந்த
கேடுநந்தமக்கென்பதுமனங்கொண்டுகிளர்ந்தான். (உ௫)

மயன்கொடுத்ததுமகளொடுவயங்கனல்வேள்வி
அயன்படைத்துளதாழியுங்குலிசமுமனைய
துயர்ந்தகொற்றமுமூழியுங்கடந்துளதுருமிற்
சயந்தனைப்பொருந்தம்பியையுயிர்கொளச்சமைந்தான். (உசு)

இராவணன் விபீடணன்மீது வேலேவுதல்.

விட்டபோதினிலொருவனைவீட்டியேமீளும்
பட்டபோதவனுன்முகனுயினும்படுக்கும்
வட்டவேலதுவலங்கொண்டுவாங்கினன்வணங்கி
எட்டநிற்கலாத்தம்பிமேல்வல்விசைத்தெறிந்தான். (உஎ)

இலக்குமணன் விபீடணற் கபயமளித்தல்.

எறிந்தகாலையில்வீடணனதனிலையெல்லாம்
அறிந்தசிந்தையனையவீதென்னுயிரழிக்கும்
பிறிந்துசெய்யலாம்பொருளிலையென்றலும்பெரியோன்
அறிந்துபோக்குவலஞ்சனீயென்றிடையணைந்தான். (உஅ)

எய்தவாளியுமேயினபடைக்கலம்யாவும்
செய்தமாதவத்தொருவனைசசிறுதொழிற்றீயோன்
வய்தவைவினிலொழிந்தனவீடணன்மாண்டான்
உய்தலில்லையென்றும்பரும்பெருமனமுலைந்தார். (உகூ)

வேலேற்பானொருவரை யொருவர் முந்துதல்.

தோற்பெனென்னினும்புகழ்நிற்குந்தருமமுந்தொடரும்
ஆர்ப்பநல்லவரடைக்கலம்புகுந்தவனழியப்
பார்ப்பதென்னெடும்பழிவந்துதொடர்வதன்முன்னம்
ஏற்பெனென்றனிமார்பினென்றிலக்குவனெதிர்ந்தான். (௩0)

இலக்குவற்குமுன்வீடணன்புகுமிருவரையும்
விலக்கியங்கதன்மேற்செலுமவனையும்விலக்கிக்
கலக்கும்வானரக்காவலனநுமன்முன்கடுகெ
அலக்கணன்னதையின்னதென்றுரைசெயலாமே. (௩௧)

இலக்குமணன் இராவணனேவிய வேலினை மார்பிலேற்றல்.

முன்னின்றாரெலாம்பின்னுறக்காலினின்முடுகி
நின்மின்யானிதுவிலக்குவெனென்றுரைநேரா
மின்னும்வேலினைவிண்ணவர்கண்புடைத்திரங்கப்
பொன்னின்மார்பிடையேற்றனன்முதுகிடைப்போன. (௩௨)

விபீடணனிராவணன் தேர்க்குதிரைகளை யழித்தல்.

எங்குநீங்குதிநீயெனவீடணனெழுந்தான்
சிங்கவேறன்னசீற்றத்தானிராவணன்றேரில்
பொங்குபாய்பரிசாரதியொடும்படப்புடைத்தான்
சங்கவானவர்தலையெடுத்திடநெடுந்தண்டால். (௩௩)

இலங்கைக்கிராவணன்போதலும் விபீடணனிகழ்தலும்.

சேய்விசும்பினினிமிர்ந்துநின்றிராவணன்சீறிப்
பாய்கடுங்கணைபத்தவனுடல்புகப்பாய்ச்சி
ஆயிரஞ்சரமநுமன்றனுடலிடையழுத்திப்
போயினன்செருமுடிந்ததென்றிலங்கையூர்புகுவான். (௩௪)

தேடிச்சேர்ந்தவென்பொருட்டினுலகுடைச்செல்வன்
வாடிப்போயினனீயினிவஞ்சனைமதியால்
ஓடிப்போகுவதெங்கடாவுன்னொடுமுடனே
வீடிப்போவெனென்றரக்கன்மேல்வீடணன்வெகுண்டான். (௩௫)

வென்றியென்வயமானதுவீடணப்பசுவைக்
கொன்றினிப்பயனில்லையென்றிராவணன்கொண்டான்
நின்றிலன்னென்றுநோக்கிலன்முனிவெலாநீத்தான்
பொன்றிணிந்தனமதிலுடையிலங்கையூர்புகுந்தான். (௩௬)

அரக்கனேகினன்வீடணன்வாய்திறந்தரற்றி
இரக்கந்தானெனவிலக்குவனிணையடித்தலத்தில்

கரக்கலாகலாக்காதலன்வீழ்ந்தனன்கலுழ்ந்தான்
குரக்குவெள்ளமுந்தலைவருந்துயரிடைக்குளித்தார். (௩எ)

பொன்னிரும்புறுங்காளிமைப்பொருப்பினூற்பொன்ற
என்னிருந்துநானிறப்பெனிக்கணத்தெனையாளும்
மன்னிருந்தினிவாழ்கிலனென்றனன்மறுக
நின்னிலென்றிறைசாம்பவனுரையொன்றுநிகழ்த்தும். (௩அ)

அனுமனிற்கநாமாருயிர்க்கிரங்குவதறிவோ
நினையுமத்துணைமாத்திரத்துலகெலாநிமிர்வான்
வினையினன்மருந்தளிக்கின்ருன்வீரர்க்குவீரன்
தினையுமல்லலுற்றழுங்கன்மினென்றிடர்தீர்த்தான். (௩௯)

அனுமன் மருந்துகொண்டுவந் திலக்குமணனை யெழுப்புதல்.

மருத்தின்காதலன்மார்பிடையம்பெலாம்வாங்கி
இருத்தியோகடிதேகலையிளவலையிருன்
வருத்தங்காணுமோமன்னவனென்னலுமன்னன்
கருத்தையுன்னியம்மாருதியுலகெலாங்கடந்தான். (ச0)

வேறு.

உய்த்தொருதிசைமேலோடியுலகெலாங்கடக்கப்பாய்ந்து
மெய்த்தகுமருந்துதன்னைவெற்பொடுங்கொணர்ந்தவீரன்
பொய்த்தலில்குறிகடானேபொதுவறநோக்கிப்பொன்போல்
வய்த்ததுவாங்கிக்கொண்டுவருதலில்வருத்தமுண்டோ. (சக)

இலக்குமணனுயிர்த்தெழுதல்.

தந்தனன்மருந்துதன்னைத்தாக்குதன்முன்னேயோகம்
வந்ததுமாண்டார்க்கெல்லாமுயிர்தரும்வலத்ததென்ருல்
நொந்தவர்நொய்வுதீர்க்கச்சிறிதன்றேநொடிதன்முன்னே
இந்திரனுலகமார்க்கவெழுந்தனனிளையவீரன். (சஉ)

இலக்குமணன் விபீடணன் கியோவெனல்.

எழுந்துநின்றநுமன்றன்னையிருகையாற்றழுவியெந்தாய்
விழுந்திலனன்றேமற்றவ்வீடணனென்னவிம்மித்
தொழுந்துணையவனைநோக்கித்துணுக்கமுந்துயருநீங்கிக்
கொழுந்தியுமீண்டாள்பட்டானரக்கனென்றுவகைகொண்டான். (ச௩)

அனைவரும் இராமனைக்காணப் போதல்.

தருமமென்றறிஞர்சொல்லுந்தனிப்பொருடன்னையின்னே
கருமமென்றநுமனுக்கிக்காட்டியதன்மைகண்டால்
அருமையென்னிராமற்கம்மாவறம்வெல்லும்பாவந்தோற்கும்
இருமையுநோக்கினென்னுவிராமன்பாலெழுந்துசென்ருர். (சச)

ஒன்றலபலவென்றேங்குமுயர்பிணத்தும்பரோடும்
குன்றுகள்பலவுஞ்சோரிக்குரைகடலனைத்துந்தாவிச்
சென்றடைந்திராமன்றன்னைத்திருவடிவணக்கஞ்செய்தார்
வென்றியின்றலைவர்கண்டவிராமனென்விளைந்ததென்றான். (௬௫)

இராமனனுமனைத் தழுவிப்புகழ்தல்.

உற்றதுமுழுதுநோக்கியொழிவறவுணர்வுளுறச்
சொற்றனன்சாம்பன்வீரனநுமனைத்தொடரப்புல்லிப்
பெற்றனெனுன்னையென்னைபெறுதனபெரியோயென்று
மற்றிடையீறுசெல்லாவாயுளையாகவென்றான். (௬௬)

புயல்பொழியருவிக்கண்ணன்பொருமலன்பொங்குகின்றான்
உயிர்புறத்தொழியநின்றவுடலன்னவுருவத்தம்பி
துயர்தமக்குதவிமீளாத்துறக்கம்பெற்றுயர்ந்ததொல்லைத்
தயரதற்கண்டாலொத்தான்றம்முனைத்தொழுதுசார்வான். (௬௭)

இளவலைநோக்கியையவிராகவகுலத்துக்கேற்ற
வளவினமடைந்தோர்க்காகிமன்னுயிர்கொடுத்தவன்மைத்
துளவியவெருங்கலாய்நீயன்னதுதுணிந்தாயென்றால்
அளவியலன்றுசெய்தற்கடுப்பதேயாகுமன்றே. (௬௮)

புறவொன்றின்பொருட்டின்யாக்கைபுண்ணுறவரிந்தபுத்தேள்
அறவனுமையநின்னைநிகர்க்கிலனப்பானின்ற
பிறவினையுரைப்பதென்னேபேரருளாளரென்பார்
கறவையுங்கன்றுமொப்பார்தமக்கிடர்காண்கினென்றான். (௬௯)

சாலிகைமுதலவானபோர்ப்பரந்தாங்கிற்றெல்லாம்
நீனிறஞாயிறன்னநெடியவன்முறையினீக்கிக்
கோல்சொரிதனுவுங்கொற்றவநுமன்கைக்கொடுத்துக்கொண்டல்
மேனிறைகுன்றமொன்றின்மெய்ம்மெலிவாற்றலுற்றான். (௭0)

௩௧ - வது, வேலேற்றுப்படலம் - முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௩௫௩௧.

# ௩௨-வது வானரர் களங்காண்படலம்.



ஆயபின்கவிதன்வேந்துமளப்பருந்தானையோடும்
மேயினனிராமன்பாதம்விதிமுறைவணங்கிவீந்த
தீயவர்பெருமைநோக்கிநடுக்கமுந்திகைப்புமுற்றார்
ஓய்வுறுமனத்தாரொன்றுமுணர்ந்திலர்நாணமுற்றார். (௧)

மூண்டெழுசேனைவெள்ளமுலகொருமூன்றின்மேலும்
நீண்டுளவதனையயவெங்கனனிமிர்ந்ததென்னத்
தூண்டிரண்டனையதிண்டோட்சூரியன்சிறுவன்சொல்லக்
காண்டிநீயரக்கர்வேந்தன்றன்னெடுங்களத்தையென்றான். (௨)

வானராதியர் படுகளங்காண்டல்.

தொழுதனர்தலைவரெல்லாந்தோன்றியகாதறாண்ட
எழுகெனவிரைவிற்சென்றாரிராவணற்கிளவலோடும்
கழுகொடுபெருந்தும்பாறும்பேய்களுங்கணங்கண்மற்றும்
குழுவியகளத்தைக்கண்ணினோக்கினர்துணுக்கங்கொண்டார். (௩)

ஏங்கினார்நடுக்கமுற்றாரிரைத்திரைத்துள்ளமேற
வீங்கினார்வெருவலுற்றார்விம்மினாருள்ளம்வெம்ப
ஓங்கினார்மெள்ளமெள்ளவுயிர்நிலைத்துவகையூற
ஆங்கவருற்றதன்மையாரறிந்தறையகிற்பார். (௪)

ஆயிரம்பருவங்கண்டாற்காட்சிக்கோர்கரையிற்றன்றால்
மேயினதுறைகடோறும்விம்மினார்நிற்பதல்லால்
பாய்திரைப்பரவையேழுங்காண்குறுபதகரென்ன
நீயிருந்துரைத்தியென்றார்வீடணனெறியிற்சொன்னான். (௫)

வேறு.

காகப்பந்தர்ச்செங்களமெங்குஞ்செறிகால
யோகத்தம்பிற்பொன்றினவேனுமுடலொன்றி
மேகச்சங்கந்தொக்கனவேழும்வெளியின்மை
நாகக்குன்றினின்றனகாண்மினமரங்காள். (௬)

வென்றிச்செங்கண்வெம்மையரக்கர்விசையூர்வ
ஒன்றிற்கொன்றுற்றம்புதலைப்பட்டுயிர்நுங்கப்
பொன்றிச்சிங்கநாகவடுக்கிற்பொலிகின்ற
குன்றிற்றுஞ்சுந்தன்மைநிகர்க்குங்குறிகாணீர். (௭)

அளியிற்பொங்குமங்கணனேவுமயில்வாளிக்
களியிற்பட்டார்வாண்முகமின்னுங்கரையில்ல

புளினத்திட்டிற்கண்ணகன்வாரிக்கடல்பூத்த
நளினக்காடேயொப்பனகாண்மினமரங்காள். (அ)

பூவாய்வாளிச்செல்லெறிகாலைப்பரிபொன்றக்
கோவாய்வன்பாய்வெண்கொடிதிண்பாயொடுகூட
மாவாய்திண்டேர்மண்டுதலானீர்மறுவேலை
நாவாய்மானச்செல்வனகாண்மினமரங்காள். (கூ)

ஒழுகிப்பாயுழம்மதவேழமுயிரோடும்
எழுகிற்கில்லாசெம்புனல்வெள்ளத்திடையிற்ற
பழகிற்கில்லாப்பஃறிரைதூங்கும்படர்வேலை
முழுகித்தோன்றுமீனரசொக்குமுறைநோக்கீர். (க0)

கடக்காரென்னப்பொங்குகவந்தத்தொடுகைகள்
தொடக்காநிற்கும்பேயிலயத்தின்றொழில்பூண்ட
* மடக்கோவில்லாவார்படிமக்கூத்தமைவிப்பான்
நடக்கால்காட்டுங்கண்ணுளரொக்குநமரங்காள். (கக)

மழுவிற்கூர்வாள்வன்பலிடுக்கின்வயவீரர்
குழுவிற்கொண்டநாடி † தொடக்கப்பொறிகூட்டித்
தழுவிக்கொள்ளக்கள்ளமனப்பேயவைதள்ளி
நழுவிச்செல்லும்மியல்பினகாண்மின்னமரங்காள். (கஉ)

பொன்னின்ஞெடைமின்பிறழ்நெற்றிப்புகர்வேழம்
பின்னும்முன்னும்மாறினவீழ்விற்பிணைவுற்ற
தன்னின்னேராமெய்யிருபாலுந்தலைபெற்ற
என்னுந்தன்மைக்கேய்வனபல்வேறிவைகாணீர். (கங)

நாமத்திண்போர்முற்றியகோபந்நகைநாறும்
பாமத்தொன்னீரன்னநிறத்தோர்பகுவாய்கள்
தூமத்தோடும்வெங்கனலின்னுஞ்சுடர்கின்ற
ஓமக்குண்டமொப்பனபல்வேறிவைகாணீர். (கச)

மின்னும்மோடையாடல்வயப்போர்மிடல்வேழக்
கன்னம்மூலத்துற்றனவெண்சாமரைகாணீர்
மன்னும்மாநீர்த்தாமரைமானும்வதனத்த
அன்னம்மெல்லத்துஞ்சுவவொக்கின்றவைகாணீர். (கரு)

ஓளிம்முற்றுற்றுயர்வேழத்தொளிர்வெண்கோ
டாளின்முற்றுச்செம்புனல்வெள்ளத்தவைகாணீர்

---

* மடக்கோவில்லா — முடக்குதல் நீங்காத.

† தொடக்க-சுற்றிக்கொள்ள.

கோளின்முற்றுச்செக்கருண்மேகக்குழுவின்கண்
நாளின்முற்றுவெண்பிறைபோலுங்நமரங்காள். (கசு)

கொடியும்வில்லுங்கோலொடுவேலுங்குவிதேரும்
துடியின்பாதக்குன்றின்மிசைத்தோல்விசியின்கட்
டொடியும்வெய்யோர்கண்ணெரிசெல்லவுடன்வெந்த
தடியுண்டாடிக்கூளிதடிக்கின்றனகாணீர். (கஎ)

சகரம்மூழ்ந்நீர்செம்புனல்வெள்ளந்தமொறி
மகரந்தம்மின்வந்தனகாணுமனமுட்கிச்
சிகரம்மன்னயானைகொலென்னச்சிலநாணி
நகரந்நோக்கிச்செல்வனகாண்மின்னமரங்காள். (கஅ)

விண்ணிற்பட்டார்வெற்புறழ்காயம்பலமென்மேல்
மண்ணிற்செல்வார்மேனியின்வீழமடிவுற்றார்
எண்ணிற்றீராவன்னவைதீருமிடலில்லாக்
கண்ணிற்றோன்றார்விம்மியுளைக்கும்படிகாணீர். (கக)

அச்சிற்றிண்டேரானையின்மாமேற்காலாளின்
மொய்ச்சுச்சென்றார்மொய்குருதித்தாரைகண்முட்ட
உச்சிச்சென்றாலுயினும்வெய்யோனுதயத்தின்
குச்சிச்சென்றுநெடுத்துளனுகுங்குறிகாணீர். (உ0)

காரேய்மேனிக்கண்டகர்கண்டப்படுகாலை
ஆரேவென்னவிண்படர்செஞ்சோரியதாகி
வேறோர்நின்றவெண்மதிசெங்கேழ்நிறம்விம்மி
மாறோர்வெய்யோன்மண்டிலமொக்கின்றதுகாணீர். (உக)

வேறு.

வானனையமண்ணனையவளைந்தெழுந்தகொழுங்குருதிமகரவேலை
தானனைவுற்றெழும்பறவைச்சிறைதெளித்தபுதுமழையின்றுள்ளிதாங்கி
மீனனையநறும்போதம்விரையருந்துஞ்சிறைவண்டுநிறம்வேறெய்திக் [ன்
கானனமுங்கடிபொழிலு*முறியீன்றபோன்றௌிர்வ காண்மின்காண்மி

வரைபொருதமதயானைத்துணைமருப்புங்கிளைமுத்துமணியும்வாரித்,
திரைபொருதுபுறங்குவிப்பத்திறங்கொள்பணைமரமுருட்டிச் சிறைப்புள்
ளார்ப்ப, நுரைகொடியும்வெண்குடையுஞ்சாமரையுமெனச்சுமந்துபிணத்
திரன்மைக்,கரைபொருதுகடன்மடுக்குங்கடுங்குருதிப்பேர்யாறுகாண்
மின்காண்மின். (உ௩)

கய்க்குன்றப்பெருங்கரையகுருதர்புயக்கற்செறிந்தகதலிக்கானம்
மொய்க்கின்றபரித்திரையமுரட்கரியின்கோண்மாவமுளரிக்கானின்

---

* முறியீன்ற — தவிர்த்தன.

மெய்க்கின்றவாண்முகத்தவிழுக்குடரின்பாசடையநிணமேற்செற்ற
உய்க்கின்றவுதிரநிறக்களங்குளங்களுலப்பிறந்தவுவையுங்காண்மின்.(உச)

நெடும்படைவாளுஞ்சிலுழுநிணச்சேற்றினுதிரநீர்நிறைந்தகாப்பின்
கடும்பகடுபடிகிடந்தகரும்பாம்பினினமள்ளர்பரந்தகையில்
படுங்கமலமலர்நாறுமுடிபரந்தபெருங்கிடக்கைபரந்தபண்ணை [ன்.
தடம்பணையினநும்பழனந்தழுவியதேயெனப்பொலியுந் தகையுங்காண்மி

வெளிநீர்த்தவரைபுரையுமிடலரக்கருடல்விழவும்வீரன்வில்லின்
ஒளிநீர்த்தமுழுநெடுநாணுருமேறுபலபடவுமுலகங்கீண்டு
நளிநீர்த்தநாகபுரம்புக்கிழிந்தபகழிவழிநதியிழேடிக்
களிநீர்த்துப்புகமண்டுங்கருங்குருதித்தடஞ்சுழிகள்காண்மின்காண்மின்.

கைத்தலமுங்காத்திரமுங்கருங்கழுத்துநெடும்புயமுமுரமுங்கண்டித்,
தெய்த்திலபோய்த் திசைகடொறு மிருநிலத்தைக்கிழித்திழிந்த தென்னி
னல்லான், மத்தகரிவயமாவின்வாணிருதர் பெருங்கடலின்மற்றிவ்வாளி,
தைத்துளவாய்நின்றதெனவென்றேயுங்காண்பரியதகையுங்காண்மின். ()

வேறு.

குமுதநாறுமுகத்தனகூற்றன
சமுதரோடுமடிந்தனசார்தரும்
திமிதமாலன்னவின்னனவித்திறம்
அமுதின்வந்தனவையிருகோடியால். (உஅ)

ஏறுநான்முகன்வேள்வியெழுந்தன
ஊறுமாரியுமோங்கலையோதமும்
மாறுமாயினுமாமதமாய்வரும்
ஆறுமாறிலவாறிருகோடியால். (உகூ)

உயிர்வறந்துமுதிரம்வறந்துதம்
மயர்வறந்துமதமறவாதன
புயலவன்றிசைப்போர்மதயானையின்
இயல்பரம்பரையேழிருகோடியால். (௩0)

கொடாதுநிற்றலிற்கொற்றநெடுந்திசை
எடாதுநிற்பன * நாட்டமிமைப்பில
வடாதுதிக்கின்மதவரையின்வழிக்
கடாமுகத்தமுளரிக்கணக்கவால். (௩க)

வானவர்க்கிறைவன்றிறைதந்தன
ஆனவர்க்கமோராயிரகோடியும்

* நாட்டம் இமைப்பில — கண்கள் இமைப்பற்றன.

தானவர்க்கிறைவன்றிறைதந்தன
ஏனவர்க்கங்கணக்கிலவிவ்வெலாம். (௩௨)

பாற்கடல்பண்டமிழ்தம்பயந்தநாள்
ஆர்த்தெழுந்தனவாயிரமாயிரம்
மாற்கணப்பரியிங்கிவைமாறுவை
மேற்கின்வேலைவருணனைவென்றவால். (௩௩)

இருநிதிக்கிழவன்னிழுந்தேகின
அரிவயப்பரியாயிரமாயிரம்
விரிசினத்திகல்விஞ்சையர்வேந்தனைப்
பொருதுபற்றியதாமரைபோலுமால். (௩௪)

என்றுகாணினுங்காட்டினுமீதிறைக்
குன்றுகாணினுங்கோளிலதாதலான்
நின்றுகாணுதுரேமியிறைனுழைச்
சென்றுகாண்டுமென்றேகினர்செவ்வியோர். (௩௫)

ஆரியற்றெருழுதாங்கவன்பாங்கரும்
போரியற்கைநினைந்தெழும்பொம்மலார்
பேருயிர்ப்பொடிருந்தனர்பின்புறும்
காரியத்தினிலைமைகழறுவாம். (௩௬)

௩௨ - வது, வானரர் களங்காண்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௫௭௫.

## ௩௩-வது, இராவணன்களங்காண்படலம்.

அலக்கணெய்தியமராழிந்திட
உலக்கவானரவீரரையோட்டியவ்
விலக்குவன்றனைவீட்டியிராவணன்
துலக்கமெய்தினன்றேமில்களிப்பினே. (௧)

பொருந்துபொற்பெருங்கோயிலுட்போர்த்தொழில்
வருந்தினர்க்குத்தம்மன்பினின்வந்தவர்க்
கருந்துதற்கமைவாயினவாக்குவான்
விருந்தமைக்கவமைக்கின்றவேட்கையான். (௨)

வானநாட்டைவருகெனவல்விரைந்
தேனைநாட்டவரோடும்வந்தெய்தலும்

மானநாட்டந்தபோகமமைத்திர் மற்
றானநாட்டினிழத்திருயிரென்றான். (ரு)

நறவுமூனுநவையறநல்லன
பிறவுமாடையுஞ்சாந்தமும்பெய்மலர்த்
திறமுநானப்புனலொடுசேக்கையும்
புறமுமுள்ளுநிறையப்புகுந்தவால். (சு)

நானநெய்ந்நன்குரைத்துநறும்புன
லானகோதறவாட்டியமுதொடும்
பானமூட்டிச்சயனம்பரப்பவும்
வானநாட்டியர்யாவரும்வந்தரால். (ஞ)

பாடுவார்கள்பயினடம்பாவகத்
தாடுவார்களமளியினன்புறக்
கூடுவார்கண்முதலுங்குறைவறத்
தேடினனெனப்பண்ணையிற்சேர்ந்ததால். (சு)

அரைசராதியடியவரந்தமா
வரைசெய்மேனியிராக்கதர்வந்துளார்
விரைவினிந்திரபோகம்விழைதரக்
கரைசெலாதபெருவளங்கண்ணினார். (எ)

இன்னதன்மையமைந்தவிராக்கதர்
மன்னன்மாடுவந்தெய்திவணங்கினார்
அன்னசேனைகளப்பட்டவாறெலாம்
துன்னுதூதர்செவியிடைச்சொல்லுவார். (அ)

நடுங்குகின்றவுடலினர்நாவுலர்ந்
தொடுங்குகின்றவுயிர்ப்பினருள்ளழிந்
திடுங்குகின்றவிழியினரேங்கிமேல்
பிடுங்குகின்றவுரையினர்பேசுவார். (கூ)

வேறு.

மூலபலமழிந்தமைதூதர் இராவணற்குரைத்தல்.

இன்றியார்விருந்திங்குண்பாரிகன்முகத்திமையோர்தந்த
வென்றியாயேவச்சென்றவாயிரவெள்ளச்சேனை
நின்றதுபுறத்ததாகவிராமன்கைநிமிர்ந்தசாபம்
ஒன்றினாலிரண்டுமூன்றுகடிகையினுலந்ததென்றார். (க0)

வலிக்கடன்வானுளோரைக்கொண்டுநீவகுத்தபோகம்
கலிக்கடனளிப்பலென்றுநிருதர்க்குக்கருதினையேல்

பலிக்கடனளிக்கற்பாலையல்லதுன்குலத்தின்பாலோர்
ஒலிக்கடலுலகத்திலையூருளாருளரேயுள்ளார். (கக)

ஈட்டருமுவகையீட்டியிருந்தவனிசைந்தமாற்றம்
கேட்டலும்வெகுளியோயதுணுக்கமுமிழிவுங்கிட்ட
ஊட்டரக்கனையசெங்கணெருப்புகவுயிர்ப்புவீங்கத்
தீட்டியபடிவமென்னத்தோன்றினன்றிகைத்தநெஞ்சன். (கஉ)

இராவணனையுறல்.

என்னினும்வலியரானவிராக்கதர்யாண்டும்வீயார்
உன்னினுமுலப்பிலாதாருவரியின்மணலினீள்வார்
பின்னொருபெயருமின்றிமாண்டனரென்றுபேசும்
வின்னிலையிதுவோபொய்ம்மைவிளம்பினர்போலுமென்றான். (கங)

கேட்டயலிருந்தமாலியீதொருகிழமைத்தாமோ
ஓட்டுறுதூதர்பொய்யேயுரைப்பரோவுலகம்யாவும்
வீட்டுவதிமைப்பினன்றேவீங்கெரிவிரிந்தவெல்லாம்
மாட்டுவாரொருவனன்றேயிறுதியின்மனத்தாலென்றான். (கச)

அளப்பருமுலகம்யாவுமமைத்துக்காத்தழிக்கின்றான்றன்
உளப்பருந்தகைமைதன்னாலொருவனென்றுண்மைவேதம்
கிளப்பதுங்கேட்டுமன்றேயாவின்மேற்கிடந்துமேனாள்
முளைத்தபேரிராமனென்றவீடணன்மொழிபொய்த்தாமோ. (கரு)

* ஒன்றிடினுலகையுண்ணுமுலகத்தினுயிர்க்கொன்றாக
நின்றனவெல்லாம்பெய்தாலுடனுங்குநெருப்புங்காண்டும்
குன்றொடுமரனும்புல்லும்பல்லுயிர்க்குழுவுங்கொல்லும்
வன்றிறற்காற்றுங்காண்டும்வலிக்கொருவரம்புமுண்டோ. (கசு)

பட்டதுமுண்டேயுன்னையிந்திரச்செல்வம்பற்று
விட்டதுமெய்யேயையமீண்டொருவினையுமில்லைக்
கெட்டதுன்பொருட்டினாலேநின்னுடைக்கேளிரெல்லாம்
சிட்டதுசெய்தியென்றானதற்கவன்சீற்றஞ்செய்தான். (கஎ)

இராவண னிலக்குமணனைக் கொன்றமையால் வெற்றிதன்னதாமெனல்.

இலக்குவன்றன்னைவேலாலெறிந்துயிர்கூற்றுக்கீந்தேன்
அலக்கணிற்றலைவரெல்லாமழுந்தினரதனைக்கண்டால்
உலக்குமாலிராமன்பின்னேயுயிர்ப்பொறையுகவானுற்ற
மலக்கமுண்டாகினுகவாகையென்வயத்ததென்றான். (கஅ)

* ஒன்றிடி னதனையுண்ணு முலகத்தை விறகென்றோத எனவும் பாடம்.

தூதர்மருந்தா லிலக்குமண னுயிர்பெற்றானெனல்.

ஆண்டதுகேட்டுநின் றதூதுவரையமெய்யே
மீண்டதவ்விளவலாவிமாருதிமருந்துமெய்யில்
தீண்டவுந்தாழ்ந்ததில்லையாருமச்செங்கணானைப்
பூண்டனர்மருந்துவெற்பைவீசினான்புக்கதென்றார். (௧௯)

ஐயமுற்றவிராவணன் கோபுரத்தின்மீதேறி மூலபலமிறந்த
வுண்மை காண்டல்.

தேறிலனுதலானேமறுகுறுசிந்தைதேற
ஏறினன்கனகத்தாரைக்கோபுரத்தும்பரெய்தி
ஊறினசேனைவெள்ளமூலந்தபேருண்மையெல்லாம்
காறினவுள்ளநோவக்கண்களாற்றெரியக்கண்டான். (௨0)

கொய்தலைப்பூசற்பட்டோர்குலத்தியர்குவளைதோற்று
நெய்தலைவென்றவாட்கண்குமுதத்தினீர்மைகாட்டக்
கய்தலையுற்றபூசல்கடலொடுநிமிருங்காலைச்
செய்தலையுற்றவோசைச்செயலதுசெவியிற்கேட்டான். (௨௧)

எண்ணினீர்கடந்தயானைப்பெரும்பிணமேந்தியாணர்
மண்ணினீரளவுங்கல்லிநெடுமலைமறித்துமண்டும்
புண்ணினீராறுபல்பேய்புதுப்புனலாடும்பொம்மற்
கண்ணினீராறுமாறக்கருங்கடன்மடுப்பக்கண்டான். (௨௨)

மூற்றியற்சிலைவலாளன்மொய்க்கணைதுமிப்பவாவி
பெற்றியல்பெற்றிபெற்றாமென்னவாளரக்கர்யாக்கை
சிற்றியற்குறுங்காலோரிக்குரல்கொளையிசையாப்பல்பேய்
கற்றியல்பாணிகொட்டக்களிநடம்பயிலக்கண்டான். (௨௩)

விண்களிற்சென்றவன்றோட்கணவரையலகைவெய்ய
புண்களிற்கைகணீட்டிப்புதுநிணங்கவர்வநோக்கி
மண்களிற்றொடர்ந்துவானிற்பிடித்துவள்ளுகிரின்மானக்
கண்களைச்சூன்றுதீக்குமரக்கியர்குழாமுங்கண்டான். (௨௪)

குமிழிநீரோடுஞ்சோரிக்கனலொடுங்கொழிக்குங்கண்ணான்
தமிழ்நெறிவழக்கமன்னதனிச்சிலைவழக்கிற்சாய்ந்தார்
அமிழ்பெருங்குருதிவெள்ளமாற்றுவாய்முகற்றிற்றேக்கி
உமிழ்வதேயொக்கும்வேலையோதம்வந்துடற்றக்கண்டான். (௨௫)

விண்பிளந்தேங்கவார்க்கும்வானரவீக்கங்கண்டான்
மண்பிளந்தழுந்தவாடுங்கவந்தத்தின்வருக்கங்கண்டான்
கண்பிளந்தகலநோக்கும்வானவர்களிப்புங்கண்டான்
புண்பிளந்தனையநெஞ்சன்கோபுரத்திழிந்துபோந்தான். (௨௬)

இராவணனரசிருக்கை மண்டபமெய்துதல்.

நகைபிறக்கின்றவாயனுக்கொடுகடைவாய்நக்கிப்
புகைபிறக்கின்றமூக்கன்பொறிபிறக்கின்றகண்ணன்
மிகைபிறக்கின்றநெஞ்சன்வெஞ்சினத்தீமேல்வீங்கிச்
சிகைபிறக்கின்றசொல்லனரசியலிருக்கைசேர்ந்தான். (உஎ)

௩௩ - வது, இராவணன் களங்காண்படலம் – முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௬0உ.

---

## ௩ச-வது, தேரேறுபடலம்.

பூதரமனையமேனிப்புகைநிறப்புருவச்செந்தீ
மோதரனென்னுநாமத்தொருவனைமுகத்துநோக்கி
ஏதுளதிறந்திலாததிலங்கையுளிருந்தசேனை
யாதையுமெழுகென்றானைமணிமுரசெற்றுகென்றான். (க)

எற்றியமுரசினோடுமேழிருநூறுகோடி
கொற்றவாணிருதர்சேனைகுழீஇயதுகொடித்திண்டேரும்
சுற்றுறுதொளைக்கைமாவுந்துரகமும்பிறவுந்தொக்க
வற்றியவேலையென்னவிலங்கையூர்வறளிற்றாக. (உ)

இராவணன் போர்க்கோலங் கொள்ளுதல்.

ஈசனையிமையாமுக்கணிறைவனையிருமைக்கேற்ற
பூசனைமுறையிற்செய்துதிருமறைபுகன்றதானம்
வீசினனியற்றிமற்றும்வேட்டனவேட்டோர்க்கெல்லாம்
ஆசறநல்கியொல்காப்போர்த்தொழிற்கமைவதானான். (௩)

வேறு.

அருவியஞ்சனக்குன்றிடையாயிரமருக்கர்
உருமினோடும்வந்துதித்தனராமெனவொளிரக்
கருவிநான்முகன்வேள்வியிற்படைத்ததுங்கட்டிச்
செருவிலிந்திரன்றந்தபொற்கவசமுஞ்சேர்த்தான். (ச)

வாள்வலம்படமந்தரஞ்சுழன்றமாசுணத்தின்
தாள்வலந்தொளிர்தமனியக்கச்சொடுஞ்சார்த்திக்
கோள்வலந்தனகுவிந்தனவாமெனுங்கொள்கை
மீள்வில்கிம்புரிமணிக்கடிசூத்திரம்வீக்கி. (௫)

மறைவிரித்தன்ன * மாடுறுமானமாக்கலுழன்
சிறைவிரித்தன்னகொய்சகமருங்குறச்சேர்த்தி
முறைவிரித்தன்னமுறுக்கியகோசிகமுறையே
பிறைவிரித்தன்னவெள்ளெயிற்றரவமும்பிணித்து. (சு)

மழைக்குலத்தொடுவானுருமேறெலாம்வாரி
இழைத்தொடுத்தனவனையவாளிடைமணியார்த்து
முழைக்கிடந்தவல்லரியினமுழங்குவபோல்வ
தழைக்குமின்னொளிப்பொன்மலர்ச்சதங்கையுஞ்சார்த்தி. (எ)

உருமிடித்துழியரவெனக்கரக்கமாவுலகின்
இருநிலத்திடையெவ்வுலகத்திடையாரும்
புரிதரப்படும்பொலங்கழலிலங்குறப்பூட்டிச்
சரியுடைச்சுடர்சாய்நலஞ்சார்வுறச்சார்த்தி. (அ)

நாலைஞ்சாகியகரங்களினனந்தலையநந்தன்
ஆலஞ்சார்மிடற்றருங்கறைகிடந்தெனவிலங்கும்
கோலஞ்சார்நெடுங்கோதையும்புட்டிலுங்கட்டித்
தாலஞ்சார்ந்தமாசுணமெனக்கங்கணந்தழுவ. (௯)

கடல்கடைந்தமால்வரையினைச்சுற்றியகயிற்றின்
அடல்கடந்ததோளலங்குபோர்வலயங்களிலங்க
உடல்கடந்தநாளொளியவனுதிர்த்தபொற்கதிரின்
சுடர்தயங்குறக்குண்டலஞ்செவியிடைத்தூக்கி. (௧௦)

உதையக்குன்றத்தோடத்தத்தினுலாவுறுகதிரின்
துதையுங்குங்குமத்தோளொடுதோளிடைதொடரப்
புதையிருட்பகைக்குண்டலமனையவைபொலியச்
சிதைவிறிங்களுமீனும்போன்முத்தினந்திகழ (௧௧)

வேலைவாய்வந்துவெய்யவரனைவரும்வெய்ய
காலையுற்றனராமெனக்கதிர்க்குலங்காலும்
மாலைபத்தின்மேன்மதியமுநாளிடைப்பலவாய்
மூலைமுற்றியவனையமுத்தக்குடையிமைப்ப. (௧௨)

பகுத்தபல்வளக்குன்றினின்முழையன்னபகுவாய்
வகுத்தவான்கடைகடைதொறும்வளையெயிற்றீட்டம்
மிகுத்தநீலவான்மேகஞ்சூழ்விசும்பிடைத்தசும்பூ
டுகுத்தசெக்கரிற்பிறைக்குலமுளைத்தனவொக்க. (௧௩)

ஒத்ததன்மையினொளிர்வனதரளத்திரளேதம்
தத்துகின்றனவீரபட்டத்தொகைதயங்க

* மாடுறு — பக்கத்தினையுடைய.

முத்தவோடையின்முரட்டிசைமுழுமதயானை
பத்துநெற்றியுஞ்சுற்றியபேரெழில்படைக்க. (கச)

புலவிமங்கையர்பூஞ்சிலம்பரற்றடிபோக்கித்
தலைமைகண்ணினர்தாழ்கிலர்மணிமுடித்தலங்கள்
உலகமொன்றினைவிளக்குறுங்கதிரினையோட்டி
அலகிலெவ்வுலகத்தினும்வயங்கிருளகற்ற. (கரு)

நாகர்நாணிலநான்முகனுடெனநயந்த
பாகமூன்றையும்வென்றுகொண்டமரர்முன்பணிந்த
வாகைமாலையுமருங்குறவரிவண்டோடளவித்
தோகையன்னவர்விழிதொடர்தும்பையுஞ்சூட்டி. (கசு)

அகழிவேலையைக்காலத்தையளக்கர்நுண்மலை
நிகழுமீன்களைவிஞ்சையைநினைப்பதேனின்ற
இகழ்வில்பூதங்களிறப்பினுமிறுதிசெல்லாத
புகழெனச்சரந்தொலைவிலாத்தூணியும்பூட்டி. (கஎ)

இராவணன் தேர்த்திறம்.

வருகதேரெனவந்ததுவையமும்வானும்
உரகதேயமுமொருங்குடனிவரினுமுச்சிச்
சொருகுபூவன்னசுமையதுதுரகமின்றெனினும்
நிருதர்கோமகனினைந்துழிச்செல்வதேர்நினைப்பில். (கஅ)

ஆயிரம்பரியமுதத்தின்வந்தவுமருக்கன்
பாய்வயப்பசுங்குதிரையின்வழியவும்படர்நீர்
வாய்மடுக்குமாவடவையின்வயிற்றின்வன்காற்றி
ஞயகற்குவந்துதித்தவும்பூண்டதேர்நலத்தின். (கக)

பாரிற்செல்வதுவிசும்பிடைப்படர்வதுபரந்த
நீரிற்செல்வதுநெருப்பினுஞ்செல்வதுநிமிர்ந்த
போரிற்செல்வதுபொன்னெடுமுகட்டிடைவிரிஞ்சன்
ஊரிற்செல்வதெவ்வுலகத்துஞ்செல்வதோரிமைப்பின். (உ0)

எண்டிசைப்பெருங்களிற்றிடைமணியெனவிசைக்கும்
கண்டையாயிரகோடியின்றொகையதுகதிரோன்
மண்டிலங்களைமேருவிற்குவித்தெனவயங்கும்
அண்டம்விற்குநன்காசினங்குயிற்றியதடங்க. (உக)

முனைவர்வானவர்முதலினரண்டத்துமுதல்வர்
எனைவரீந்தவுமிகலினிலிட்டவுமியம்பா
வினையின்வெய்யனபடைக்கலவேலையென்றிசைக்கும்
சுனையினுண்மணற்றொகையனசுமந்ததுதொக்க. (உஉ)

கண்ணனேமியுங்கண்ணுதல்கணிச்சியுங்கமலத்
தண்ணல்குண்டிகைக்கலசமுமழியினுமழியாத்
திண்மைசான்றதுதேவருமுணர்வருஞ்செய்கை
உண்மையாமெனப்பெரியதுவென்றியினுறையுள். (௨௩)

இராவணன் இரதபூசையும் சுவணதானமுதலியவுஞ்செய்தல்.

அனையதேரினையருச்சனைவரன்முறையாற்றி
எனையரென்பதோர்கணக்கிலாமறையவரெவர்க்கும்
வினையினன்னிதிமுதலியவளப்பரும்வெறுக்கை
நினையினீண்டதோர்பெருங்கொடையருங்கடனேர்ந்தான். (௨௪)

இராவணனிரதத்தி லாரோகணித்தல்.

ஏறினன்றெறுழிந்திரன்முதலியவிமையோர்
தேறினர்களுந்தியங்கினர்மயங்கினர்திகைத்தார்
வேறுநாஞ்சொலும்வினையிலைமெய்யினைம்புலனும்
ஆறினர்களுமஞ்சினருலகெலாமனுங்க. (௨௫)

இராவணனது வஞ்சினமொழி.

மன்றலங்குழற்சனகிதன்மலர்க்கையான்வயிறு
கொன்றலந்தலைக்கொடுநெடுந்துயரிடைகுளித்தல்
அன்றிதென்றிடின்மயன்மகளத்தொழிலுறுதல்
இன்றிரண்டினொன்றாக்குவென்றலைப்படினென்றான். (௨௬)

இராவணனது தோற்றம்.

பலகளந்தலைமௌலியோடிலங்கலிற்பஃறேன்
அலகளந்தறியாநெடும்படைகளோடலங்க
விலகளந்தருகடற்றரைவிசும்பொடுவியப்ப
உலகளந்தவன்வளர்ந்தனனெனவுயர்ந்தான். (௨௭)

இராவணன் றோள்புடைத்தார்த்தல்.

விசும்புவிண்டிருகூறுறக்கற்குலம்வெடிப்பப்
பசும்புண்விண்டெனப்புவிபடப்பகலவன்பசும்பொற்
* றசும்புநின்றிடைந்திரிந்திடமதிதகையமிழ்தின்
அசும்புசிந்திநொந்துலைவுறத்தோள்புடைத்தார்த்தான். (௨௮)

இராவணன் வின்ஞாணெறிதல்.

நணித்துவெஞ்சமமென்பதோருகையினலத்தால்
திணித்தடங்கிரிவெடித்துகச்சிலையைநாணெறித்தான்
மணிக்கொடுங்குழைவானவர்தானவர்மகளிர்
துணுக்கமெய்தினர்மங்கலநாண்களைத்தொட்டார். (௨௯)

---

* தசும்பினின்று-தசும்பைப்போலநின்று; தசும்பு-குடம்.

சுரிக்குமண்டலந்தூங்குநீர்ச்சுரிப்புறவீங்க
விரைக்கும்பல்லுயிர்யாவையுநடுக்கமுற்றிரியப்
பரித்திலன்புவிபடர்சுடர்மணித்தலைபலவும்
விரித்தெழுந்தனனநந்தன்மீதென்பதோர்மெய்யான். (௩0)

தோன்றினன்வந்துசுரர்களோடசுரரேதொடங்கி
மூன்றுநாட்டினுமுள்ளவர்யாவருமுடிய
ஊன்றினன்செருவென்றுயிருமிழ்தரவுதிரம்
கான்றுநாட்டங்கள்வடவனற்கிருமடிகனல. (௩க)

உலகிற்றோன்றியமறுக்கமுமிமைப்பிலருலைவும்
மலையும்வானமும்வையமுமறுகுறுமறுக்கும்
அலைகொள்வேலைகளஞ்சினசலிக்கின்றவயர்வும்
தலைவனேமுதற்றண்டலிலோரெலாங்கண்டார். (௩உ)

பீறிற்றுமண்டமென்பதோராகுலம்பிறக்க
வேறிட்டோர்பெருங்கம்பலைபம்பிமேல்வீங்க
மாறிப்பல்பொருள்வகுக்குறுங்காலத்துண்மறுக்கம்
ஏறிற்றுற்றுளதென்னைகொலோவென்வெழுந்தார். (௩௩)

கடர்கள்யாவையுங்கன்மலைக்குலங்களுங்காரும்
திடர்கொண்மேருவும்விசும்பிடைச்செல்வனசிவண
அடர்கொள்சேனையுமரக்கனுந்தேரும்வந்தார்க்கும்
குடர்கொள்பேரொலிக்கம்பலையென்பதுங்கொண்டான். (௩௪)

இராவணன் வருகையை விபீடணன் இராமற்குரைத்தல்.

எழுந்துவந்தனனிராவணனிராக்கதத்தானைக்
கொழுந்துமுற்றியதுற்றதுகொற்றவகுலுங்குற்
றழுந்துகின்றதுநம்பலமமரருமஞ்சி
விழுந்துசிந்தினரென்றனன்வீடணன்விரைந்தான். (௩௫)

வேறு.

இராமன் போருக்கெழுதல்.

தொழுங்கையொடுவாய்குழறிமெய்ம்முறைறதுளங்க
விழுந்துகவிசேனையிடுபூசன்மிகவிண்ணோர்
அழுந்துபடுபாலமளிதுஞ்சியெழுமந்நாள்
எழுந்தபடியேகடிதெழுந்தனனிராமன். (௩௬)

இராமன் போர்க்கோலங் கோடல்.

கடக்களிறெனத்தகையகண்ணனொருகாலன்
விடக்கயிறெனப்பிறழும்வாள்வலன்விசித்தான்

மடக்கொடிதுயர்க்குநெடுவானினுறைவோர்தம்
இடர்க்கடலினுக்குமுடிவின்றெனவிசைத்தான். (௩எ)

தன்னகவசத்துருவுதங்கவொருதன்னின்
பின்னகவசத்தபொருளில்லைபெரியோனை
மன்னகவசத்துறவரிந்ததெனவென்கோ
இன்னகவசத்தையுமொரீசனெனலாமால். (௩அ)

புட்டிலொடுகோதைகள்புழுங்கியெரிகூற்றின்
அட்டிலெனலாயமலரங்கையினடக்கிக்
கட்டியுலகிற்பொருளெனக்கரையில்வாளி
வட்டில்புறம்வைத்தவைபொருந்திடவரிந்தான். (௩கூ)

சிவன் இராமனுக்குத் தேரனுப்பக் கூறுதல்.

மூண்டசெருவின்றளவின்முற்றுமினிவெற்றி
ஆண்டகையதுண்மையினியச்சமகல்வுற்றீர்
பூண்டமணியாழிவயமாநிமிர்பொலந்தேர்
ஈண்டவிடுவீரமரரென்றரனிசைத்தான். (சஂ0)

இந்திரன் தனது தேரினை இராமனுக்காக அனுப்புதல்.

தேவரதுகேட்டிதுசெயற்குரியதென்றூர்
ஏவல்புரியிந்திரவெனத்தொழுதிசைத்தார்
மூவுலகுமின்றொருகணத்தின்முறைமுற்றிக்
காவல்புரிதன்பொருவிறேர்கவர்தியென்றான். (சக)

மாதலிகொணர்ந்தநன்மகோததிவளாவும்
பூதலமெழுந்துபடர்தன்மையபொலன்றேர்
சீதமதிமண்டிலமுமேனையுளவுந்திண்
பாதமெனநின்றதுபடர்ந்ததுவிசும்பின். (சஉ)

குலக்கிரிகளேழின்வலிகொண்டுயர்கொடிஞ்சும்
அலக்குரியபாரின்வலியாழியினச்சும்
கலக்கறவகுத்ததுகதத்தரவமெட்டும்
வலக்கயிறுகட்டியதுமுட்டியதுவானே. (சஙூ)

ஆண்டிறுநொளிருதுதிங்களிவையென்று
* மீண்டனவுமேலனவும்விட்டுவிரிதட்டின்
பூண்டுளதுதாரகைமணிப்பொருவில்கோவை
நீண்டபுனைதாரினதுநின்றுலவுகுன்றின். (சச)

தேவரதத்தின் திறம்.

மாதிரமனைத்தையுமணிச்சுவர்களாகக்
கோதறவகுத்ததுமழைக்குழுவையெல்லாம்

* ஈண்டனவும்—ஒருங்குசேர்ந்தனவும்.

மீதுறுபதாகையெனவீசியதுமெய்ம்மைப்
பூதமவைவயைந்தின்வலியிற்பொலிவதம்மா. (௪௫)

மரத்தொடுமெருந்துலகில்யாவுமுளவாரித்
தரத்தொடுதொடுத்தகொடிதங்கியதுசங்கக்
கரத்தொடுதொடுத்தகடன்மீதுநிமிர்காலத்
துரத்தொடுகெடுத்தகதழோதையதஞேதை. (௪௬)

பண்டரிதனுந்தியயன்வந்தபழமுந்தைப்
புண்டரிகமொட்டனையமொட்டினதுபூதம்
உண்டவைவயிற்றிடையொடுக்கியுமிழ்கின்ரூன்
* அண்டசமணிச்சயனமொப்பதகலத்தின். (௪௭)

வேதமொருநாலுநிறைவேள்விகளும்வெவ்வே
ருேதமவையேழுமலேயேழுமுலகேழும்
பூதமவையைந்துமெரிமூன்றுநனிபொய்தீர்
மாதவமுமாவுதியுமைம்புலனுமற்றும். (௪அ)

அருங்கரணமைந்துசுடரைந்துதிசைநாலும்
ஒருங்கரணமூன்றுமுழல்வாயுவொருபத்தும்
பெரும்பகலுநீளிரவுமென்றிவைபிணிக்கும்
பொரும்பரிகளாகநனிபூண்டதுபொலன்றேர். (௪௯)

வந்ததனைவானவர்வணங்கிவலியோய்நீ
எந்தைதரவந்தனையெமக்குதவுகிற்பாய்
தந்துதவுவென்றியெனநின்றுதகைமென்பூச்
சிந்தினர்கள்மாதலிகடாவிநனிசென்ரூன். (௫௦)

வினைப்பகைவிசைக்கொடுவிசும்புருவிமான
மனத்தின்விசைபெற்றுளதுவந்ததெனவாஞே
டனைத்துலகமுந்தொழவடைந்ததமலன்பால்
நினைப்புமிடைபிற்படநிமிர்ந்துயர்நெடுந்தேர். (௫௧)

அலரிதனியாழிபுனைதேரிதெனினன்ரூல்
உலகின்முடிவிற்பெரியவூழொளியிதன்ரூல்
நிலைகொணெடுமேருகிரியன்றுநெடிதம்மா
தலைவரொருமூவர்தனிமானமிதுதாஞே. (௫௨)

இராமன் மாதலியை வினுதல்.

என்னையிதுநம்மையிடையெய்தலெனவெண்ணு
மன்னவர்தமன்னன்மகன்மாதலியைவந்தாய்

---

* அண்டசமணிச்சயனம் — முட்டையிற்பிறந்த ஆதிசேடனுகிய படுக்கை.

பொன்னினொளிர்தேரிதுகொடார்புகறியென்றான்
அன்னவனுமன்னதனையாகவுரைசெய்தான். (௫௩)

இந்திரசாரதியின் விடை.

முப்புரமெரித்தவனுநான்முகனுமுன்னாள்
அப்பகலியற்றியுளதாயிரமருக்கர்க்
கொப்புடையதாழிதிரிகாலுமுலைவில்லா
இப்பொருவிறேர்வருவதிந்திரனதெந்தாய். (௫௪)

அண்டமிதுபோல்வனவளப்பிலவடுக்கிக்
கொண்டுபெயருங்குறுகுநீளுமவைகோளுற்
றுண்டவன்வயிற்றினையுமொக்குமுவமைக்குப்
புண்டரிகநின்சரமெனக்கடிதுபோமால். (௫௫)

கண்ணுமனமுந்நெடியகாலு * மிவைகண்டால்
உண்ணும்விசையாலுணர்வுபிற்படரவோடும்
விண்ணுநிலனும்மெனவிசேடமிலதஃதே
எண்ணுநெடுநீரினுநெருப்பிடையுமெந்தாய். (௫௬)

நீருமுளதேயிதனினீரிலெழுகிற்கும்
பாருமுளதேயிதினிரட்டியவைபண்பின்
பேருமொருகாலையிருகாலையிடைபோராத்
தேருமுவதேயிதுவலாலுலகுசெய்தோய். (௫௭)

தேவருமுனித்தலைவருஞ்சிவனுமுன்னாள்
மூவுலகளித்தமுதலும்முதல்வமுன்னின்
றேவினர்சுரர்க்கிறைவனீந்துளவனென்றான்
மாவின்மனமொப்பவுணர்மாதலிவலித்தான். (௫௮)

இராமனையமொழிய இரதாசுவங்கள் வேதமோதுதல்.

அய்யனிதுகேட்டிகலரக்கரகன்மாயச்
செய்கைகொலெனச்சிறிதுசிந்தையினினைந்தான்
மெய்யவனுரைத்ததெனவேண்டியிடைபூண்ட
மொய்யரிவயப்பரிமொழிந்தமுதுவேதம். (௫௯)

இந்திரன் சாரதியைப்பெயர் வினுதலுமவன் விடையிறுத்தலும்.

இல்லையினியையமெனவெண்ணியவிராமன்
நல்லவினைநீயுனதுநாமநவில்கென்ன
வல்லதனையூர்வதொருமாதலியெனப்பேர்
சொல்லுவரெனத்தொழுதுநெஞ்சினொடுசொன்னான். (௬௦)

---

* இவைகண்டால் — இவைகளையுற்றுப்பார்க்கின்.

இராமனனும விலக்குமணர்களை விணுதலும் அன்றரின்ன
திந்திரன் தேரேயென்றலும்.

மாருதியைநோக்கியிளவாளரியைநோக்கி
நீர்கருதுகின்றதைநிகழ்த்துமெனநின்றான்
ஆரியன்வணங்கியவரையமிலைமெய்யே
தேரிதுபுரந்தரனதென்றனர்தெளிந்தார். (சுக)

தெய்வத்தேரிலிராமனேறியிருத்தல்.

விழுந்துபுரடீவினைநிலத்தொடுவெதும்பத்
தொழுந்தகையநல்வினைகளிப்பினொடுதுள்ள
அழுந்துதுயரத்தமரரந்தணர்கைமுந்துற்
றெழுந்துதலையேறவினிதேறினனிராமன். (சு௨)

௩ச — வது, தேரேறுபடலம் — முற்றிற்று.

ஆ௳ திருவிருத்தம்-௩சுசுச.

## ௩௫-வது, இராவணன்வதைப்படலம்.



இராமனைத் தேவர் வாழ்த்துதல்.

ஆழியந்தடந்தேர்வீரனேறலுமாசிகூறிப்
பூழியிற்சுரித்ததன்மைநோக்கியபுலவர்போத
ஊழிவெங்காற்றின்வெய்யகலுழனையொன்றுஞ்சொல்லார்
வாழியவநுமன்றோளையேத்தினார்மலர்கடூவி. (க)

எழுகதேர்சுமக்கவெல்லோம்வலியும்புக்கின்றேபொன்றி
விழுகபோயரக்கன்வெல்கவேந்தர்க்குவேந்தன்விம்மி
அழுகபோரரக்கிமாரென்றார்த்தனரமரராழி
முழுகிமீதெழுந்ததென்னச்சென்றதுமுரித்திண்டேர். (௨)

இராவணன் இராமன்மீது தன்தேரைவிடக் கூறுதல்.

அன்னதுகண்ணிற்கண்டவரக்கனுமமரரீந்தார்
மன்னெடுந்தேரென்றுன்னிவாய்மடித்தெயிறுதின்றான்
பின்னதுகிடக்கவென்றுத்தன்னுடைப்பெருந்திண்டேரை
மின்னகுவரிவிற்செங்கையிராமன்மேல்விடுதியென்றான். (௩)

இரிந்தனகவிகளெல்லாமிமையவரிரதமீந்தார்
அரிந்தமன்வெல்லுமென்றற்கையுறவில்லென்றஞ்சார்

திரிந்தனமரமுங்கல்லுஞ்சிந்தினர் திசையோடண்டம்
பிரிந்தனகொல்லென்றெண்ணப்பிறந்தனமுழக்கின்பெற்றி. (௪)

வார்ப்பொலிமுரசினோதைவயவர்வாய்புடைப்பினோதை
போர்த்தொழிற்களத்தைமுற்றுஞ்சுற்றியபொம்மலோதை
ஆர்த்தலின்யாரும்பார்வீழ்ந்தடங்கினரிருவராடற்
றேர்க்குரலோதைபொங்கச்செவிமுற்றுஞ்செவிடுசெய்ய. (௫)

இராமன் மாதலியை நீ என் கருத்திற்கிசையவோட்டுதேரெனல்.

மாதலிவதனநோக்கிமன்னர்தமன்னன்மைந்தன்
காதலாற்கருமமொன்றுகேட்டியாற்களித்தசிந்தை
ஏதலன்மிகுதியெல்லாமிடையிற்றபின்றையென்றன
சோதனைநோக்கிச்செய்திதுடிப்பிலையென்னச்சொன்னான். (௬)

மாதலி அவ்வாறேசெய்வேனெனல்.

வள்ளனின்கருத்துமாவின்சிந்தையுமாற்றலார்தம்
உள்ளமுமிகையுமுற்றகுற்றமுமுறுதிதானும்
கள்ளமில்காலப்பாடுங்கருமமுங்கருதேனாகின்
தெள்ளிதென்விஞ்சையென்றானமலனுஞ்சரிதென்றான். (௭)

மகோதரன் றன்னை இலக்குமணனோடுபொர வனுப்ப வேண்டுதலும்
இராவணனவ்வாறே செய்தியென்றலும்.

தோன்றினனிராமனீதாற்புரந்தரன்றுரந்ததேர்மேல்
ஏன்றிருவருக்கும்வெம்போரெய்தியதிடையேயானோர்
சான்றெனநிற்றல்குற்றந்தருதியால்விடையீண்டென்றான்
வான்றொடர்குன்றமன்னமகோதரனிலங்கைமன்னை. (௮)

அம்புயமனையகண்ணன்றன்னையாளரியினேறு
தும்பியைத்தொலைத்ததென்னத்தொலைக்குவென்தொடர்ந்துநின்ற
தம்பியைத்தடுத்தியாயிற்றந்தனைகொற்றமென்றான்
வெம்பிகலரக்கனஃதேசெய்வெனென்றவனின்மீண்டான். (௯)

மகோதரன் இராமன்மேற் றேர்விடக் கூறுதல்.

மீண்டவனிளவனின்றபாணியின்விளங்காமுன்னம்
ஆண்டகைதெய்வத்திண்டேரணுகியதணுகுங்காலை
மூண்டெழுவெகுளியோடுமகோதரன்வெகுண்டுமுட்டத்
தூண்டுதிதேரையென்றான்சாரதிதொழுதுசொன்னான். (௧௦)

மகோதரனைச் சாரதிதடுத்தல்.

எண்ணருங்கோடிவெங்கணிராவணரேயுமின்று
நண்ணியபொழுதுமீண்டுநடப்பரோகிடப்பதல்லால்

அண்ணறன்ரூற்றங்கண்டாலையகமலமன்ன
கண்ணனையொழியவிப்பாற்சேறலேகருமமென்ருன். (கக)

மகோதர னிராமனேடு பொருதல்.

என்றலுமெயிற்றுப்பேழ்வாய்மடித்தடாவெடுத்துநின்னைத்
தின்றனெனெனினுமுண்டாம்பழுதெனச்சீற்றஞ்சிந்தும்
குன்றனதோற்றத்தான்றன்கொடிநெடுந்தேரினேரே
சென்றதவ்விராமன்றிண்டேர்விளைந்தது திமிலத்திண்போர். (கஉ)

பொற்றடந்தேருமாவும்பூட்கையுமிலங்குவாழ்க்கைக்
கற்றடந்திண்டோளாளுநெருங்கியகடல்களெல்லாம்
வற்றியவிராமன்வாளிவடவனல்பருகவென்றான்
ஒற்றைவன்றடந்தேரோடுமகோதரனொருவன்சென்றான். (கந)

அசனியேறிருந்தகொற்றக்கொடியின்மேலரவத்தேர்மேல்
குசையுறுபாகன்றன்மேற்கொற்றவன்குலவுத்தோண்மேல்
விசையுறுபகழிமாரிவித்திஞன்விண்ணினேடும்
திசைகளுங்கிழியவார்த்தான்றீர்த்தனுமுறுவல்செய்தான். (கச)

இராமனம்பால் மகோதரனிறத்தல்.

வில்லொன்ருற்கவசமொன்ருல்விறலுடைக்கரமோரொன்ருல்
கல்லொன்றுதோளுமொன்ருற்கழுத்தொன்ருற்கடிதின்வாங்கி
செல்லொன்றுகணையாலையன்சிந்திஞன்செப்பிவந்த
சொல்லொன்ருய்ச்செய்கையொன்ருய்த்துணிந்தனனரக்கன்ருஞ்சி. ()

மோதரன்முடிந்தவண்ணமூவகையுலகத்தோடும்
மாதிரமெவையும்வென்றவன்ருழிலரக்கன்கண்டான்
சேதனையுண்ணக்கண்டான்செலவிடுசெலவிடென்ருன்
சூதனுமுடுகத்தூண்டச்சென்றது தூரகத்திண்டேர். (கசு)

பணிப்படாநின்றதென்னப்பரக்கின்றசேனைபாறித்
தனிப்படாதுகினின்னுந்தாழ்கிலனென்னுந்தன்மை
நுனிப்படாநின்றவீரனவனேன்றுநோக்காவண்ணம்
குனிப்படாநின்றவில்லாலொல்லையினூறிக்கொன்ருன். (கஎ)

இராவணன் துன்னிமித்தங்கள் காண்டல்.

அடல்வலியரக்கர்க்கப்போழ்தண்டங்களெழுந்துமண்டும்
கடல்களும்வற்றவெற்றிக்கால்கிளர்ந்துடற்றுங்காலை
வடவரைமுதலவானமலைக்குலஞ்சலிப்பபோன்று
சுடர்மணிவலயஞ்சிந்தத்துடித்தனவிடத்தபொற்ருேள். (கஅ)

வேறு.

உதிரமாரிசொரிந்ததுலகெலாம்
அதிரவானமிடித்ததருவரை
பிதிரவீழ்ந்ததசனியொளிபெருக்
கதிரவன்றனையூருங்கலந்ததால். (௧௯)

வாவும்வாசிநடுங்கினவாங்கலில்
ஏவும்வெஞ்சிலைநாணிடையிற்றன
நாவும்வாயுமுலர்ந்தனநாண்மலர்ப்
பூவின்மாலைபுலால்வெறிபூத்ததால். (௨0)

எழுதுவீணைகொடேந்துபதாகைமேல்
கழுதுங்காகமுமொய்த்தனகண்கணீர்
ஒழுகுகின்றனவோடிகலாடன்மாத்
தொழுவினின்றனபோன்றனசூழிமா. (௨௧)

இன்னவாகியிமையவர்க்கின்பஞ்செய்
துர்நிமித்தங்கடோன்றினதோன்றவும்
அன்னதொன்றுமறிந்திலனூற்றமோ
என்னைவெல்லமணித்தனென்றெண்ணுவான். (௨௨)

வீங்குதேர்செலும்வேகத்துவேலைநீர்
ஓங்குநாளினெறுதுங்குமுலகுபோல்
தாங்கலாற்றகிலார்தமோறித்தாம்
நீங்கினூரிருபாலுநெருங்கினூர். (௨௩)

இராம விராவணயுத்தம்.

கருமமுங்கடைக்கண்ணுறுஞானமும்
அருமைசேருமவிஞ்சையும்விஞ்சையும்
பெருமைசால்கொடும்பாவமும்பேர்கலாத்
தருமமும்மெனச்சென்றெதிர்தாக்கினூர். (௨௪)

சிரமொராயிரந்தாங்கியசேடனும்
உரவுகொற்றத்துவணத்தரசனும்
பொரவுடன்றனர்போலப்பொருந்தினர்
இரவுநண்பகலும்மெனவேற்றனர். (௨௫)

வென்றியந்திசையானைவெகுண்டன
ஒன்றையொன்றுமுனிந்தவுமொத்தனர்
அன்றியுந்நரசிங்கமுமாடகக்
குன்றமன்னவனும்பொருங்கொள்கையார். (௨௬)

துவனவில்லின்பொருட்டொருதொல்லைநாள்
எவனவீசனென்பார்பொரவேற்றெதிர்
புவனமூன்றும்பொலங்கழலாற்றொடும்
அவனுமச்சிவனும்மெனலாயினார். (உஎ)

கண்டசங்கரநான்முகர்கைத்தலம்
விண்டசங்கத்தொல்லண்டம்வெடிபட
அண்டசங்கத்தமரர்தமார்ப்பெலாம்
உண்டசங்கமிராவணனூதினான். (உஅ)

இ-ள். கண்ட — சீராமபிரானைத் தரிசித்துநின்ற, சங்கரநான்முகர்-சிவனும் பிரமனும், கைத்தலம் — கூப்பியகைகள், விண்டு — அத்தொழி லில்நின்றும் நீங்கும்படி, அசங்க — நடுங்கவும், தொல்லண்டம் — பிரமனண்டத்தில், வெடிபட — மாறொலியுண்டாகவும், அண்டம் — விண்ணுலகத்தில், சங்கத்தமரர்தம் — தேவர்கூட்டத்தினது, ஆர்ப்பெலாம்-(களிப்பினாரவாரத்தையெல்லாம்) உண்ட — தொலைத்த, சங்கம் — சங்கை, இராவணனூதினான் — இராவணன்முழக்கினான்;—எ-று.

விண்டு - செயவெனெச்சத்திரிபு, இத்தொழிலானே கூப்பல்பெற்றும். எல்லாப்படைப்புகளினும் பிரமனண்டம் முற்பட்டதாகலி னதனைத் தொல்லண்டமென்றார். அசங்கவெடிபடவென்னுங் காரியப் பொருளவாகிய வினையெச்ச மிரண்டுக்கு ஊதினானென்னும் வினைகொண்டன. சங்கத்தமரர்தம் என்பதைஅமரர்தஞ்சங்கமெனக்கூட்டுக. சங்கர நான்முகர் கைத்தலம்விண்டசங்கமெனவே ஏனையோரது கண்கலக்கம்சொல்ல வேண்டுவதின்றாயிற்று.

சொன்னசங்கினதோசைதுளங்குற
என்னசங்கென்றிமையவரேங்குற
அன்னசங்கைப்பொறாமையினாரியன்
றன்னவெண்சங்குந்தானுமுழங்கிற்றால். (உகூ)

அய்யனைம்படைதானுமடித்தொழில்
செய்யவந்தயல்நின்றனதேவரில்
மெய்யனன்னவைகண்டிலன்வேதங்கள்
பொய்யிறன்னைப்புலன்றெரியாமைபோல். (௩0)

ஆசையும்விசும்பும்மலையாழியும்
தேசமுமலையுந்நெடுந்தேவரும்
கூசவண்டங்குலுங்கக்குலங்கொடார்
வாசவன்சங்கைமாதலிவாய்வைத்தான். (௩க)

துமிலவாளியரக்கன்றுரப்பன
விமலன்மேனியின்வீழ்வதன்முன்னமே

* கமலவான்முகநடியர்கட்கடை
அமலமேனியிற்றைறத்தவநந்தமால். (௩௨)

சென்றதேரோரிரண்டொடுஞ்சேர்த்திய
குன்றின்வெங்கட்குதிரைகுதிப்பன
ஒன்றையொன்றுற்றெறியுகநோக்கின
தின்றுதீர்வனபோலுஞ்சினத்தன. (௩௩)

கொடியின்மேலுறைவீணையுங்கொற்றமா
இடியினேறுமுறையினிடித்தன
படியும்விண்ணும்பரவையும்பன்முறை
முடியுமென்பதொர்மூரிமுழக்கினால். (௩௪)

ஏழுவேலையுமார்ப்பெடுத்தென்னலாம்
வீழிவெங்கணிராவணன்வில்லொலி
ஆழிநாதன்சிலையொலியண்டம்விண்
டூழிபேர்வுழிமாமழையொத்ததால். (௩௫)

ஆங்குநின்றவநுமனையாதியாம்
வீங்குவெஞ்சினவீரர்விழுந்தனர்
எங்கிநின்றதலாலொன்றிழைத்திலர்
வாங்குசிந்தையர்செய்கைமறந்துளார். (௩௬)

ஆவதென்னைகொலாமென்றறிகிலார்
ஏவர்வெல்வரென்றெண்ணலரேங்குவார்
போவர்மீள்வர்பதைப்பர்பொருமலால்
தேவருந்தங்கள்செய்கைமறந்துளார். (௩௭)

சேணவந்தரநோக்கலுந்திண்சரம்
பூணமுந்தினசிந்தினபூமழை
காணவந்தகடவுளர்கையெலாம்
ஆணவந்துணையாருளராவரே. (௩௮)

நீண்டமின்னெடுவானெடுநீலவில்
பூண்டிரண்டெதிர்நின்றவும்போன்றன
ஆண்டவில்லிதன்வில்லுமரக்கன்றன்
தீண்டவல்லரில்லாதசிலையுமே. (௩௯)

அரக்கனன்றெடுத்தார்க்கின்றவார்ப்பும்போர்
பொருப்புமெய்விற்றெழிப்புமுண்டேகொலாம்
குரைக்கும்வேலையுமேகக்குழாங்களும்
இரைத்திடிக்கின்றதின்றுமொரீறில. (௪0)

---

* கமலமுகவானநாடியர் என்றும் பாடம்.

மண்ணிற்செல்வனசெல்லினுமாசற
எண்ணிற்சூன்மழையல்லவிராவணன்
கண்ணிற்சிந்தையதீக்கடுவேகத்த
விண்ணிற்செல்வனவிண்ணின்றுவீழ்வன. (௪௧)

மால்கலங்கலில்சிந்தையன்மாதிரம்
நால்கலங்கநகுந்தொறுநாவொடும்
கால்கலங்குவதேவர்கணமழைச்
சூல்கலங்குமிலங்கைதுளங்குமால். (௪௨)

இக்கணத்துமெறிப்பதடித்தெனச்
செக்கர்மேகத்துதிர்க்குநெருப்பெனப்
பக்கம்வீசும்படர்சுடர்பஃறிசை
புக்கபோதப்பொடிப்பனபோக்கில. (௪௩)

கொற்றம்பிற்கொடுகொள்ளுதல்கோளிலாச்
சிற்றையாளனைத்தேவர்தந்தேரொடும்
பற்றிவானிற்சுழற்றிப்படியின்மேல்
எற்றுவேனென்றுரைக்குமிரைக்குமால். (௪௪)

தடித்துவைத்தன்னவெங்கணைதாக்கற
வடித்துவைத்ததுமானுடற்கேவலி
ஒடித்துத்தேரையுதிர்த்தொருவில்லொடும்
பிடித்துக்கொள்வென்சிறையெனப்பேருமால். (௪௫)

வேறு.

பதைக்கின்றதொர்மனமும்மிடைபடர்கின்றதொர்சினமும்
விதைக்கின்றனபொறிபொங்கினவிழியும்முடைவெய்யோன்
குதைக்கின்றனகிமிர்வெஞ்சிலைகுழையக்கொடுங்கடுங்கால்
உதைக்கின்றனசுடர்வெங்கணையுருமேறெனவெய்தான். (௪௬)

உருமொப்பனகனலொப்பனவூற்றந்தருகூற்றின்
மருமத்தினுநுழைகிற்பனமழையொப்பனவாஞோர்
நிருமித்தனபடைபற்றறநிமிர்வுற்றனவமிழ்தப்
பெருமத்தினைமுறைசுற்றியபெரும்பாம்பினும்பெரிய. (௪௭)

துண்டப்படுநெடுமேருவைத்தொளைத்துள்ளுறைதொங்கா
தண்டத்தையும் * பொதுத்தேகுமென்றிமையோர்களுமயிர்த்தார்
கண்டத்தெறுகணைக்காற்றினைக்கருணைக்கடல்கனகச்
சண்டச்சரமழைகொண்டவையிடையேயறத்தடுத்தான். (௪அ)

* பொதுத்து — துவாரஞ்செய்து.

உடையான்முயன்றொருகாரியமுறுதீவினையுடற்ற
இடையூறுறச்சிதைந்தாங்கெனச்சரஞ்சிந்தினவிறலும்
தொடையூறினகணைமாரிகடொகைதீர்த்தனதுரந்தான்
கடையூறுறுகணமாரிகள்கால்வீழ்ந்தெனக்கடியான். (சகூ)

இராவணன் போர்த்திறங்கண்டு சிவனுந் திகைத்தல்.

விண்போர்த்தனதிசைபோர்த்தனமலைபோர்த்தனவிமையோர்
கண்போர்த்தனகடல்போர்த்தனபடிபோர்த்தனகலையோர்
எண்போர்த்தனவெறிபோர்த்தனவிருள்போர்த்தனவென்னே
திண்போர்த்தொழிலென்றானையினுரிபோர்த்தவன்றிகைத்தான். (ருo)

அல்லாவொடுபெருந்தேவருமறைவாணருமஞ்சி
எல்லாருந்தங்கரங்கொண்டிருவிழிபொத்தனரிருந்தார்
செல்லாயிரம்விழுங்காலுகும்விலங்கொத்ததுசேனை
வில்லாளனுமதுகண்டவைவிலக்குந்தொழில்வேட்டான். (ருக)

செந்தீவினைமறைவாணனுக்கொருவன்சிறுவிலைநாள்
முந்தீந்ததொருணவின்பயனெனலாயினமுதல்வன்
வந்தீந்தனவடிவெங்கணையனையான்வருத்தமைந்த
வெந்தீவினைப்பயனொத்தனவரக்கன்சொரிவிசிகம். (ருஉ)

நூறாயிரவடிவெங்கணைநொடியொன்றினின்விடுவான்
ஆறாவிறன்மறவோனவைதணிநாயகனறுப்பான்
கூறாயினகனல்சிந்தினகுடிக்கப்புனல்குறுகிச்
சேறாயினபொடியாயினதிடராயினகடலும். (ருந)

வில்லாற்சரந்துரக்கின்றவற்குடனேயிடல்வெம்போர்
வல்லானெழுமழுத்தோமரமணித்தண்டிருப்புலக்கை
தொல்லார்மிடல்வளைசக்கரஞ்சூலம்மிவைதொடக்கத்
தெல்லாநெடுங்கரத்தாலெடுத்தெறிந்தான்செருவறிந்தான். (ருச)

வேலாயிரமழுவாயிரமெழுவாயிரம்விசிகக்
கோலாயிரம்பிறவாயிரமொருகோல்படக்குறைவ
காலாயினகனலாயினவுருமாயினகதிய
சூலாயினமழையன்னவன்றொடைபல்வகைதொடுக்க. (ருரு)

ஒத்துச்செருவிளைக்கின்றதொராளவின்றலையுடனே
பத்துச்சிலையெடுத்தான்கணைதொடுத்தான்பலமுகிலாத்
தொத்துப்படநெடுந்தாரைகள்சொரிந்தாலெனத்துரந்தான்
குத்துக்கொடுநெடுங்கோல்படுகளிறுமெனக்கொதித்தான். (ருசா)

ஈசன்விடுசரமாரியுமெரிசிந்துறுதறுகண்
நீசன்விடுசரமாரியுமிடையெங்கணுநெருங்கத்

தேசம்முதலேம்பூதமுஞ்செருக்கண்டனசெருக்கிக்
கூசம்மயிர்பொடிப்பற்றனவனலாயினகொடிய. (௫எ)

வேறு.

மந்தரக்கிரியெனமருந்துமாருதி
தந்தவப்பொருப்பெனபுரங்கடாமெனக்
கந்தருப்பந்நகர்விசும்பிற்கடென
அந்தரத்தெழுந்ததவ்வரக்கன்றேரரோ. (௫அ)

எழுந்துயர்தேர்மிசையிலங்கைக்காவலன்
பொழிந்தனசரமழையுருவிப்போதலால்
ஒழிந்ததுமொழிகிலதென்னவொல்லெனக்
கழிந்ததுகவிக்குலமிராமன்காணவே. (௫கூ)

இராமன்மாதலியை இரதத்தினைவிரைவின்மேலோட்டச்சொல்லுதல்.

முழவிடுதோளொடுமுடியும்பஃறலை
விழவிடுவேனினிவிசும்புசேமமா
மழவிடையனையநம்படைஞர்மாண்டனர்
எழவிடுதேரையென்றிராமன்கூறினன். (சு0)

இராம இராவணர்கள் இரதங்களில் வானத்திற் சுழன்றேடிப்பொருதல்.

அந்துசெய்குவெனெனவறிந்தமாதலி
உந்தினன்றேரெனுமூழிக்காற்றினை
இந்துமண்டிலத்தின்மேலிரவிமண்டிலம்
வந்தெனவந்ததம்மானத்தேரரோ. (சுக)

இரிந்தனமழைக்குலமிழுகித்திக்கெலாம்
முரிந்தனவுடுக்குலமுதிர்ந்துசிந்தின
நெரிந்தனநெடுவரைக்குடுமிநேர்முறை
திரிந்தனசாரிகைதேருந்தேருமே. (சுஉ)

வலம்வருமிடம்வருமறுகிவாளொடு
நிலம்வருமிடம்வலமிரும்வேலையும்
அலம்வருங்குலவரையனைத்துமண்டமும்
சலம்வருங்குயவனதிகிரித்தன்மைபோல். (சுங)

எழும்புகழிறைவன்றேரரக்கன்றேரிதென்
றுழுந்துருள்பொழுதினெவ்வுலகுஞ்சேர்வன
தழும்பியதேவருந்தெரிவுதந்திலர்
பிழம்பினதிரிவனவென்னும்பெற்றியார். (சுச)

உக்கிலாவுடுக்களுமுருள்கடாக்கலின்
நெக்கிலாமலைகளுநெருப்புச்சிந்தலின்

வக்கிலாத்திசைகளுமுதிரம்வாய்வழிக்
கக்கிலாவுயிர்களுமில்லைக்காண்பன. (௬௫)

இந்திரனுலகத்தாரென்பரென்றவர்
சந்திரனுலகத்தாரென்பர்தாமரை
அந்தணனுலகத்தாரென்பரல்லரால்
மந்தரமலையினரென்பர்வானவர். (௬௬)

பாற்கடனடுவணரென்பர்பல்வகை
மாக்கடலினுக்குமவ்வரம்பினரென்பர்
மேற்கடலாரென்பர்கிழக்குளாரென்பர்
ஆர்க்கடையுருமென்பரறிந்தவானவர். (௬௭)

மீண்டனவோவென்பர்விசும்புவிண்டுகக்
கீண்டனவோவென்பர்கீழுவோவென்பர்
பூண்டனபுரவியோபுதியகாற்றென்பர்
மாண்டனவுலகமென்றணங்கும்வாயினர். (௬௮)

ஏழுடைக்கடலினுந்தீவொரேழினும்
ஏழுடைமலையினுமுலகொரேழினும்
சூழுடையண்டத்தின்சுவர்களெல்லையா
ஊழியகாற்றெனத்திரிந்தவோவில. (௬௯)

உடைக்கடலேழினுமுலகமேழினும்
இடைப்படுந்தீவினுமலையொரேழினும்
அடைக்கலப்பொருளெனவரக்கன்வீசிய
படைக்கலமழைபடுதுளியின்பான்மைய. (௭0)

ஒறுத்துலகனைத்தையுமுழலுமோட்டிடை
இறுத்திலவிராவணனெறிந்தவெய்தன
அறுத்ததுந்தடுத்ததுமன்றியாரியன்
செறுத்தொருதொழிலிடைசெய்ததில்லையால். (௭௧)

விலங்கலும்வேலையுமேலுங்கீழரும்
அலங்கொளிதிரிதருமுலகனைத்தையும்
கலங்குறத்திரிந்ததோரூழிக்காலக்காற்
றிலங்கையையெய்தினவிமைப்பின்வந்தரோ. (௭௨)

இருவர் தேர்களிலுமுள்ள குதிரைகளின்றிறம்.

உய்த்துலகனைத்தினுமுழன்றசாரிகை
மொய்த்ததுகடலிடைமணலின்மும்மையால்
வித்தகர்கடவியவிசயத்தேர்ப்பரி
எய்த்திலவியர்த்திலவிரண்டுபோலவும். (௭௩)

## இராமன்தேரிலுள்ள இடிக்கொடியை இராவணனறுத்தெரிதல்.

இந்திரன்றேரின்மேலுயர்ந்தவெந்தொழில்
உந்தரும்பெருவலியுருமினேற்றினைச்
சந்திரனனையதோர்சரத்தினூற்றரை
சிந்தினனிராவணனெரியுஞ்செங்கணான். (எச)

சாய்ந்தவல்லுருமுபோயரவத்தாழ்கடல்
பாய்ந்தவல்லுருமெனமுழுங்கிப்பாய்தலும்
காய்ந்தபேரிரும்பின்வன்கட்டிகானுறத்
தோய்ந்தநீராமெனச்சுருங்கிற்றாழியே. (எரு)

### இராவணனது கடும்போர்.

எழுத்தெனச்சிதைவிலாவிராமன்றேர்ப்பரிக்
குழுக்களைக்கூர்ங்கணைக்குப்பையாக்கிநேர்
வழுத்தருமாதலிவயிரமார்பிடை
அழுத்தினன்கொடுஞ்சரமாறொடாறரோ. (எசு)

மண்டிலவரிசிலைவானவில்லொடும்
துண்டவெண்பிறையெனத்தோன்றத்தூவிய
உண்டைவெங்கடுங்கணையொருங்குமூடலால்
கண்டிலரிராமனையிமைப்பில்கண்ணினார். (எஎ)

தோற்றனனேயினியென்னுந்தோற்றத்தால்
ஆற்றல்சாலமரருமச்சமெய்தினார்
வேற்றலரார்த்தனர்மேலுங்கீழுரும்
காற்றியக்கற்றதுகலங்கிற்றண்டமே. (எஅ)

அங்கியுந்தன்னொளியடங்கிற்றார்கலி
பொங்கலதிமிர்த்தனவிசும்பிற்போக்கில
வெங்கதிர்தண்கதிர்விலங்கிமீண்டன
மங்குலினெடும்புனன்மழைவறந்ததால். (எகூ)

திசைசிலைக்கடகரிசெருக்குச்சிந்தின
அசைவிலவேலைகளார்க்கவஞ்சின
விசைகொடுவிசாகத்தைநெருக்கியேறினன்
குசனெனமேருவுங்குலுக்கமுற்றதே. (அ0)

வானரத்தலைவருமிளையமைந்தனும்
ஏனையத்தலைவனைக்காண்கிலேமெனக்
கானகக்கரியெனக்கலங்கினார்கடல்
மீனெனக்கலங்கினார்வீரர்வேறுளார். (அக)

நீணிறநிருதர்கோனெய்தநீதியிற்
சால்புடைமாதலிமார்பிற்றைத்தன
கோலினுமிலக்குவன்கோலமார்பின
வேலினும்வெம்மையேவிளைந்தவீரற்கும். (௮௨)

இராமனது கடும்போர்.

எய்தனசரமெலாமிமைப்பின்முந்துறக்
கொய்தனனகற்றிவெங்கோலின்கோவையால்
நொய்தெனவரக்கனைநெருங்கநொந்தன
செய்தனனிராகவனமரர்தேறினர். (௮௩)

வேறு.

தாணுடைநிரைபுரைகாமவைதொறுமக்
கோணுடைமலைநிகர்சிலையிடைகுறையச்
சேணுடைநிகர்கணைசிதறினனுணர்வோ
டூணுடையுயிர்தொறுமுறைவுறுமொருவன். (௮௪)

இராமன்தேரில் கருடன் கொடியாய் நிற்றல்.

படையுகவிமையவர்பருவரல்கெடவந்
திடையுறுதிசைதிசையிறுகுறலிறைவன்
அடையுறுகொடிமிசையணுகினனளவில்
கடையுகமுடிவெழுகடல்புரைகலுழன். (௮௫)

கயில்விரிவுறவருகவசமுமுருவிப்
பயில்விரிகுருதிகள்பருகிடவெயிலோ
டயில்விரிசுடுகணைகடவினனறிவின்
துயில்வுழியுணர்தருசுடரொளியொருவன். (௮௬)

திசையுறுதுகிலதுசெறிமழைசிதறும்
விசையுறுமுகிழதுவிரிதருசிரனோ
டிசையுறுகருவியினினிதுறுகொடியைத்
தசையுறுகணைகொடுதரையுறவிடலும். (௮௭)

பண்ணவனுயர்கொடியெனவொருபரவைக்
கண்ணகனுலகினைவலம்வருகலுழன்
நண்ணலுமிமையவர்நமதுறுகருமம்
எண்ணலமுனிவினினிவறினனெனவே. (௮௮)

இராமன்மீதிராவணன் தாமதாத்திரம்விடுதல்.

ஆயதொரமைதியினறிவினினறிவான்
நாயகனொருவனைநலிகிலதுணர்வான்

ஏயினனிருளுறு * தாமதமெனுமத்
தீய்வினை தருபடைதெறுதொழின்மறவோன். (அக)

தீமுகமுடையனசிலமுகமுதிரம்
தோய்முகமுடையனசுரர்முகமுடைய
பேய்முகமுடையனபிலமுகநுழையும்
வாய்முகம்வரியரவனையனவருவ. (கூ0)

ஒருதிசைமுதல்கடையொருதிசையளவும்
இருதிசையெயிறுறவருவனபெரிய
கருதியகருதியபுரிவனகனலும்
பருதியைமதியொடுபெருகுவபகழி. (கூக)

இருளொருதிசையொருதிசைவெயில்விரியும்
சுருளொருதிசையொருதிசைமழைதொடரும்
உருளொருதிசையொருதிசையுருமுராலும்
மருளொருதிசையொருதிசைசிலைவருடம். (கூஉ)

இனையனநிகழ்வுறவெழுவகையுலகும்
கனையிருள்கதுவிடவமரர்கள்கதற
வினையுறுதொழிலிடைவிரவலும்விமலன்
நினையுறுதகைமையினெறியுறுமுறையின். (கூந)

இராமன் சிவாத்திரம்விடுதல்.

கண்ணுதலொருவனதடுபடைகருதிப்
பண்ணவன்விடுதலுமதுநனிபருக
எண்ணுறுகனவினெனுணர்வெனவிமையில்
துண்ணெனுநிலையினிநெறிபடைதொலைய. (கூச)

வேறு.

விரிந்ததன்படைமெய்கண்டபொய்யெனவீய
எரிந்தகண்ணினனெயிற்றிடைமடித்தவாயினன்றன்
தெரிந்தவெங்கணைகங்கவெஞ்சிறையன்னதிறத்த
அரிந்தமன்றிருமேனிமேலழுத்திநின்றார்த்தான். (கூரு)

இராவணனசுராத்திரம்விடுதல்.

ஆர்த்துவெஞ்சினத்தாசுரப்படைக்கலமமரர்
வார்த்தையுண்டதின்னுயிர்களான்மறலிதன்வயிற்றைத்

* தாமதம் – ஓரத்திர விசேடம்.

தூர்த்தஇந்திரன் றனுக்குறுதொழிலதுதொடுத்துத்
தீர்த்தன்மேல்வரத்துரந்தனனுலகெலாந்தெரிய. (௯௬)

ஆசுரப்பெரும்படைக்கலமமரரையமரின்
ஏசுவிப்பதெவ்வுலகமுமெவரையும்வென்று
வீசுவெற்பிறத்துரந்தவெங்கணையதுவிசையின்
பூசுரர்க்கொருகடவுண்மேற்சென்றதுபோலாம். (௯௭)

அக்கினியாத்திரத்தால் இராமனசுராத்திரத்தை யழித்தல்.

நுங்குகின்றதிவ்வுலகையோர்நொடிவரையென்ன
எங்குநின்றுநின்றலமருமமரர்கண்டிமைப்ப
மங்குல்வல்லுருமேற்றின்மேலெரிமடுத்தென்ன
அங்கிதன்னெடும்படைதொடுத்திராகவனறுத்தான். (௯௮)

கூற்றுக்கோடினுங்கோடலகடலெலாங்குடிப்ப
நீற்றுக்குப்பையின்மேருவைநூறுவநெடிய
காற்றுப்பின்செலச்செல்வனவுலகெலாங்கடப்ப
நூற்றுக்கோடியம்பெய்தனனிராவணனொடியின். (௯௯)

என்னகைக்கடுப்போவென்பர்சிலர்சிலரிவையும்
அன்னமாயமேயம்பலவென்பரவ்வம்புக்
கின்னமுண்டுகொலிடமென்பர்சிலர்சிலரிகற்போர்
முன்னமித்தனைமுயன்றிலனென்பர்முனைவர். (௧00)

மறைமுதற்றனிநாயகன்வானினைமறைத்த
சிறையுடைக்கொடுஞ்சரமெலாமிமைப்பொன்றிற்றிரியப்
பொறைசிகைப்பொருந்தலைநின்றும்புங்கத்தினளவும்
பிறைமுகத்தடங்கடுங்கொடுஞ்சரங்கொண்டுபிளந்தான். (௧0௧)

இராவணன் மாயாத்திரம் விடுதல்.

அயன்படைத்தபேரண்டத்தினருந்தவமாற்றிப்
பயன்படைத்தவர்யாரினும்படைத்தவன்பல்போர்
வியன்படைக்கலந்தொடுப்பெனுனினியெனவிரைந்தான்
மயன்படைக்கலந்துரந்தனன்றயரதன்மகன்மேல். (௧0௨)

விட்டனன்விடுபடைக்கலம்வேரொடுமுலகைச்
சுட்டனன்னெனத்துணுக்கமுற்றமரருஞ்சுருண்டார்
கெட்டனம்மெனவானரத்தலைவருங்கிழிந்தார்
சிட்டர்தந்தனித்தேவனுமதனிலைதெரிந்தான். (௧0௩)

இராமன் காந்தர்ப்பாத்திரத்தால் மாயாத்திரமழித்தல்.

பாந்தட்பஃறலைப்பரந்தகன்புவியிடைப்பயிலும்
மாந்தர்க்கில்லையால்வாழ்வெனவருகின்றவதனைக்

காந்தர்ப்பம்மெனுங்கடுங்கொடும்படையினாற்கடந்தான்
ஏந்தற்பன்மணியெறுழ்வலித்திரள்புயத்திராமன். (௧0௪)

தாருகன்பண்டுதேவரைத்தகர்த்ததுதனிமா
மேருகந்தரம்புனைவதுவெயிலன்னவொளிய
தோருகந்தனிலுலகினின்றுருட்டினுமுருளாச்
சீருகந்ததுமுகந்ததுவானவர்சிரங்கள். (௧0௫)

இராவணன் தண்டாலெறிதல்.

பண்டுநான்முகன்படைத்ததுகனகனிப்பாரைத்
தொண்டுகொண்டதுமதுவெனுமவுணன்முன்றொட்ட
துண்டதென்வயினதுதூரந்துயிருண்பெனென்றோர்
தண்டுகொண்டெறிந்தானைந்தொடைந்துடைத்தலையான். (௧0௬)

பசும்புனற்பெரும்பரவைபண்டுண்டவன்பணிப்புற்
றசும்புபாய்கின்றதருக்கனிஞெளிர்கின்றதண்டம்
தசும்புபோலுடைந்தொழியுமென்றனைவருந்தளர
விசும்புபாழ்படவந்ததுமந்தரம்வெருவ. (௧0௭)

இராமனம்பேவித் தண்டழித்தல்.

கண்டதாமரைக்கண்ணனக்கடவுண்மாக்கதைதான்
அண்டர்நாயகனுயிரங்கண்ணினுமடங்காப்
புண்டரீகத்தின்முகையன்னபகர்முகம்விட்டான்
உண்டைநூறுடைநூறுபட்டுளதெனவுதிர்த்தான். (௧0௮)

இராவணன் மாயாத்திரம் விடுதல்.

சேயைநின்றவன்சிலைவலங்காட்டினன்றீராப்
பேயையென்பலதுரப்பதிங்கிவன்பிழையாமல்
ஆயதன்பெரும்படையொடுமடுகளத்தவிய
மாயையின்படைதொடுப்பெனென்றிராவணன்மதித்தான். (௧0௯)

பூசனைத்தொழில்புரிந்துதான்முறைமையிற்போற்றும்
ஈசனைத்தொழுதிருடியுஞ்சந்தமுமெண்ணி
ஆசைபத்தினுமந்தரப்பரப்பினுமடங்கா
வீசினன்செலவில்லிடைத்தொடைகொடுவிட்டான். (௧௧0)

மாயாத்திரச் செயல்.

மாயைபொத்தியவயப்படைவிடுதலும்வரம்பில்
காயமெத்தனையுளநெடுங்காயங்கள்கதுவ

ஆயமுற்றெழுந்தாரெனவார்த்தனரமரில்
தூயகொற்றவர்சுடுசரத்தான்முன்புதுணிந்தார். (ககக)

இந்திரற்கொருபகைஞனுமவற்கிளையோனும்
தந்திரப்பெருந்தலைவருந்தலைத்தலையோரும்
மந்திரச்சுற்றத்தவர்களும்வரம்பிலர்பிறரும்
அந்தரத்தினைமறைத்தனர்மழையுகவார்ப்பார். (ககஉ)

குடப்பெருஞ்செவிக்குன்றமுமற்றுளகுழுவும்
படைத்தமூலமாத்தானையுமுதலியபட்ட
விடைத்தெழுந்தனயானைதேர்பரிமுதல்வெவ்வே
றடைத்தவூர்திகளனைத்தும்வந்தவ்வழியடைய. (ககங)

ஆசிலப்பெருவெள்ளமென்றறிஞரேயறைந்த
காய்சினப்பெருங்கடற்படைகளப்பட்டவெல்லாம்
ஈசனிற்பெற்றவரத்தினுலெய்தியவென்னத்
தேசமுற்றவுஞ்செறிந்தனதிசைகளுந்திகைப்ப (ககச)

சென்றவெங்கணுந்தேவருமுனிவருஞ்சிந்த
வென்றதெங்களைப்போலும்யாம்விளிவதுமுளதே
இன்றுகாட்டுதுமெய்துமினெய்துமினென்னுக்
கொன்றகொற்றவர்தம்பெயர்குறித்தறைகூற. (ககரு)

பாரிடந்துகொண்டெழுந்தனபாம்பெனும்படியப்
பாரிடந்துணைந்தெழுந்தனமலையன்னபடிய
பேரிடங்கதுவரிதினிவிசும்பெனப்பிறந்த
பேரிடங்கரிற்கொடுங்குழையணிந்தனபேய்கள். (ககசா)

இ-ள். பாம்பு — வாசுகிமுதலியபாம்புகள், பார் — பூமியை, இடந்துகொண்டு — (தாங்குதலையொழிந்து) பிளந்துகொண்டு, எழுந்தனவெனும்படி — புறத்தேசீறியெழுந்தனவென்று கண்டோர்சொல்லும்படி, அப்பாரிடம் — அப்பூதங்கள், மலையன்ன — மலையையொத்த, படிய — உருவினவாகி, துணைந்தெழுந்தன — விரைந்தெழுந்தன, பேர் — (நீரில்) உலாவுகின்ற, இடங்கரின் — முதலையைப்போன்ற, கொடுங்குழை — வளைந்தவடிவனவாகிய குழைகளை, அணிந்தனபேய்கள்-அணிந்தனவாகிய பேய்கள், பேரிடம் — பூமியில், கதுவரிது — நாம்தங்குதலரிது, இனி — இனித்தங்குதல், விசும்பென — ஆகாயத்தின்கணுமென்று, பிறந்த—பிறந்தன;—எ-று.

பேரிடம் — அன்மொழித்தொகை. கதுவு — முதனிலைத் தொழிற்பெயர். பகைவராயினோர் கண்டமாத்திரையில் ஊக்கமழியுந்தோற்றத்தின் பெருமையுடையனவாகலின் அப்பாரிடமென்றார். மலை, இடங்கர், மெய்யுவமம்.

தாமசத்தினிற்பிறந்தவரறந்தெறுந்தகையர்
தாமசத்தினிற்செல்கிலாச்சதுமுகத்தவற்குத்
தாமசத்திரஞ்செய்பவர்பரிந்தனர்தளரத்
தாமசத்திரஞ்சித்திரம்பொருந்தினர்தயங்க.

இ-ள். தாமசத்தினில் — (பிரமனது) தாமசகுணத்தில், பிறந்தவர்— பிறந்தவர்களும், அறம் — அறங்களை, தெறுந்தகையர் — அழிக்குந்தன்மையுடையார்களுமாகிய அரக்கர்கள், தாம் — தாங்கள், அசத்தினில் — பொய்ந்நெறியில், செல்கிலா — ஒழுகுதலில்லாமல், சதுமுகத்தவற்கு — பிரமனுக்கு, உத்தமம் — சிறந்ததாகிய, சத்திரம் — யாகத்தை, செய்பவர் — செய்யுமுனிவர்கள், பரிந்தனர் — துன்புற்றவர்களாகி, தளர — ஊக்கமழிய, தாமம் — ஒளிபெற்ற, சத்திரம் — வாள்முதலிய கைவிடாப்படைகள், தயங்க — பிரகாசிக்க, சித்திரம்பொருந்தினர்-நானுவகையமைந்தனர்.-எ-று.

உத்தாமம் — நீட்டல். சத்திரஞ்சித்திரம் பொருந்தினர் என்பதில் இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. (ககஎ)

தாமவிந்துமீதெழுந்தவர்க்கிரட்டியின்றகையார்
தாமவிந்துவின்பிளவெனத்தயங்கும்வாளெயிற்றர்
தாமவிஞ்சையர்கடற்பெருந்தகையினர்தாளத்
தாமவிஞ்சையர்துவன்றினர்திசைதொறுந்தருக்கி.

இ-ள். தாமவிந்து — (முன்னடந்தபோரிலெல்லாம்) தாங்கள் இறந்து, மீது-விண்ணுலகத்தில்,எழுந்தவர்க்கு-உயர்ந்த அரக்கர்களிலும், இரட்டியின்றகையர் — இருபங்காயினபெருமையையுடையார்களும், தாமம்-ஒளியுள்ள, இந்துவின் பிளவென — சந்திரனது பிளவுபோல, தயங்கும்-விளங்கும், வாளெயிற்றர் — கூரியபல்லேயுடையார்களும், தாம் — பரவுகின்ற, அவிஞ்சையர் — மாயையுடையார்களும், கடல் — கடலைப்போலும், பெருந்தகையினர் — மிக்கவழகுடையார்களுமாகிய அசுரர்களும், தாளத் தாமம் — முத்துமாலையை யணிந்த, விஞ்சையர் — வித்தியாதரர்களும், திசைதொறும் — (போர்க்களத்தில்) எல்லாத்திக்குகளிலும், தருக்கி-செருக்குக்கொண்டு, துவன்றினர் — நிறைந்தனர்;—எ-று.

மீது — ஆகுபெயர். எழுந்தவர்க்கு — உருபுமயக்கம். (ககஅ)

தாமடங்கலுமுடங்குளையாளியுந்தகுவார்
தாமடங்கலுநெடுந்திசையுலகொடுதகைவார்
தாமடங்கலுங்கடலுமொத்தார்தருந்தகையார்
தாமடங்கலுங்கொடுஞ்சுடர்ப்படைகளுந்தரித்தார்.

இ-ள். தாம்-தாவுகின்ற, மடங்கலும்-சிங்கத்தையும், முடங்கு-மடங்கிய, உளை-பிடரின்கண்மிக்கமயிரையுடைய, யாளியும்-யாளியையும், தகுவார்-ஒப்பாரும், தாமடங்கலும் தாங்கள்யாவரும், நெடுந்திசையுலகொடு-

நெடியதிக்குப்பாலகர்களேயும் உலகத்துள்ள வீரர்களேயும், தகைவார்-போரில் தடுக்கவல்லாரும், தா-வலியையுடைய, மடங்கலும்-வடவைத்தீயையும், கடலும்-கடலேயும், ஒத்து-உருவத்தாலொப்பாகி, ஆர்தரும்-சமர்க்களமெங்கும் நிறைகின்ற, தகையார்-பெருமையுடையாருமாகிய அரக்கர்கள், தாம்-விளக்கமாகிய, மடங்கலும்-இடிகளேயும், கொடுஞ்சுடர்ப்படைகளும்-சுடருள்ள கொடியபடைகளேயும், தரித்தார்-தாங்கினின்றார். எ-று.

தாமமென்பதனீறுதொகுத்தல். ஒடு-இசைநிறை. (கககூ)

மாயாத்திரச் செயல்கண்ட விராமன் மாதலியை வினுதல்.

இனையதன்மையைநோக்கியவிந்திரைகொழுநன்
வினையமற்றிதுமாயமோவிதியதுவிளேவோ
வனையும்வன்கழலரக்கர்தம்வரத்தினுமற்றோ
நினைதியாமெனிற்பகரெனமாதலிநிகழ்த்தும். (க௨0)

மாதலியின் விடை.

இருப்புக்கம்மியற்கிழைநுழைபூசியொன்றியற்றி
விருப்பிற்கோடியால்விலைக்கெனும்பதடியின்விட்டான்
கருப்புக்கார்மழைவண்ணவக்கடுந்திசைக்களிற்றின்
மருப்புக்கல்லியதோளவன்மீளருமாயம். (க௨க)

வீக்குவாயிலில்வெள்ளெயிற்றரவின்வெவ்விடத்தை
மாய்க்குமாநெடுமந்திரந்தந்ததோர்வலியின்
நோய்க்குநோய்தருவினைக்குநின்பெரும்பெயர்நொடியின்
நீக்குவாய்நினைநினைக்குவார்பிறப்பென்னநீங்கும். (க௨௨)

இராமன் ஞானுத்திரம் விடுதல்.

வரத்தினுயினுமாயையினுயினும்வலியோன்
உரத்தினுயினுமுண்மையினுயினுமோடத்
துரத்தியாலெனஞானமாக்கடுங்கணை துரந்தான்
சிரத்தினுன்மறையிறைஞ்சவுந்தொடரவுஞ்சேயோன். (க௨௩)

மாயாத்திரம் அழிதல்.

துறத்தலாற்றுறுஞானமாக்கடுங்கணைதொடர
அறத்தலாதுசெல்லாதுநல்லறிவுவந்தணுகப்
பிறத்தலாற்றுறுபேதைதமைபிணிப்புறத்தம்மை
மறுத்தலாற்றந்தமாயையின்மாய்ந்ததம்மாயம். (க௨௪)

வேறு.

இராவணன் சூலமேவுதல்.

நீலங்கொண்டார்கண்டனுநேமிப்படையோனும்
மூலங்கொண்டார்கண்டகராவிழுடிவிப்பான்

காலங்கொண்டார்கண்டனமுன்னேகழிவிப்பான்
சூலங்கொண்டானண்டரையெல்லாந்தொழில்கொண்டான். (கஉ௫)

கண்டாகுலமுற்றுயிரமார்க்கின்றதுகண்ணின்
கண்டாகுலமுற்றும்பரயிர்க்கின்றதுவீரர்
கண்டாகுலமுற்றுஞ்சுடுமென்றக்கழல்வெய்யோன்
கண்டாகுதன்முன்செல்லவிசைத்துள்ளதுகண்டான். (கஉ௬)

இ-ள். கண்டாகுலம் — சிறந்தமணிகள், முற்று — சூழ, ஆயிரமார்க்கின்றது — பலவொலிப்பதும், கண்ணின் — தங்கள்கண்களாலே, கண்டு-பார்த்து, ஆகுலம் — துன்பத்தை, உற்று — அடைந்து, உம்பர் — தேவர்களால், அயிர்க்கின்றது — யாதாய்முடியுமோவென்று ஐயப்படுவதும், வீரர்கண் — இங்குநின்ற வீரர்களிடத்துள்ள, தா — வலியும், குலம் — ஊக்கமும் மேம்பாடுமாகிய திரணக்கூட்டத்தை, முற்றும் — பற்றற, சுடுமென்று — எரிக்குமென்றுகருதி, அக்கழல்வெய்யோன் — வெவ்வியவீரக்கழலையணிந்த அவ்விராவணன், கண் — நோக்குவோருடைய கண்கள், தாகுதன்முன் — தாவுதலுக்குமுன்னே, செல்ல — செல்லும்படி, விசைத்துள்ளது — விரைந்துவிட்டதுமாகிய சூலமென்னுந் தீயை, கண்டான் — ஸ்ரீராமபிரான் கண்டான்;— எ-று.

வலியையுணர்த்திநின்றதாவென்பதைச் சாரநின்றமையிற் குலமென்பதற்கு அஃதொழிந்த ஊக்கமும்மேம்பாடுமென்றும், சுடுமென்றமையால்-வலி ஊக்கமுதலியவற்றைத் திரணமென்றும், சூலத்தைத் தீயென்றுங்கூறினும். கழல்வெய்யோன் — குணந்தீயோரென்றாற் போலவந்த திணைவழுவமைதி. கழற்குவெம்மையாவது தன்னொலியால் அமரர்முதலியபகைஞரை யச்சுறுத்தல்-குலம். ஆகுபெயர். தாகுதலில்-கு-சாரியை.

எரியாநிற்கும்பஃறலைமூன்றும்மெரியஞ்சத்
திரியாநிற்கத்தேவர்களோடத்திரளோட
இரியாநிற்கும்மெவ்வுலகுந்தன்னொளியேயாய்
விரியாநிற்குந்நிற்கிலதார்க்கும்விழிசெல்லா. (கஉ௭)

செல்வாயென்னச்செல்லவிடுத்தானிதுதீர்த்தற்
கொல்வாய்நீயேவேறொருவர்க்கும்முடையாதால்
வல்வாய்வெங்கட்சூலமெனுங்காலனைவள்ளால்
வெல்வாய்வெல்வாயென்றனர்வானோர்மெலிகின்றார். (கஉ௮)

துனையும்வேகத்தாலுருமேறுந்துண்ணென்ன
வினையுங்காலிற்செல்வனதன்னைமறவாதே
நினையுஞ்ஞானக்கண்ணுடையார்மேனினையாதார்
வினையம்போலச்சிந்தினன்வீரன்சரம்வெய்ய. (கஉ௯)

எய்யும்மெய்யுந்தேவருடைத்திண்படையெல்லாம்
பொய்யுந்துய்யும்மொத்தவைசிந்தும்புவிதந்தான்

வய்யுஞ்சாபமொப்பெனவெப்பின்வலிகண்டான்
அய்யன்னின்றான்செய்வகையெல்லாமறிகில்லான். (கரு0)

மறந்தான்செய்கைமற்றெதிர்செய்யும்வகையெல்லாம்
துறந்தானென்னும்பர்துணுக்கந்தொடர்வுற்றார்
அறந்தானஞ்சிக்கால்குலையத்தானறியாதே
பிறந்தானின்றான்வந்ததுசூலம்பிறரஞ்ச. (கருக)

இராவணனேவியசூலம் இராமன்மார்பிற்பட்டுதிர்தல்.

சங்காரத்தாற்கண்டையொலிப்பத்தழல்சிந்தப்
பொங்காரத்தான்மார்பெதிரோடிப்புகலோடும்
வெங்காரத்தான்முற்றுமுணிந்தான்வெகுளிப்பே
ருங்காரத்தானுக்கதுபன்னூறதிராகி. (கருஉ)

ஆர்ப்பாராரனுரச்சமுமற்றாரலர்மாரி
தூர்ப்பாரானார்துள்ளல்புரிந்தார்தொழுகின்றார்
தீர்ப்பாய்நீயேதீயெனவேறாய்வருதீமை
பேர்ப்பாய்போலாமென்றனர்வானோருயிர்பெற்றார். (கருரு)

இராவணனிராமனை எவனுயிருக்கலாமென நினைத்தல்.

வென்றானென்றேயுள்ளம்வியந்தான்விடுசூலம்
பொன்றானென்னிற்போகலதென்னும்பொருள்கொண்டான்
ஒன்றாமுங்காரத்திடையுக்கோடுதல்காணு
நின்றானந்நாள்வீடணனார்சொன்னினைவுற்றான். (கருச)

சிவனோவல்லனான்முகனல்லன்திருமாலாம்
அவனோவல்லன்மெய்வரமெல்லாமடுகின்றான்
தவனோவென்னிற்செய்துமுடிக்குந்தரனல்லன்
இவனோதானவ்வேதமுதற்காரணனென்றான். (கருரு)

யாரேனுந்தானாகுகயானென்றனியாண்மை
பேரேனின்றேவென்றிமுடிப்பென்புகழ்பெற்றேன்
நேரேசெல்லுங்கொல்லுமெனிற்றானியிர்வென்றி
வேரேநிற்கும்மீள்கிலனென்னாவிடலுற்றான். (கருசு)

இராவணன் நாகாத்திரம் விடுதல்.

* நிருதித்திக்கின்னின்றவன்வென்றிப்படைநெஞ்சில்
கருதித்தன்பால்வந்ததவன்கைக்கொடுகாலன்
விருதிற்சிந்தும்வில்லின்வலித்துச்செலவிட்டான்
குருதிச்செங்கண்டீயுகனாலங்குலைவெய்த. (கருஎ)

---

* நிருதித்திக்கில் நின்றவன் — சங்கபாலனென்னு நாகன்.

வய்யந்துஞ்சும்வன்பிடர்நாகமனமஞ்சப்
பய்யுங்கோடிப்பஃறலையோடுமளவில்லா
மெய்யும்வாயும்பெற்றனமேருக்கிரிசால
நொய்தென்றேறுந்தன்மையவானநுழைகின்ற. (கரு-அ)

வாய்வாய்தோறுமாகடல்போலும்விடவாரி
போய்வார்கின்றபொங்கனல்கண்ணிற்பொழிகின்ற
மீய்வாயெங்கும்வெள்ளிடையின்றியிடைகின்ற
பேய்வாயெங்கும்வெள்ளெயிறெங்கும்பிறழ்கின்ற. (கருகூ)

கடித்தேதீருங்கண்ணகன்ஞாலங்கடலோடும்
குடித்தேதீரும்மென்றுலகெல்லாங்குலைகின்ற
முடித்தானன்றேவெங்கணரக்கன்முழுமுற்றும்
பொடித்தானுகும்மிப்பொழுதென்னப்புகைகின்ற. (கசா0)

நாகாத்திரத்தினை இராமன் காருடாத்திரத்தாலழித்தல்.

அவ்வாறுற்றவாடரவங்காலகல்வாயால்
கவ்வாநின்றமால்வரைமுற்றும்மவைகண்டான்
எவ்வாய்தோறும்மெய்தினவென்னுவெதிரெய்தான்
தவ்வாமெய்ம்மைக்காருடமென்னும்படைதன்னால். (கசாக)

காருடாத்திரத்திறம்.

எவணைத்தன்மைத்தேகினநாகத்தினமென்னப்
பவணத்தன்னவெஞ்சிறைவேகத்தொழில்பம்பச்
சுவணக்கோலத்துண்டநகந்தொல்சிறைவேல்போல்
உவணப்புள்ளேயாயினவெல்லாமுலகெல்லாம். (கசாஉ)

வேறு.

அளக்கரும்புள்ளினமாயவாரழல்
துளக்கரும்வாய்தொறுமெரியத்தொட்டன
இளக்கருமிலங்கைதீயிடுதுமீண்டென
விளக்கினமெடுத்தனபோன்றவிண்ணின. (கசாரு)

குயின்றனசுடர்மணிக்கனலின்குப்பையின்
பயின்றனகுடர்சுடர்ப்பதுமநாளங்கள்
வயின்றொறுங்கவர்ந்தெனத்துண்டவாள்களால்
அயின்றனபுள்ளினமுகிரினள்ளின. (கசாசா)

எவ்வகையுரகமுமிரியல்போயின
நொவ்வியலுற்றெனநொடிப்பதென்னினி
அவ்வயினரனணியடலராவுமே
கவ்வையினுழந்தனசிறையின்காற்றினே. (கசாரு)

ஆயிடையரக்கனுமழன்றநெஞ்சினன்
தீயிடைப்பொடிந்தெழுமுயிர்ப்பன்சீற்றத்தன்
மாயிருஞாலமும்விசும்பும்வைப்பறத்
தூயினன்சுடுசரமுருமின்றோற்றத்த. (௧௪௬)

அங்கவெங்கடுங்கணையயிலின்வாய்தொறும்
வெங்கணைபடப்படவிசையின்வீழ்ந்தன
புங்கமேதலையெனப்புக்கபோலுமால்
துங்கவாளரக்கனதுரத்திற்றோன்றல. (௧௪௭)

இராவணனது தளர்ச்சியும் இராமனதூக்கமும்.

ஒக்கநின்றெதிரமருழக்குங்காலையில்
முக்கணான்றடவரையெடுத்தமொய்ம்பற்கு
நெக்கனவிஞ்சைகணிலையிற்றீர்ந்தன
மிக்கனவிராமற்குவலியும்வீரமும். (௧௪௮)

இராவணன்றலையை இராமனறுத்தல்.

வேதியர்வேதத்துமெய்யன்வெய்யவர்க்
காதியனணுகியவற்றநோக்கினான்
சாதியினிமிர்ந்ததோர்தலையைத்தள்ளினான்
பாதியின்மதிமுகப்பகழியொன்றினால். (௧௪௯)

மேருவின்கொடுமுடிவீசுகாலெறி
போரிடையொடிந்துபோய்ப்புணரிபுக்கென
ஆரியன்சரம்படவரக்கன்வன்றலை
நீரிடைவிழுந்ததுநெருப்பொடன்றுபோய். (௧௫0)

இராவணன் சிரஞ்சிந்தியதுகண்ட தேவராரவாரித்தல்.

குதித்தனர்பாரிடைக்குன்றுகூட்டற
மிதித்தனர்வடகமுந்தூசும்வீசினர்
துதித்தனர்பாடினராடித்துள்ளினர்
மதித்தனரிராமனைவானுளோரெலாம். (௧௫௧)

இராவணன் தலை மீட்டு முளைத்தல்.

இறந்ததோருயிருடன்றருமத்தீட்டினால்
பிறந்துளதாமெனப்பெயர்த்துமோர்தலை
மறந்திலதெழுந்ததுமடித்தவாயது
சிறந்ததுதவமலாற்செயலுண்டாகுமோ. (௧௫௨)

புதிதாயெழுந்த தலை இராமனை இகழ்தல்.

கொய்ததுகொய்திலதென்னுங்கொள்கையின்
எய்தவந்தக்கணத்தெழுந்ததோர்சிரம்

செய்தவெஞ்சினத்துடன்சிறக்குஞ்செல்வனை
வய்ததுதெழித்ததுமழையினார்ப்பது. (கருங)

அற்றுக் கடலில்விழுந்ததலையு மாரவாரித்தல்.

இடந்ததுகிரிக்குவடென்னவெங்கணும்
படர்ந்ததுகுரைகடல்பருகும்பண்பது
விடந்தருவிழியதுமூழ்கிவேலையில்
கிடந்ததுமார்த்ததுமழையின்கேழது. (கருச)

விழுத்தினன்சிரமெனும்வெகுளிமீக்கொள
வழுத்தினவுயிர்களின்முதலின்வைத்ததோ
ரெழுத்தின்வன்றோள்களினேழொடேழுகோல்
அழுத்தினனசனியேறயிர்க்குமார்பினன். (கருரு)

இராவணன் கரத்தினை இராமனறுத்தல்.

தலையறிற்றருவதோர்தவமுமுண்டென
நிலையுறுநேமியானறிந்துநீசனைக்
கலையுறுதிங்களின்வடிவுகாட்டிய
சிலையுறுகையையுந்தலத்திற்சேர்த்தினன். (கருசு)

கரமுமீண்டுமுளைத்தல்.

கொற்றவெஞ்சரம்படக்குறைந்துபோனகை
பற்றியகிடந்ததுசிலையைப்பாங்குற
மற்றொர்கைப்பிடித்ததுபோலவவ்விய
தற்றகைப்பிறந்ததையாரதோர்குவார். (கருஎ)

பொன்கையிற்றார்தியான்வலியைப்போக்குவான்
முன்கையிற்றுறுமயிர்முள்ளிற்றுள்ளுறு
பின்கையிற்கொண்டனவில்லைவிட்டிலா
வன்கையைத்தன்கையின்வலியின்வாங்கினன். (கருஅ)

இராவணன் அற்ற கரத்தினை யெடுத்து மாதலிமீதெறிதல்.

விளங்கொளிவயிரவாளரக்கன்வீசிய
தளங்கிளர்தடக்கைதன்மார்பிற்றாக்கலும்
உளங்கிளர்பெருவலியுலைவின்மாதலி
துளங்கினன்வாய்வழியுதிரந்தூவுவான். (கருகூ)

மாதலிமீ திராவணன் தோமரமெறிதல்.

மாமரத்தார்கையால்வருந்துவானையோர்
தோமரத்தாலுயிர்தொலைப்பத்தூண்டினன்
தாமரத்தாற்பொராத்தகைகொள்வாட்படை
காமரத்தாற்சிவன்கரத்துவாங்கினன். (கசூ0)

இ-ள். தாம்-தாவுகின்ற, அரத்தால் - அரத்தினல், பொரா-அராவப்படாத, தகைகொள்-பெருமையாகிய கூர்படைத்த, வாட்படை - வாளாயுதத்தை, காமரத்தால்-தான்பாடியஇசைப்பாட்டால், சிவன்கரத்து-சிவனது கையினின்று,வாங்கினன் - வாங்கியஇராவணன், மாமரத்து - வில்லினை, ஆர்-பொருந்திய, கையால்-கையினல், வருந்துவானை-வருந்துகின்றமாதலியை, ஓர்தோமரத்தால் - ஓர்பெருஞ்சவளப்படையால், உயிர்தொலைப்ப-உயிரைத் தொலைக்கும்படி, தூண்டினன்-எறிந்தான்;—எ-று.

போர்க்கு, மரத்தானகிய வேலையபடைகளினும் சிறந்ததாகலின் வில்லினை மாமரமென்றார். மரம் - ஆகுபெயர், அரத்துக்குத் தாவுதலாவது அராவாநிற்புழி அதுசென்று மீளுதலாகிய புடைபெயர்ச்சி. (கசுo)

வே று.

இராமன்தோமரத்தினை அம்பாலழித்தல்.

மாண்டதின்றேமாதலிவாழ்வென
மூண்டவெம்படைசிந்தமுடுக்கினன்
ஆண்டவில்லியோரைம்முகவெங்கணை
தூண்டினன்றுகளானதுதோமரம். (கசுக)

இராவணன் சிரமுதலியவைகளை இராமனறுத்தல்.

ஒய்வகன்றதொருதலைநூறறப்
போயகன்றுபுரளப்பொருகணை
ஆயிரந்தொடுத்தானறிவின்றனி
நாயகன்கைக்கடுமைநடத்துவான். (கசுஉ)

நீர்த்தரங்கங்கடோறுநிலந்தொறும்
சீர்த்தமால்வரைதோறுந்திசைதொறும்
பார்த்தபார்த்தவிடந்தொறும்பஃறலை
ஆர்த்துவீழ்ந்ததசனிகள்வீழ்ந்தென. (கசுங)

தகர்ந்துமால்வரைசாய்வுறத்தாக்கின
மிகுந்தவான்மிசைமீனமலைந்தன
புகுந்தமாமகரக்குலம்போக்கற
முகந்தவாயிற்புணரியைமுற்றுற. (கசுச)

பொழுதுநீட்டியபுண்ணியம்போனபின்
பழுதுசெல்லுமன்றேமற்றைப்பண்பெலாம்
தொழுதுசூழ்வனமுன்னின்றுதோன்றவே
கழுதுசூழ்ந்தவிராவணன்கண்ணெலாம். (கசுரு)

வாளும்வேலுமுலக்கையும்வச்சிரக்
கோளுந்தண்டுமழுவெனுங்கூற்றமும்

தோளின்பத்திகடோறுஞ்சுமந்தன
மீளிமொய்ம்பனுருமெனவீசினன். (கசுசு)

அனையசிந்திடவாண்டகைவீரனும்
வினையமென்னினியாதுகொல்வெல்லுமா
நினைவெனென்னநிசாசரன்மேனியைப்
புனைவென்வாளியினுலென்றுபொங்கினன். (கசுஎ)

மஞ்சரங்கியமார்பினுந்தோளினும்
நஞ்சரங்கியகண்ணினுநாவினும்
வஞ்சன்மேனியைவார்கணையட்டிய
பஞ்சரம்மெனலாம்வகைபண்ணினன். (கசுஅ)

வாய்நிறைந்தனகண்கண்மறைந்தன
மீய்நிறங்களினெங்குமிடைந்தன
தோய்வுறுங்கணைசெம்புனறோய்ந்தில
போய்நிறைந்தனவண்டப்புறமெலாம். (கசுக)

இராமனம்பாலிராவணன் அயர்ந்து நடுங்கல்.

மயிரின்காறுறும்வார்கணைமாரிபுக்
குயிருந்தீரவுருவினவோடலும்
செயிருஞ்சீற்றமுநிற்கத்திறநிரிந்
தயர்வுதோன்றத்துளங்கியழுங்கினன். (கஎO)

வாரிநீர்நின்றெதிர்மகரம்படச்
சோரிசோரவுணர்வுதுளங்கினன்
தேரின்மேலிருந்தான்பண்டுதேவர்தம்
ஊரின்மேலும்பவனியுலாவுவான். (கஎக)

இராவணன் சாரதிதேரினை விலக்கி நிறுத்தல்.

ஆர்த்துக்கொண்டெழுந்தும்பர்களாடினர்
வேர்த்துத்தீவினைவெம்பிவிழுந்தது
போர்த்துப்பொய்த்தனனென்றுபொலன்கொடேர்
பேர்த்துச்சாரதிபோயினன்பின்றுவான். (கஎஉ)

கய்துறந்தபடையினன்கண்ணகன்
மெய்துறந்தவுணர்வினன்வீழ்தலும்
எய்திறந்தவிர்ந்தானிமையோர்களை
உய்திறந்துணிந்தானறமுன்னுவான். (கஎங)

மாதலி இராவணனைக் கொல்லச்சொல்லுதலும் இராமன்தடுத்தலும்.

தேறினற்பின்னையாருஞ்செயற்கரி
தாறுதானுற்றபோழ்தேயுயர்தவன்

நூறுவாயெனமாதலிநூக்கினன்
ஏறுசேவகனும்மிதியம்பினன். (கஎச)

படைதுறந்துமயங்கியபண்பினன்
இடைதெறும்படிபார்த்திகனீதியின்
நடைதுறந்துயிர்கோடலுநன்மையோ
கடைதுறந்ததுபோரென்கருத்தென்றான். (கஎரு)

இராவணன் களைநீங்கியெழுந்து சாரதியைக்கடிதல்.

கூவிரஞ்செறிபொற்கொடித்தேரொடும்
போவரஞ்சினரன்னதொர்போழ்தினின்
ஏவரஞ்சலியாதவரெண்ணுடைத்
தேவரஞ்சவிராவணன்றேறினன். (கஎசு)

உறக்கநீங்கியுணர்ச்சியுற்றானென
மறக்கண்வஞ்சனிராமனைவான்றிசைச்
சிறக்குந்தேரொடுங்கண்டிலன்சீற்றத்தீப்
பிறக்கநோக்கினன்பின்னுறநோக்கினன். (கஎஎ)

தேர்திரித்தனைதேவருங்காணவே
வீரவிற்கையிராமற்குவெண்ணகை
பேரவுய்த்தனையேபிழைத்தாயெனாச்
சாரதிப்பெயரோனைச்சலிப்புறா. (கஎஅ)

இராவணன் சாரதியை வாளால் வெட்டமுயறலும்
அவன் நடந்தது கூறலும்.

தஞ்சநானுனைத்தேற்றத்தரிக்கிலா
வஞ்சநீபெருஞ்செல்வத்துவைகினை
அஞ்சினனெனச்செய்தனையாதலான்
உஞ்சுபோதிகொலாமென்றுருத்தெழா. (கஎகூ)

வாள்கடைக்கணித்தோச்சலும்வந்தவன்
தாள்கடைக்கணியாத்தலைதாழ்வுற
மூள்கடைக்கடுந்தீயின்முனிவொழி
கோள்கடைக்கணித்தென்றவன்கூறுவான். (கஅO)

ஆண்டொழிற்றணிவோய்நனையாண்டிறை
ஈண்டநிற்றிடினையனேனின்னுயிர்
மாண்டதிக்கணமென்றிடர்மாற்றுவான்
மீண்டதித்தொழிலெம்வினைமெய்ம்மையால். (கஅக)

ஓய்வுமூற்றமுநோக்கியுயிர்ப்பொறைச்
சாய்வுநீக்குதல்சாரதிதன்மைத்தால்

மாய்வுநிச்சயம்வந்துழிவாளிஞல்
காய்வுதக்கதன்றூற்கடைகாண்டியால். (கஅஉ)

பின்னுமிராவணன் இராமனை யெதிர்த்தல்.

என்றிறைஞ்சலுமெண்ணியிரங்கிஞன்
வென்றியந்தடந்தேரினைமீட்கெனச்
சென்றெதிர்ந்ததுதேருமத்தேர்த்திசை
நின்றவஞ்சனிராமனைநேர்வுறு. (கஅந)

கூற்றின்வெங்கணைகோடியின்கோடிகள்
தூற்றிஞன்வலிமும்முறைதோற்றிஞன்
வேற்றொர்வாளரக்கன்னெனவெம்மையால்
ஆற்றிஞன்செருக்கண்டவரஞ்சிஞர். (கஅச)

இராவணன் வில் துணிபடல்.

எல்லுண்டாகினெருப்புண்டெனுமிதச்
சொல்லுண்டாயதுபோலவன்றோளிடை
வில்லுண்டாகின்வெலற்கரிதாமெனுச்
செல்லுண்டாலன்னதோர்கணைசிந்திஞன். (கஅரு)

நாரணன்படையாகிநயப்புறுப்
பாரணங்கினைத்தாங்குறுபல்வகை
வாரணங்களைவென்றவன்வார்சிலை
ஆரணங்கையிருதுணியாக்கிஞன். (கஅசு)

அயன்படைத்தவில்லாயிரம்பேரிஞன்
வியன்படைக்கலத்தாலற்றுவீழ்தலும்
உயர்ந்துயர்ந்துகுதித்தனரும்பரார்
பயன்படைத்தனம்பலிறவத்தாலென்றூர். (கஅஎ)

இராவணன் வேறுவில்லெடுத்தலும் அவைகளை இராமனழித்தலும்.

மாறிமாறிவரிசிலைவாங்கிஞன்
நூறிஞூறிஞெடையிருநூறவை
வேறுவேறுதிசையுறவெங்கணை
நூறிநூறியிராமனுறுக்கிஞன். (கஅஅ)

இருப்புலக்கைவேறண்டுகோலீட்டிவாள்
நெருப்புலக்கவருநெடுங்கப்பணம்
திருப்புலக்கவுய்த்தான்றிசையானையின்
மருப்புலக்கவழுங்கியமார்பிஞன். (கஅகூ)

அவையனைத்துமறுத்தகன்வேலையிற்
குவையனைத்துமெனக்குறித்தான்குறித்

திவையனைத்துமிவனைவெல்லாவென
நவையனைத்துந்துறந்தவனுடினன். (ககூ0)

கண்ணினுண்மணியூடுகழிந்தன
எண்ணினுண்மணலிற்பலவெங்கணை
புண்ணினுண்ணுழைந்தோடியபுந்தியோர்
எண்ணினுண்ணியவென்செயற்பாற்றெறனு. (ககூக)

இராமன் பிரமாத்திரம் விடுதல்.

நாரணன்றிருவுந்தியினான்முகன்
பாரவெம்படைவாங்கியிப்பாதகன்
மாரினெய்வெனென்றெண்ணிவலித்தனன்
ஆரியன்னவனுவியகற்றுவான். (ககூஉ)

முந்திவந்துலகீன்றமுதற்பெயர்
அந்தணன்படைவாங்கியருச்சியாச்
சுந்தரன்சிலைநாணிற்றொடுப்புறு
மந்தரம்புரைதோளுறவாங்கினன். (ககூங)

புரஞ்சுடப்பண்டமைத்ததுபொற்பணை
மரந்தொளைத்ததுவாலியைமாய்த்துள
தரஞ்சுடச்சுடர்நெஞ்சினரக்கர்கோன்
உரஞ்சுடச்சுடரோன்மகனுந்தினன். (ககூச)

காலும்வெங்கனலுங்கடைகாண்கிலா
மாலுங்கொண்டவடிக்கணைமாமுக
நாலுங்கொண்டுநடந்ததுநான்முகன்
மூலமந்திரந்தன்னொடுமூட்டலால். (ககூரு)

ஆழிமால்வரைக்கப்புறத்தப்புறம்
பாழிமாகடலும்வெளிபாய்ந்ததால்
ஊழிஞாயிறுமின்மினியொப்புற
வாழிவெஞ்சுடர்பேரிருள்வாரவே. (ககூசு)

அக்கணத்தினயன்படையாண்டகைச்
சக்கரப்படையோடுந்தழீஇச்சென்று
புக்கதக்கொடியோனுரம்பூமியும்
திக்கனைத்தும்விசும்புந்திரிந்தவே. (ககூஎ)

வேறு.

இராவணனுயிரிழத்தல்.

முக்கோடிவாழ்நாளுமுயன்றுடையபெருந்தவமுமுதல்வன்முன்னாள்
எக்கோடியாராலும்வெலப்படாயெனக்கொடுத்தவரமுமேனைத்

திக்கோடுமுலகனைத்துஞ்செருக்கடந்தபுயவலியுந்தின்றுமார்பில்
புக்கோடியுயிர்பருகிப்புறம்போயிற்றிராகவன்றன்புனிதவாளி. (௧௬௮)

இராவணனைக்கொன்றவம்புமீட்டு மிராமன்றூணியுறல்.

ஆர்க்கின்றவானவருமந்தணருமுனிவர்களுமாசிகூறித்
தூர்க்கின்றவலர்மாரிதொடரப்போய்ப்பாற்கடலிற்றூய்நீராடித்[சென்று
தேர்க்குன்றவிராவணன்றன்செழுங்குருதிப்பெரும்பரவைத்திரைமேற்
கார்க்குன்றமனையான்றன்கடுங்கணைப்புட்டிலினடைவெட்கரந்ததம்மா. ()

கார்நின்றமழைநின்றுமுருமுதிர்வதெனத்திணிதோட்காட்டினின்றும்
தார்நின்றமலைநின்றும்பணிக்குலமுமணிக்குலமுந்தகர்ந்துசிந்தப்
போர்நின்றவிழிநின்றும்பொறிநின்றுபுகையோடுங்குருதிபொங்கத்
தேர்நின்றுநெடுநிலத்துச்சிரமுங்கீழ்ப்படவிழுந்தான்சிகரம்போல்வான்.()

இராவணன் முகப்பொலிவு.

வெம்மடங்கல்வெகுண்டனையசினமடங்கமனமடங்கவினையம்வீயத்
தெம்மடங்கப்பொருதடக்கைச்செயலடங்கமயலடங்கவாற்றறேயத்
தம்மடங்குமுனிவரையுந்தலையடங்கநிலையடங்கச்சாய்த்தநாளின்
மும்மடங்குபொலிந்தனவம்முறைதுறந்தானுயிர்துறந்தமுகங்களம்மா. ()

இராமனிரதத்தினைக்கீழிறக்குவித்து இராவணனைப்பார்த்தல்.

பூதலத்ததாக்குவாயாகவினிப்பொலந்தேரையென்றபோதின்
மாதலிப்பேரவன்கடவமண்டலத்தினப்பொழுதேவருதலோடும்
மீதலைத்தபெருந்தாரைவிசும்பளப்பக்கிடந்தான்றன்மேனிமுற்றும்
காதலித்தவுருவாகியநம்வள்ளர்க்குங்கண்ணுளன்றெறியக்கண்டான். ()

மாதலியைத் தேரினை யிந்திரனிடங் கொடுபோவெனல்.

தேரினைநீகொடுவிசும்பிற்செல்கென்ன மாதலியைச்செலுத்திப்பின்னர்ப், பாரிடமீதினினணுகித்தம்பியொடும் படைத்தலைவர் பலருஞ்சுற்றப், போரிடைமீண்டொருவருக்கும்புறங்கொடாப்போர்வீரன்பொருது வீழ்ந்த,சீரினையேமனமுவப்பவுருமுற்றுந்திருவாளன்றெறியக்கண்டான்.

* புலமேலுஞ்செலற்கொத்துப்பொதுநின்றசெல்வத்தின்புன்மைத்தன்
† நிலமேலுமினியுண்டோநீர்மேலைக்கோலமெனுநிலைமைத்தன்றே [மை
தலைமேலுந்தோண்மேலுந்தடமுதுகிற்படர்புயத்துந்தாவியேறி
மலைமேனின்றூடினபோலாடினவால்வானரங்கள்வரம்பிலாத. (௨0௪)

தோடுழுத நறுந்தொடையற் றொகையுழுத கிளைவண்டின் சுழியத் தொங்கல், பாடுழுத படர்வெரிநின் பணியுழுத வணிநிகர்ப்பப் பணைக்கை

* அலைமேவுங்கடல்புடைசூழவனியெலாங்காத்தளிக்குமடற்கைவீரன்
† சிலைமேவுங்கடுங்கணையாற் படுகளத்தே மனத்தீமை சிதைந்து வீழ்ந்தோன்-எ-ம்-பாடம்.

யானைக், கோடுழுத நெடுந்தழும்பின் குவைதழுவியெழுமேகக் குழுவின்
கோவைக், காடுழுத கொழும்பிறையிற் கறைகழன்று கிடந்தனபோற்
கிடக்கக்கண்டான். (உ0ரு)

வேறு.

இராமன் முறுவலித்துரைத்தல்.

தளிரியல்பொருட்டின்வந்தசிற்றமுந்தருக்கினேன்றன்
கிளரியலுருவினேடுங்குழிப்புறக்கிளர்ந்துதோன்றும்
வளரியல்வடுவிற்செம்மைத்தன்மையுமருவகின்ற
முளரியங்கண்ணன்மூரன்முறுவலன்மொழிவதானான். (உ0சு)

வென்றியாலுலகமூன்றுமெய்ம்மையான்மேவினலும்
பொன்றியார்கின்றதோளைப்பொதுவறநோக்கும்பொற்பும்
குன்றியாசுற்றதன்றேயிவனெதிர்குறித்தபோரில்
பின்றியான்முதுகிற்பட்டபிழம்புளதழும்பினம்மா. (உ0எ)

கார்த்தவீரியனென்பானற்கட்டுண்டானென்னக்கற்கும்
வார்த்தையுண்டதனைக்கேட்டுநாணுறுமனத்தினேற்குப்
போர்த்தலைப்பிறகிட்டேற்றபுண்ணுடைத்தழும்புபோலாம்
நேர்த்ததுங்காணலுற்றவீசனேரிருக்கைநிற்க. (உ0அ)

மாண்டொழிந்துலகினிற்கும்வயங்கிசைமுயங்கமாட்டா
தூண்டொழிலுகந்துதெவ்வர்முறுவலென்புகழையுண்ண
பூண்டொழிலுடையமார்பாபோர்புறங்கொடுத்தோர்போன்ற
ஆண்டொழிலோரிற்பெற்றவெற்றியுமவத்தமென்றான். (உ0கூ)

இராமற்கு விபீடணன் சமாதானமுரைத்தல்.

அவ்வுரைக்கிறுதிநோக்கிவீடணனருவிக்கண்ணன்
வெவ்வுயிர்ப்போடுநீண்டவிம்மலன்வெதும்புநெஞ்சன்
செவ்வியிற்றொடர்ந்தவல்லசெப்பலைசெல்வவென்று
எவ்வுயிர்ப்பொறையுநல்கியிரங்கிநின்றிணையசொன்னான். (உக0)

ஆயிரந்தோளினானும்வாலியுமரிதினைய
மேயினவென்றிவிண்ணோர்சாபத்தின்விளைந்தமெய்ம்மை
தாயினுந்தொழத்தக்காண்மேற்றங்கியகாதற்றன்மை
நோயுகின்முனிவுமல்லால்வெல்வரோநுவலற்பாலார். (உகக)

நாளுதனையுமோடிநண்ணலார்காண்கிலாமல்
மீளுகுன்றம்போலும்பெருந்திசையெல்லையானைக்
கோளுதனையும்புக்குக்கொடும்புறத்தழுந்துபுண்ணின்
பாளுதன்றித்தெவ்வர்படைக்கலம்பட்டென்செய்யும். (உகஉ)

அப்பணையனைத்துமார்புக்கணியெனக்கிடந்தவீரக்
கைப்பனைமுழங்கமேனுளமரிடைக்கிடைத்தகாலன்

துப்பணை வயிரவாளிவிசையினுங்காலின்ருேன்றல்
வெப்பணை குத்தினுலும்வெரிநிடைப்போயவன்றே. (உகங)

அவ்வடுவன்றியிந்தவண்டத்தும்புறத்துமான்ற
தெவ்வடுபடைகளஞ்சாதிவன்வயிற்செல்லிற்றேவ
வெவ்விடமீசன்றன்னைவிழுங்கினும்பறவைவேந்தை
அவ்விடநாகமெல்லாமணுகினுமணுகலாற்ரு. (உகச)

வென்றியாய்பிறிதுமுண்டேவேலைசூழ்ஞாலமாண்டோர்
பன்றியாயெயிற்றுக்கொண்டபராபரன்முதலபல்லோர்
என்றியாமிடுக்கண்டீர்வதென்கின்ருரிவனினுன்ஞல்
பொன்றியானென்றபோதும்புலப்படார்பொய்கொலென்பார். (உகரு)

அன்னதோவென்னுவீசனையமுநானுநீங்கித்
தன்னதோளிணையைநோக்கிவீடணுதக்கதன்ருல்
என்னதோவிறந்துளார்மேல்வயிர்த்தனீயிவனுக்கீண்டு
சொன்னதோர்விதியினுலேகடன்செயத்துணிதியென்ருன். (உகசு)

அவ்வகையருளிவள்ளலனைத்துலகங்களோடும்
எவ்வகையுள்ளதேவர்யாவருமிரைத்துப்பொங்கிக்
கவ்வையிற்றீர்ந்தார்வந்துவீழ்கின்ருர்தம்மைக்காணச்
செவ்வையினவர்முன்சென்ருன்வீடணனிதனைச்செய்தான். (உகஎ)

இராமன் கட்டளையால் விபீடணன் இராவணன் மெய்யில் விழுந்து புலம்பல்.

போழ்ந்தெழவரக்கன்செய்தபுன்ருெழில்பொறையிற்ருமால்
வாழ்ந்தநீயிவனுக்கேற்றவரன்முறைவகுத்தியென்னத்
தாழ்ந்ததோர்கருணைதன்னுற்றலைமகனருளத்தள்ளி
வீழ்ந்தனனவன்மேல்வீழ்ந்தமலையின்மேன்மலைவீழ்ந்தென்ன. (உகஅ)

ஓவருமுலகத்தெல்லாவுயிர்களுமெரியினெஞ்சின்
தேவருமுனிவர்தாமுஞ்சிந்தையினிரக்கஞ்சேரத்
தாவரும்பொறையினுன்றனறிவினுற்றகைக்கநின்ற
யாவருந்துயரந்தீரவரற்றினன்பகுவாயார. (உகக)

வேறு.

உண்ணுதேயுயிருண்ணுதொருநஞ்சுசனகியெனும்பெருநஞ்சுன்னைக்
கண்ணுலேநோக்கவேபோக்கியதேயுயிர்நீயுங்களப்பட்டாயே [லாற்றல்
எண்ணுதே னெண்ணியசொ லின்றினித்தா னெண்ணுதியோவெண்ணி
அண்ணுவோவண்ணுவோவசுரர்கடம்பிரளயமேயமரர்கூற்றே. (உஉ0)

ஓராசையொருவன்மேலுயிராசைக்குலமகண்மேலுடையகாதல்
தீராசைபழியென்றேனெனைமுனிந்தமுனிவாறித்தேறிஞயோ

போராசைப்பட்டெழுந்தகுலமுற்றும்பொன்றவுந்தான்பொங்கிநின்ற
பேராசைபேர்ந்ததோபேர்ந்தாசைக்கரியிரியப்புருவம்பேர்ந்தோய் ()

அன்றெறியின்விழுவேதவதியிவள்காணுலகுக்கோரன்னையென்று
குன்றனையநெடுந்தோளாய்கூறினேனதுமனத்துட்கொள்ளாதேயே
உன்றனதுகுலமடங்கவுருத்தமரிற்படக்கண்டுமுறவாகாதே
பொன்றினையேயிராகவன்றன்புயவலியின்றறிந்துதான்போகின்றாயே.()

மன்றன்மாமலரானும்வடிமழுவாட்படையானும்வரங்களீந்த
ஒன்றலாதனவுடையமுடியோடும்பொடியாகியுதிர்ந்துபோன
அன்றுதானுணர்ந்திலையேயானாலுமவனாட்டையணுகிநின்ற
இன்றுதான்றெரிந்ததேயிராமனார்யாவருக்குமிறைவராதல். (௨௨௩)

வீரனாடேற்றாயோவிரிஞ்சனும்யாவருக்குமேலாமுன்பன்
பேரனாடேற்றாயோபிறைசூடிபிஞ்ஞகன்றன்புரம்பெற்றாயோ
ஆரணாவுன்னுயிரையஞ்சாதேகொண்டகன்றாரதெலாநிற்க
மாரனார்வலியாட்டந்தவிர்ந்தாரேகுளிர்ந்தானேமதியமென்பான்.(௨௨௪)

கொல்லாதமைத்துனனைக் கொன்றாயென்றதுகுறித்துக்கொடுமைசூழ்ந்
பல்லாலேயிதழதுக்குங்கொடும்பாவிநெடும்பாரப்பழிதீர்ந்தாளே [து
நல்லாருந்தீயாருநரகத்தார்துறக்கத்தார்நம்பிநம்மோ
டெல்லாரும்பகைஞரேயார்முகத்தேவிழிக்கின்றாயெளியையானாய். ()

போர்மகளைக்கலைமகளைப்புகழ்மகளைத்தழுவியகைபொறாமைகூரச்
சீர்மகளைத்திருமகளைத்தேவர்க்குந் * தெரிவரியதெய்வக்கற்பின்
பேர்மகளைத்தழுவுவானுயிர்கொடுத்துப்பழிகொண்டபித்தாபின்னைப்
பார்மகளைத்தழுவினையேதிசையானைப்பணையிறுத்தபணைத்தமார்பால்.()

என்றேங்கியரற்றுவான்றனையெடுத்துச்சாம்பவனுமெண்கின்வேந்தன்
குன்றோங்குநெடுந்தோளாய்விதிநிலையைமதியாதகொள்கைத்தாகிச்
சென்றோங்குமுணர்வினையோதேறாதேயழுந்துதியோவென்னத்தேறி
நின்றானப்புறத்தரக்கனிலைகேட்டாண்மயன்பயந்தநெடுங்கட்பாவை. ()

வேறு.

இராவணன்மனைவியான மண்டோதரியும் பிறமாதரும் புலம்புதல்.

அனந்தநூறாயிரமரக்கர்மங்கைமார்
புனைந்தபூங்குழல்விரித்தாற்றும்பூசலார்
இனந்தொடர்ந்துடன்வரவெய்தினாளென்ப
நினைந்ததுமறந்ததுமிலாதநெஞ்சினாள். (௨௨௮)

இரக்கமுந்தருமமுந்துணைக்கொண்டின்னுயிர்
புரக்குநன்குலத்துவந்தொருவன்பூண்டதோர்

---

* தம்மோயைத்தெய்வக்கற்பின் எனவும்பாடம்.

பரக்கழியாமெனப்பரந்துநீண்டதால்
அரக்கியர்வாய்திறந்தரற்றுமோதையே. (உஉகூ)

நூபுரம்புலம்பிடச்சிலம்புநொந்தழக்
கோபுரந்தொறும்புறங்குறுகினார்சிலர்
ஆபுரந்தரன்பகையற்றதாமென
மாபுரந்தவிரவிண்வழிச்சென்றார்சிலர். (உரு0)

அழைப்பொலிமுழக்கெனவலங்கமின்னிடை
குழைப்பொலிநல்லணிக்குலங்கள்வில்லிட
உழைப்பொலியுண்கணீர்த்தாரைமீதுக
மழைப்பெருங்குலமெனவீழ்ந்துமாழ்கினார். (உருக)

தலைமிசைத்தாங்கியகரத்தர்தாரைநீர்
முலைமிசைத்தூங்கியமுகத்தர்மொய்த்துவந்
தலைமிசைக்கடலின்வீழன்னம்போலவன்
மலைமிசைத்தோள்கண்மேல்வீழ்ந்துமாழ்கினார். (உருஉ)

தழுவினர்தழுவினர்தலையுந்தாள்களும்
எழுவியபுயங்களுமார்புமெங்கணும்
குழுவினர்முறைமுறைக்கூறுகூறுகொண்
டழுதனரயர்த்தனரரக்கிமார்களே. (உருரு)

வருத்தமேதெனினதுபுலவிவைவலும்
பொருத்தமேவாழ்வெனப்பொழுதுபோக்குவார்
ஒருத்தர்மேலொருத்தர்வீழ்ந்துயிரிற்புல்லினார்
திருத்தமேயெனவவன்சிகரத்தோள்கண்மேல். (உருச)

இயக்கியராக்கியருரகரேழையர்
மயக்கவில்சித்தியர்விஞ்சைமங்கையர்
முயக்கினர்முறைகெடமுயங்கினார்கடந்
துயக்கிலாவன்புழுண்டெவருஞ்சோரவே. (உருரு)

அறந்தொலைவுறமனத்தடைத்தசீதையை
மறந்திலையோவினுமெமக்குன்வாய்மலர்
திறந்திலைவிழித்திலையருளுஞ்செய்கிலை
இறந்தனையோவெனவிரங்கியேங்கினார். (உருசு)

தரங்கநீர்வேலையிற்றடித்துவீழ்ந்தென
உரங்கிளர்மதுகையானுருவினுற்றனள்
மரங்களுமலைகளுமுருகவாய்திறந்
திரங்கினண்மயன்மகளிணையபன்னினாள். (உருஎ)

வேறு.

அன்னேயோவன்னேயோவாகொடியேற்கடுத்தநாளரக்கர்வேந்தன்
பின்னேயோவிறப்பதுமுன்பிடித்திருந்தகருத்ததுவும்பிடித்திலேனோ
முன்னேயோவிழுந்ததுவுமுடித்தலையோபடித்தலையமுகங்காட்டாயோ
என்னேயோவென்னேயோவிராவணனார்முடிந்தபரிசிதுவோபாவம். ()

வெள்ளெருக்கஞ்சடைமுடியான்வெற்பெடுத்ததிருமேனிமேலுங்கீழும்
எள்ளிருக்குமிடனின்றியுயிரிருக்குமிடனாடியிழைத்தவாறோ
கள்ளிருக்குமலர்க்கூந்தற்சானகியைமனச்சிறையிற்கரந்தகாதல்
உள்ளிருக்குமெனக்கருதியுடல்புகுந்துதடவியதோவொருவன்வாளி. ()

ஆரம்போர்திருமார்பையகன்முழைகளெனத்திறந்திவ்வுலகுக்கப்பால்
தூரம்போயினவொருவன்சிலைதுரந்தசரங்களேபோரிற்றோற்றும்
வீரம்போயுரங்குறைந்துவரங்குறைந்துவீழ்ந்தானேவேறேகெட்டேன்
ஓரம்போவுயிர்பருகிற்றிராவணனைமானுடனாருற்றமீதோ. (உ௪௦)

காந்தையருக்கணியனையசானகியார்பேரழகுமவர்தங்கற்பும்
ஏந்துபுயத்திராவணனார்காதலுமச்சூர்ப்பநகையிழந்தமூக்கும்
வேந்தர்பிரான்றயரதனார்பணியினால்வெங்கானில்விரதம்பூண்டு
போந்ததுவுங்கடைமுறையேபுரந்தரனார்பெருந்தவமாய்ப்போயிற்றம்மா

தேவர்க்குந்திசைக்கரிக்குஞ்சிவனார்க்குமயனார்க்குஞ்செங்கண்மாற்கும்
ஏவர்க்கும்வலியானுக்கென்றுண்டாமிறுதியெனவேமாப்புற்றேன்
ஆவற்கணீயுழன்றவருந்தவத்தின்பெருங்கடற்கும்வரமென்றான்ற
காவற்கும்வலியானோர்மானுடனாருளரென்னக்கருதினேனோ. (உ௪உ)

அரைகடையிட்டமைவுற்றமுக்கோடியாயுவுமுன்னறினார்க்கேயும்
உரைகடையிட்டளப்பரியபேராற்றற்றோளாற்றற்குலப்போவில்லைத்
திரைகடையிட்டளப்பரியவரமென்னும்பாற்கடலைச்சீதையென்னும்[ன்.
பிரைகடையிட்டழிப்பதனையறிந்தேனோதவப்பயனின்பெருமைபார்ப்பே

ஆரனாருலகியற்கையறிதற்காரவையேழுமேழுமஞ்சும்
வீரனாருடறுறந்துவிண்புக்கார்கண்புக்கவேழவில்லால்
நாரநாண்மலர்க்கணையானெல்லாந்தோளெல்லாநையவெய்யும்
நாரனார்தனியிலக்கைமணித்தனாரழித்தனரேவரத்தினாலே. (உ௪௪)

வேறு.

ஆராவமுதாயலைகடலிற்கண்வளரும்
நாராயணனென்றிருப்பேனிராமனைநான்
ஓராதேகொண்டகன்றாயுத்தமனார்தேவிதனைப்
பாராயோநின்னுடையமார்பகலம்பட்டவெலாம். (உ௪௫)

வேறு.

மண்டோதரிஇராவணனைத்தழுவியுயிர்விடுதல்.

என்றழைத்தனளேங்கியெழுந்தவன்
பொன்றழைத்தபொருவருமார்பினைத்
தன்றழைக்கைகளாற்றழுவித்தனி
நின்றழைத்துயிர்த்தாளுயிர்நீங்கினாள். (௨௪௬)

மண்டோதரியை அனைவரும் புகழ்தல்.

வானமங்கையரும்மற்றுமற்றுமெத்
தானமங்கையருந்தவப்பாலவர்
ஆனமங்கையரும்மருங்கற்புடை
மானமங்கையர்தாமும்வழுத்தினார். (௨௪௭)

இராவணனுக்கு விபீடணன் ஈமக்கடன்முடித்தல்.

பின்னைவீடணன்பேரெழிற்றம்முனை
வன்னிகூவிவரன்முறையான்மறை
சொன்னவீமம்விதிமுறையாற்றொகுத்
தின்னனெஞ்சினொடஞ்சலித்தேற்றினான். (௨௪௮)

இந்தனத்தகில்சந்தனமிட்டுமேல்
அந்தமானத்தழுகுறத்தானமைத்
தெந்தவோசையுங்கீழுறவார்த்திடை
முந்துசங்கொலியெங்குமுழங்குற. (௨௪௯)

கொற்றவெண்குடையோடுகொடிமிடைந்
துற்றவீமவிதியினுடம்படஇச்
சுற்றுமாதர்தொடர்ந்துடன்சூழ்வர
மற்றவீரன்விதியின்வழங்கினான். (௨௫0)

கடன்கள்செய்துமுடித்துக்கணவனோ
டுடைந்துபோனமயன்மகளோடுடன்
அடங்கவெங்கனலுக்கவியாக்கினான்
குடங்கொணீரினுங்கண்சோர்குமிழியான். (௨௫௧)

விபீடணனிறந்த வசுரரனைவர்க்கும் பிதிர்க்கடனியற்றல்.

மற்றையோர்க்கும்வரன்முறையால்வகுத்
துற்றதீக்கொடுத்துண்குறுநீருகுத்
தெற்றையோர்க்குமிவனலதில்லெனு
வெற்றிவீரன்குரைகழன்மேவினான். (௨௫௨)

வீடணனுக் கிராமனுறுதல் கூறுதல்.

வந்துதாழ்ந்ததுணைவனைவள்ளலும்
சிந்தைவெந்துயர்தீருதிதெள்ளியோய்
முந்தையெய்துமுறைமையிதாமெனு
அந்தமில்லிடர்ப்பாசமகற்றினன். (உருங)

ருரு-வது, இராவணன்வதைப்படலம் — முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருகூகஎ.

## ருகூ-வது, மீட்சிப்படலம்.



வருந்தனீதிமனுநெறியாவையும்
பொருந்துகேள்விப்புலமையினேயெனு
அருந்தவப்பயனுலடைந்தாற்கறைந்
திருந்தவத்திளையோற்கிதியம்பினன். (க)

இராமனிலக்குமணனை நீ வீடணற்கு முடிசூட்டி வருதியெனல்.

சோதியான்மகன்வாயுவின்ருேன்றன்மற்
றேதில்வானரவீரரொடேகிநீ
ஆதிநாயகனுக்கியநூன்முறை
நீதியானைநெடுமுடிசூட்டுவாய். (உ)

என்றுகூறியிளவலொடாரையும்
வென்றிவீரன்விடையருள்வேலையின்
நின்றதேவர்நெடுந்திசையோரொடும்
சென்றுதத்தமசெய்கைபுரிந்தனர். (ங)

வீடணற்கு மகுடாபிஷேகம் புரிதல்.

சூழ்கடற்புனலும்பலதோயமும்
நீழ்முடித்தொகையும்பிறசீர்மையும்
பாழிதுற்றரிபற்றியபீடமும்
தாழ்வில்கொற்றத்தமரர்கடந்தனர். (ச)

வாசநாண்மலரோன்சொலமான்முகன்
காசுமாநிதியுங்கொடுகங்கைகு
டீசனேமுதலோர்வியந்தேத்திடத்
தேசுலாமணிமண்டபஞ்செய்தனன். (ரு)

விபீடணற் கிலக்குமணன் முடிதரித்தல்.

மெய்கொள்வேதவிதிமுறைவிண்ணுளோர்
தெய்வநீள்புனலாடடிருத்திட
அய்யனாணையினாலிளங்கோளரி
கய்யினான்மகுடங்கவித்தானரோ. (௬)

விபீடணன் சிங்காதனத்துப் பொலிதல்.

கரியகுன்றுகதிரினைச்சூடியோ
ரெரிமணித்தவிசிற்பொலிந்தென்னவே
விரியும்வெற்றியிலங்கையர்வேந்தனீ
டரியணைப்பொலிந்தான்றமரார்த்தெழ. (௭)

திருமூர்த்தியாதியர் விபீடணனை வாழ்த்துதல்.

தேவர்பூமழைசித்தர்முதலினோர்
மேவுகாதல்விரைமலர்வேறிலர்
மூவரோடுமுனிவர்மற்றியாவரும்
நாவிலாசிநறைமலர்தூவினர். (௮)

முடிபுனைந்தநிருதர்முதலவன்
அடிவணங்கியிளவலையாண்டையர்
நெடியகாதலினேற்குயர்நீர்மைசெய்
திடிகொள்சொல்லனவற்கிதியம்பினான். (௯)

விலங்கலனையிடைதருதோளினாய்
இலங்கைமாநகர்யான்வருமெல்லைநீ
கலங்கலாநெடுங்காவலியற்றெனா
அலங்கல்வீரனடியிணையெய்தினான். (௧௦)

குரக்குவீரனரசிளங்கோளரி
அரக்கர்கோமகனோடடிதாழ்தலும்
பொருக்கெனப்புகல்புக்கவற்புல்லியத்
திருக்கொண்மார்பணியனைசெப்பினான். (௧௧)

இராமன் விபீடணற்குரைத்தல்.

உருமைமூவுலகுந்தொழவும்பர்தம்
பெருமைநீதியறன்வழிபேர்கிலா
திருமையேயரசாளுதியீறிலாத்
தருமசீலவென்றான்மறைதந்துளான். (௧௨)

பன்னுநீதிகள்பற்பலகூறிமற்
றன்னுடைத்தவரோடுயர்கீர்த்தியோய்

மன்னிவாழ்கென் றுரைத்தடன்மாருதி
தன்னைநோக்கினன்றுயர்சொனோக்கினன். (கரு)

இராமனனுமனைச் சீதைபாலனுப்புதல்.

இப்புறத்தினவெய்துறுகாலையில்
அப்புறத்ததையுன்னியநுமனைத்
துப்புறச்செய்யவாய்மணித்தோகைபால்
செப்புறிப்படிபோயெனச்செப்பினன். (கசா)

அனுமன்சீதைபாலெய்திச் சோபனமுரைத்தல்.

வணங்கியந்தமின்மாருதிவாரணம்
அணங்குதன்கடிகாவுசென் றண்மினன்
உணங்குகொம்புக்குயிர்வருநீரெனச்
சுணங்குதோய்முலையாட்கிவைசொல்லினன். (கரு)

பாடினன் றிருநாமங்கள்பன்முறை
கூடிசாரியிற்குப்புற் றுக்கூத்துநின்
றூடியங்கையிரண்டுமலங்குறச்
சூடிநின் றனன்குன் றன்னதோளினன். (ககூ)

ஏழைசோபனமேந்திழைசோபனம்
வாழிசோபனமங்கலசோபனம்
ஆழியானவரக்கனையாரியச்
சூழியானைதுகைத்ததுசோபனம். (கஎ)

தலைகிடந்தனதாரணிதாங்கிய
மலைகிடந்தனபோன்மணித்தோளெனும்
அலைகிடந்தனவாழிகிடந்தன
நிலைகிடந்தவுடனிலத்தேயென்றான். (கஅ)

அண்ணலாணையின்வீடணனுமறக்
கண்ணலாதவன்காதரெடுர்தலால்
பெண்ணலாதுபிழைத்துளதாகுமென்
றெண்ணலாவதொர்பேரிலதாலென்றான். (ககூ)

ஒருகலைத்தனிவெண்மதிநாளொடும்
வருகலைக்குவருமறுமானுறப்
பொருகலைக்குலம்பூத்தனபோன்றன
பருகலுற்றவமுதுபயந்தநாள். (உ0)

இராவணனிறந்தானெனக்கேட்ட சனகிமகிழ்ச்சியுறல்.

ஆம்பல்வாயுமுகமுமலர்ந்திடத்
தேம்புநுண்ணிடைநோவத்திரண்முலை

எம்பலாசைக்கிரட்டிவந்தெய்தினாள்
பாம்புகானற்பணிமதிப்பான்மையாள். (உக)

புந்தியோபேருவகைப்பொருமலோ
உந்தியோங்குமொளிவளைத்தோள்களோ
சிந்தியோடுகலையுடைத்தேர்கொலோ
முந்தியோங்கிளையாவைமுலைகொலோ. (உஉ)

குனித்தகோலப்புருவங்கள்கொம்மைவேர்
பனித்தகொங்கைமழலைப்பணிமொழி
நுனிப்பதொன்றுநுவல்வதொன்றாயினாள்
கனித்தவின்களிகள்ளினிற்காட்டுமோ. (உங)

சனகி சந்தோடமிகுதியா லொன்றுந்தோன்றாதிருத்தல்.

அனையளாகியநுமனைநோக்கினாள்
இனையதின்னதியம்புவதென்பதோர்
நினைவிலாதுநெடிதிருந்தாணெடு
மனையின்மாசுதுடைத்தமனத்தினாள். (உச)

அனுமன் சனகியை மௌனத்தின் காரணம்வினாதல்.

யாதிதற்கொன்றியம்புவலென்பது
மீதுயர்ந்தவுவகையின்விம்மலோ
தூதுபொய்க்குமென்றோவெனச்சொல்லினான்
நீதிவித்தகனங்கைநிகழ்த்தினாள். (உரு)

சனகி பதில் கூறுதல்.

மேக்குநீங்கியவெள்ளவுவகையால்
ஏக்கமுற்றொன்றியம்புவதியாதென
நோக்கிநோக்கியரிதெனநொந்துளேன்
பாக்கியம்பெரும்பித்தும்பயக்குமோ. (உசு)

சனகி அனுமனைப்புகழ்தல்.

முன்னைநீக்குவென்மொய்சிறையென்றநீ
பின்னைநீக்கியுவகையும்பேசினை
என்னபேற்றினையீகுவதென்பதை
உன்னிநோக்கியுரைமறந்தோவினேன். (உஎ)

உலகமூன்றுமுதவற்கொருதனி
விலையிலாமையுமுன்னிமெனன்மேலவை
நிலையிலாமைநினைந்தனெளின்னையென்
தலையினாற்றொழவுந்தகுந்தன்மையோய். (உஅ)

இனிச்செய்வதியாதெனச் சனகி அனுமனை வினுதல்.

ஆதலாலொன்றுதவுதலாற்றலேன்
யாதுசெய்வதென்றெண்ணியிருந்தனென்
வேதநன்மணிவேகடஞ்செய்தன்ன
தூதவென்னினிச்செய்திறஞ்சொல்லென்றாள். (உகூ)

எனக்களிக்கும்வரமெம்பிராட்டிநின்
மனக்களிக்குமற்றுன்னையம்மானவன்
றனக்களிக்கும்பணியினுந்தக்கதோ
புனக்களிக்குலமாமயில்போன்றுளாய். (௩0)

அனுமன்திரிசடையல்லாவரக்கியரைச்சுட விரும்புகிறேனெனல்.

எனவுரைத்துத்திரிசடையாளெம்மோய்
மனையினிற்சுடர்மாமுகமாட்சியா
டனையொழித்திவ்வரக்கியர்தங்களை
வினையினிற்சுடவேண்டுவென்யானென்றான். (௩க)

உரையிலாவுரையுன்னையுரைத்துராய்
விரையவோடிவிழுங்குவமென்றுளார்
வரைசெய்மேனியைவள்ளுகிராற்பிளந்
திரைசெய்வேன்மறலிக்கினியென்னுமால். (௩உ)

அரக்கியர் சனகியைச்சரணடைதல்.

குடல்குறைத்துக்குருதிகுடித்தவர்
உடன்முருக்கியிட்டுண்குவெனென்றலும்
அடலரக்கியரன்னைநின்பாதமே
விடலமெய்ச்சரணென்றுவிளம்பலும். (௩௩)

சனகி அரக்கியர்பொருட்டுச் சமாதான முரைத்தல்.

அன்னையஞ்சன்மினஞ்சன்மினீரென
மன்னனுமாருதிமாமுகநோக்கிவே
றென்னதீமையிவரிழைத்தாரவன்
சொன்னசொல்லினதல்லதுதூய்மையோய். (௩௪)

யானிழைத்தவினையினிவ்விடர்
தானடுத்ததுதாயினுமன்பினேய்
கூனியிற்கொடியாரலரேயிவர்
போனவப்பொருள்போற்றலைபுந்தியோய் (௩ரு)

எனக்குநீயருளிவ்வரந்தீவினை
தனக்குவாழ்விடமாயசழக்கியர்

மனக்குநோய்செயலென்றனண்மாமதி
தனக்குமாமறுத்தந்தமுகத்தினள். (௩௬)

இராமன் விபீடணனைச் சீதையை அழைத்துவாவெனல்.

என்றபோதினிறைஞ்சினனெம்பிரான்
றன்றுணைப்பெருந்தேவிதயாவென
நின்றகாலைநெடியவன்வீடண
சென்றுதாநமதேவியைச்சீரொடும். (௩௭)

என்னுங்காலையிருளும்வெயிலுங்கார்
மின்னுங்காலையியற்கையவீடணன்
உன்னுங்காலக்கொணர்தியென்றோதவப்
பொன்னின்காற்றளிர்சூடினன்போந்துளான். (௩௮)

வேறு.

கோலங்கொண்டு வருதியென விபீடணன் சீதைக்குரைத்தல்.

வேண்டிற்றுமுடிந்ததன்றேவேதியர்வேதனின்னைக்
காண்டற்குவிரும்புகின்றானும்பருங்காணவந்தார்
பூண்டகக்கோலம்வல்லைபுனைந்தனைவருத்தம்போக்கி
ஈண்டுக்கொண்டணைதியென்றானெமுந்தருளிறைவியென்றான். (௩௯)

சீதை கோலங்கோடல் தகுதியன்றென மறுத்தல்.

யானிவணிருந்ததன்மையிமையவர்குழுவுமெங்கள்
கோனுமம்முனிவர்தங்கள்கூட்டமுங்குலத்துக்கேற்ற
வானுயர்கற்பின்மாதரீட்டமுங்காண்டன்மாட்சி
மேனினைகோலங்கோடல்விழுமியதன்றுவீர. (௪0)

விபீடணன் கோலங்கொள்ள விராமன் கட்டளையிட்டானெனலும்
சனகி உடன்படலும்.

என்றனளிறைவிகேட்டவிராக்கதர்க்கிறைவனீலக்
குன்றனதோளினன்றன்பணியினிற்குறிப்பிதென்றான்
நன்றெனநங்கைநேர்ந்தாளயகக்கோலங்கொள்ளச்
சென்றனர்வானநாட்டுத்திலோத்தமைமுதலோர்சேர. (௪௧)

மேனகையரம்பைமற்றையுருப்பசிவேறுமுள்ள
வானகநாட்டுமாதர்யாருமஞ்சனத்துக்கேற்ற
நானநெய்யூட்டப்பட்டநவையிலகலவைதாங்கிப்
போனகந்துறந்ததையன்மருங்குறநெருங்கிப்புக்கார். (௪௨)

காணியைப்பெண்மைக்கெல்லாங்கற்பினுக்கணியைப்பொற்பின்
ஆணியையமிழ்தின்வந்தவமிழ்தினையறத்தின்றாயைச்

சேணுயர்மறைறயையெல்லாமுறைறசெய்தசெல்வனென்ன
வேணியையரம்பைமெல்ல * வரன்முறைசுருக்கவிட்டாள். (சங)

பாகடர்ந்தமுதுபில்கும்பவளவாய்த்தாளப்பத்தி
சேகறவிளக்கினார்தீட்டிமண்சேர்ந்தகாசை
வேகடஞ்செய்யுமாபோன்மஞ்சனவிதியின் † வேதத்
தோகைமங்கலங்கள்பாடவாட்டினரும்பர்மாதர். (சச)

உருவிளைபவளவல்லிபானுரையுண்டதென்ன
மருவிளைகலவையூட்டிக்குங்குமமுலையின்மாட்டிக்
கருவிளைமலரின்காட்சிக்காசறுதூசுகாமன்
திருவிளையல்குற்கேற்பமேகலைதழுவச்சேர்த்தார். (சரு)

சந்திரன்றேவிமாரிற்றகையுறுதாளப்பைம்பூண்
இந்திரன்றேவிக்கேற்பவிழையவனூட்டியாணர்
சிந்துரப்பவளச்செவ்வாய்த்தேம்பசும்பாகுந்தீற்றி
மந்திரத்தயினிநீரால்வலஞ்செய்துகாப்புமிட்டார். (சசு)

மண்டிலமதியினுப்பண்மானிருந்தென்னமானம்
கொண்டனரேற்றிவானமடந்தையர்தொடர்ந்துகூட
மண்டிவானரருமோடவரக்கரும்புறஞ்சூழ்ந்தோட
அண்டர்நாயகன்பாலண்ணல்வீடணனருளிற்சென்றான். (சஎ)

வேறு.

இப்புறத்திமையவர்முனிவரேழையர்
துப்புறச்சிவந்தவாய்விஞ்சைத்தோகையர்
முப்புறத்துலகினுமெண்ணின்முற்றினோர்
ஒப்புறக்குவிந்தனரோகைகூறுவார். (சஅ)

நெருக்கமிகுதியையகற்ற அரக்கர் பிரம்பாலோச்சுதலும்
ஆரவார முண்டாதலும்.

அருங்குலக்கற்பினுக்கணியையண்மினார்
மருங்குபின்முன்செலவழியின்றென்னலாய்
நெருங்கினர்நெருங்குழிநிருதரோச்சலால்
கருங்கடன்முழக்கெனப்பிறந்தகம்பலை. (சகூ)

முனிவர் ஆரவாரகாரணங்கூறுதல்.

அவ்வழியிராமனுமலர்ந்தாமரைச்
செவ்விவாண்முகங்கொடுசெயிர்த்துநோக்குறா
இவ்வொலியாவதென்றியம்பவிற்றொனுக்
கவ்வையின்முனிவரர்கழறினாரரோ. (ருo)

---

* விரன்முறை சுகிர்த்துவிட்டாள் என்றும் பாடம்.

† வேதத்தோகை-வேதமாதா.

இராமன் விபீடணனை நீ தகாதுசெய்தியோவெனல்.

முனிவரர்வாசகங்கேட்புறூதமுன்
நனியிதழ்துடித்திடநகைத்துவீடணன்
றனையெழநோக்கிநீதகாதசெய்தியோ
புனிதநூல்கற்றுணர்புந்தியோயென்றான். (௫௧)

கடுந்திறலமர்க்களங்காணுமாசையால்
நெடுந்திசைத்தேவருநின்றயாவரும்
அடைந்தனருவகையினடைகின்றார்களைக்
கடிந்திடயார்சொனார்கருதுநூல்வலாய். (௫உ)

வேறு.

பரசுடைக்கடவுணேமிப்பண்ணவன்பதுமத்தண்ணல்
அரசுடைத்தெரிவைமாரையின்றியேயமைவதுண்டோ
கரைசெயற்கரியதேவரேனையோர்கரந்துகாண்பான்
விரசுறின்விலக்குவாரோவேறுளார்க்கென்கொல்வீர. (௫௩)

ஆதலானரக்கர்கோவேயடுப்பதன்றுனக்குமின்னே
சாதுகைமாந்தர்தம்மைத்தடுப்பதென்றருளிச்செங்கண்
வேதநாயகன்றானிற்பவெய்துயிர்த்தலக்கணெய்திக்
கோதிலாமனனுமெய்யுங்குலைந்தனன்குணக்கடலோன். (௫௪)

அருந்ததியனையநங்கையமர்க்களமணுகியாடற்
பருந்தொடுகழுகும்பேயும்பசிப்பிணிதீருமாறு
விருந்திடுவில்லின்செல்வன்விழாவணிவிரும்பிநோக்கிக்
கருந்தடங்கண்ணுநெஞ்சுங்களித்திடவினையசொன்னாள். (௫௫)

வேறு.

சனகி களங்கண்டு கூறியது.

சீலமுங்காட்டியென்கணவன்சேவகக்
கோலமுங்காட்டியென்குலமுங்காட்டியிஞ்
ஞாலமுங்காட்டியகவிக்குநாளறாக்
காலமுங்காட்டுமேகொல்லென்கற்பென்றாள். (௫௬)

சனகி இராமனைக்காணுதல்.

எச்சிலென்னுடலுயிரேகிற்றேயினி
நச்சிலையென்பதோர்நவையிலாளெதிர்
பச்சிலைவண்ணமும்பவளவாயுமாய்க்
கைச்சிலையேந்திநின்றதனைக்கண்ணுற்றாள். (௫௭)

மானமீதரம்பையர்சூழவந்துளாள்
போனபேருயிரினைக்கண்டபொய்யுட

ரூனதுகவர்வுறுந்தன்மைத்தாமென
ஆனனங்காட்டுறவவணியெய்தினாள். (௫௮)

பிறப்பினுந்துணைவனைப்பிறவிப்பேரிடர்
துறப்பினுந்துணைவனைத்தொழுதுநாணினி
மறப்பினுநன்றிதுமாறுவேறுவீழ்ந்
திறப்பினுநன்றெனவேக்கநீங்கினாள். (௫௯)

இராமன் சீதையைக்காணுதல்.

கற்பினுக்கரசினைப்பெண்மைக்காப்பினைப்
பொற்பினுக்கழகினைப்புகழின்வாழ்க்கையைத்
தற்பிரிந்தருள்புரிதருமம்போலியை
அற்பினத்தலைவனுமமையநோக்கினான். (௬0)

இராமன் சீதையைக் கடிந்துரைத்தல்.

சுணங்குறுதுணைமுலைமுன்பிற்றூங்கிய
அணங்குறுநெடுங்கணீராறுவார்வுற
வணங்கியமயிலினைக்கற்பின்வாழ்வினைப்
பணங்கிளரரவெனவெழுந்துபார்ப்புறா. (௬௧)

ஊண்டிறமுவந்தனையொழுக்கம்பாழ்பட
மாண்டிலைமுறைதிறம்பரக்கன்மாநகர்
ஆண்டுறைந்தடங்கினையச்சந்தீர்ந்திவண்
மீண்டதென்னினைவெனைவிரும்புமென்பதோ. (௬௨)

உன்னைமீட்பான்பொருட்டுவரிதூர்த்தொளிர்
மின்னைமீட்டுறுபடையரக்கர்வேரறப்
பின்னைமீட்டுறுபகைகடந்திலேன்பிழை
என்னைமீட்பான்பொருட்டிலங்கையெய்தினேன். (௬௩)

மருந்தினுமுரியமன்னுயிரின்வான்றசை
அருந்தினையேநறவமையவுண்டியே
இருந்தனையேயினியெமக்குமேற்பன
விருந்துளவோவுரைவெம்மைநீங்கினாய். (௬௪)

கலத்தினிற்பிறந்தமாமணியிற்காந்துறு
நலத்தினிற்பிறந்ததுநடந்தநன்மைசால்
குலத்தினிற்பிறந்திலைகோளில்கீடம்போல்
நிலத்தினிற்பிறந்தமைநிரப்பினாயரோ. (௬௫)

பெண்மையும்பெருமையும்பிறப்புங்கற்பெனும்
திண்மையுமொழுக்கமுந்தெளிவுஞ்சீர்மையும்

உண்மையுநீயெனுமொருத்திதோன்றலால்
வண்மையின்மன்னவன்புகழின்மாய்ந்ததால். (கூகூ)

அடைப்பரைம்புலன்களையொழுக்கமாணியாய்ச்
சடைப்பரந்தகைந்ததோர்தகைவின்மாதவம்
படைப்பர்வந்திடையொருபழிவந்தாலது
துடைப்பர்தம்முயிரொடுங்குலத்திற்றோகைமார். (கூஎ)

யாதியானியம்புவதுணர்வையீடறச்
சேதியாநின்றதுன்னொழுக்கஞ்செய்வது
சாதியாலன்றெனிற்றக்கதோர்நெறி
போதியாலென்றனன்புலவர்புந்தியான். (கூஅ)

இராமன்மொழிகேட் டனைவருமரற்றுதல்.

முனைவருமமரருமற்றுமுற்றிய
நினைவருமகளிருநிருதரென்றுளார்
எனைவரும்வானரத்தெவரும்வேறுளார்
அனைவரும்வாய்திறந்தரற்றினாரரோ. (கூகூ)

சீதை வருந்திக் கூறுதல்.

கண்ணிணையுதிரமும்புனலுங்கான்றுக
மண்ணிணைநோக்கியமலரின்வைகுவாள்
புண்ணிணைக்கோலுறுத்தனையபொம்மலால்
உண்ணிணைப்போவிநின்றுயிர்ப்புவீங்கினாள். (எ0)

பருந்தடர்சுரத்திடைப்பருகுநீர்நசை
வருந்தருந்துயரினான்மாளலுற்றமான்
இருந்தடங்கண்டதினெய்துறுவகைப்
பெருந்தடையுற்றெனப்பேதுற்றாளரோ. (எக)

உற்றுநின்றுலகினைநோக்கியோரடி
முற்றுறுநெடுங்கணீராலிமொய்த்துக
இற்றதுபோலும்யானிருந்துபெற்றபே
றற்றதாலென்றவயின்றென்றோதுவாள். (எஉ)

மாருதிவந்தெனைக்கண்டுவள்ளனீ
சாருதியீண்டெனச்சமையச்சொல்லினான்
யாரினுமேன்மையானிசைத்ததில்லையோ
சோருமென்னிலையவன்றூதுமல்லனோ. (எங)

எத்தவமென்னலமென்றன்கற்புநான்
இத்தனைகாலமுமுழந்தவிவ்வெலாம்

பித்தெனலாயவம்பிழைத்ததாலன்றே
உத்தமநீமனத்துணர்ந்திலாமையால். (எச)

பார்க்கெலாம்பத்தினிபதுமத்தானுக்கும்
பேர்க்கலாஞ்சிந்தையளல்லள்பேதையேன்
ஆர்க்கெலாங்கண்ணவனன்றென்றாலது
தீர்க்கலாந்தகையதுதெய்வந்தேறுமோ. (எரு)

பங்கயத்தொருவனும்விடையின்பாகனும்
சங்குகைத்தாங்கியதருமமூர்த்தியும்
அங்கையினெல்லிபோலனைத்துநோக்கினும்
மங்கையர்மனநிலையுணரவல்லரோ. (எசு)

ஆதலிற்புறத்தினியாருக்காகவென்
கோதறுதவத்தினைக்கூறிக்காட்டுகேன்
சாதலிற்சிறந்ததொன்றில்லைத்தக்கதே
வேதநின்பணியதுவிதியுமென்றனள். (எஎ)

இலக்குமணனைச்சனகி தீத்தருதியெனல்.

இளையவன்றனையழைத்திடுதீயென
வளையொலிமுன்கையாள்வாயிற்கூறினாள்
உளைவுறுமனத்தவனுலகம்யாவுக்கும்
களைகணைத்தொழுதவன்கண்ணிற்கூறினான். (எஅ)

சனகி தீயினருகிற்சேறல்.

எங்கியபொருமலினிழிகணீரினன்
வாங்கியவுயிரினனனையமைந்தனும்
ஆங்கெரிவிதிமுறையமைவித்தானதன்
பாங்குறநடந்தனள்பதுமப்போதினாள். (எகூ)

தீக்குழியினருகிற் சேறல்கண்ட வேதமுதலிய வருந்துதல்.

தீயிடையருகுறச்சென்றுதேவர்க்கும்
தாய்தனிகுறுகலுந்தரிக்கிலாமையால்
வாய்திறந்தரற்றினமறைகளுன்கொடும்
ஓய்வினல்லறமுமற்றுயிர்கள்யாவையும். (அ0)

அக்கினி வருந்துதல்.

வலம்வருமளவையின்மறுகிவான்முதல்
உலகமுமுயிர்களுமோலமிட்டன
அலம்வரலுற்றனவலறியையவிச்
சலமிதுதக்கிலதென்னச்சாற்றின. (அக)

இந்திராணிமுதலியோர் வருந்துதல்.

இந்திரன்றேவியர்முதலவேமைழயர்
அந்தரவானினின்றரற்றுகின்றவர்
செந்தளிர்க்கைகளாற்சேயரிப்பெருஞ்
சுந்தரக்கண்களையெற்றித்துள்ளினுர். (அ௨)

பிரமாதியர் நடுங்குதல்.

நடுங்கினர்நான்முகன்முதலநாயகர்
படங்குறைந்ததுபடிசுமந்தபாம்புவாய்
விடம்பிறந்துளதெனவெதும்பிற்றுலல
கிடந்திரிந்தனசுடர்கடல்களேங்கின. (அ௩)

யான்கற்பிழந்தேனெனி னென்னைச் சுடுதியென

அக்கினிக்குச் சனகிகூறுதல்.

கனத்திறுற்கடந்தபூண்முலையகைவளை
மனத்திறல்வாக்கினுன்மறுவுற்றேனெனின்
சினத்திறுற்சுடுதியாற்றீச்செல்வாவென்றுள்
வனத்துழாய்க்கணவற்கும்வணக்கம்போக்கினுள். (அ௪)

சீதை தீயிற்பாய்தல்.

நீந்தரும்புனலிடைநிவந்ததாமரை
எய்ந்ததன்கோயிலேயெய்துவாளெனப்
பாய்ந்தனள்பாய்தலும்பாலின்பஞ்செனத்
தீய்ந்ததவ்வெரியவள்கற்பின்றீயினுல். (அரு)

அக்கினி சனகியையேந்தி வருந்திகூறுதல்.

அழுந்தினணங்கைமற்றங்கையாற்சுமந்
தெழுந்தனனங்கிவெந்தெரியுமேனியான்
தொழுங்கரத்துணையினன்சுருதிஞானத்தின்
கொழுந்தினைப்பூசலிட்டரற்றுங்கொள்கையான். (அ௬)

ஊடினசீற்றத்தாலுதித்ததேவர்களும்
வாடினவில்லையாலுணர்த்துமாறுண்டோ
பாடியவண்டொடும்பனித்ததேனெடும்
சூடினமலர்கணீர்தோய்ந்தபோன்றவால். (அ௭)

திரிந்தனவுலகமுஞ்செவ்வைநின்றன
பரிந்தவருயிரெலாம்பயந்தவிர்ந்தன
அருந்ததிமுதலியமகளிராடுதல்
புரிந்தனர்நாணமும்பொறையுநீங்கினுர். (அஅ)

கனிந்துயர்கற்பெனுங்கடவுட்டீயினால்
நினைந்திலையென்வலிநீக்கினாயென
அநிந்தனையங்கிநீயயர்கிலென்னையும்
முனிந்தனையாமெனமுறையிட்டானரோ. (அக)

இராம னக்கினிதேவனைநீயாவனென வினாதல்.

இன்னதோர்காலையினிராமன்யாரைநீ
என்னைநீயியம்பியதெரியுட்டோன்றியிப்
புன்மைசாலொருத்தியைச்சுடாதுபோற்றினாய்
அன்னதார்சொலவீதறைதியாலென்றான். (கூ0)

அக்கினி தன்னை யுணர்த்துதல்.

அங்கியானென்னையிவ்வன்னைகற்பெனும்
பொங்குவெந்தீச்சுடப்பொறுக்கிலாமையால்
இங்கணைந்தேனுறுமியற்கைநோக்கியும்
சங்கியாநிற்றியோவெவர்க்குஞ்சான்றுளாய். (கூக)

வேட்பதுமங்கையர்விலங்கினாரெனின்
கேட்பதும்பல்பொருட்கையங்கேடற
மீட்பதுமென்வயினென்னுமெய்ப்பொருள்
வாட்பெருந்தோளினாய்மறைகள்சொல்லுமால். (கூஉ)

ஐயுறுபொருள்களையரசின்மாசொரீஇக்
கையுறுநெல்லியின்கனியிற்காட்டுமென்
மெய்யுறுகட்டுரைகேட்டுமீட்டியோ
பொய்யறுமாருதியுரையும்போற்றலாய். (கூங)

தேவருமுனிவருந்திரிவநிற்பவும்
மூவகையுலகமுங்கண்கண்மோதிநின்
றூவெனல்கேட்கிலையறத்தைநீக்கிவே
றேவமென்றொருபொருள்யாண்டுக்கொண்டியோ. (கூச)

பெய்யுமேமழைபுவிபிளப்பதன்றியே
செய்யுமேபொறையறநெறியிற்செல்லுமே
உய்யுமேயுலகிவளுணர்வுசீறினால்
வய்யுமேன்மலர்மிசையயனுமாயுமே. (கூரு)

பாடுறுபன்மொழியினையபன்னிநின்
றூடுறுதேவரோடுலகமார்த்தெழச்
சூடுறுமேனியவவரிதோகையை
மாடுறக்கொணர்ந்தனன்வள்ளல்கூறுவான். (கூசா)

இராமன் அங்கியையுணர்ந்து சனகியை அங்கீகரித்தல்.

அழிப்பிலசான்றநீயுலகுக்காதலான்
இழிப்பிலசொல்லிநீயிவளையாதுமோர்
பழிப்பிலளென்றனைபழியுமின்றினிக்
கழிப்பிலளென்றனன்கருணையுள்ளத்தான். (௯௭)

வேறு.

பிரமன் இராமற்கவனை யுணர்த்துதல்.

உணர்த்துவாயுண்மையொழிவின்றகாலம்வந்துளதால்
புணர்த்துமாயையிற்பொதுவுறநின்றவைபுணரா
இணர்த்துழாய்த்தொங்கலிராமற்கென்றிமையவரிசைப்பத்
தணப்பிருமரைச்சதுமுகனுரைசெயச்சமைந்தான். (௯௮)

மன்னர்தொல்குலத்தவரினத்துணையொருமணித்தன்
என்னவுன்னலையுன்னைநீயிராமகேளிதனைச்
சொன்னநான்மறைத்துணிவினிற்றுணிந்தமெய்த்துணிவு
நின்னலாதில்லைநின்னில்வேறுளதிலைநெடியோய். (௯௯)

பகுதியென்றுளதியாதினும்பழையதுபயந்த
விகுதியால்வந்தவினைவுமற்றதற்குமேனின்ற
புகுதியாவர்க்குமரியவப்புருடனுநீயிம்
மிகுதியுன்பெருமாயையினல்வந்தவீக்கம். (௧00)

முன்புபின்பிருபுடையெனுங்குணிப்பருமுறைமைத்
தன்பெருந்தன்மைதான்றெரிமறைகளின்றலைகள்
மன்பெரும்பரமார்த்தமென்றுரைக்கின்றமாற்றம்
அன்பநின்னையல்லான்மற்றிங்கியாரையுமறையா. (௧0௧)

எனக்குமெண்வகையொருவற்குமிமையவர்க்கிறைவன்
றனக்கும்பல்பெருமுனிவர்க்குமுயிருடன்றழீஇய
அனைத்தினுக்குநீயேபரமென்பதையறிந்தார்
வினைத்துவக்குடைவீட்டருந்தளைநின்றுமீள்வார். (௧0௨)

என்னைத்தான்முதலாகியவுருவங்களெவையும்
முன்னைத்தாய்தந்தையெனும்பெருமாயையின்மூழ்கித்
தன்னைத்தானறியாமையிற்சலிப்பவச்சலந்தீர்ந்
துன்னைத்தாதையென்றுணர்குவமுத்திவித்தொழிந்த. (௧0௩)

ஐயஞ்சாகியதத்துவந்தெரிந்தறிந்தவற்றின்
மெய்யெஞ்சாவகைமேனின்றநினைக்குமேல்யாதும்
பொய்யெஞ்சாவிலதென்னுமீதருமறைபுகலும்
வய்யஞ்சான்றினிச்சான்றுக்குஞ்சான்றிலைவழக்கால். (௧0௪)

அளவையாலளந்தாமன்றென்றறிவுறுமமைதி
உளவையாவையுமுனக்கில்லேயுபநிடத்துனது
களவையாய்ந்துறத்தெளிந்திலதாயினுங்கண்ணுல்
துளவையாய்முடியாயுளேநீயெனத்துணியும். (கoரு)

காணமொன்றுளதுன்னேவந்தறிவுகாணுமே
அரணமல்லவர்க்கிவைகடந்தறிவரிதாக
மரணந்தோற்றமென்றிவற்றிடைமயங்குபவவற்றுன்
சரணமல்லதோர்சரணில்லேயன்னவைதவிர்ப்பான். (கoசு)

தோற்றமென்பதொன்றுனக்கில்லேநின்கணேதோற்றும்
ஆற்றல்சான்முதற்பகுதிமற்றதனுளாம்பண்பால்
காற்றைமுன்னுடைப்பூதங்களவைசென்றுகடைக்கால்
வீற்றுவீற்றுற்றுவீவுறுநீயென்றும் * விளியாய். (கoஎ)

மின்னேக்காட்டுதல்போல்வந்துவிளியுமெய்யுலகம்
தன்னேக்காட்டவுந்தருமத்தைநாட்டவுந்தனியே
என்னேக்காட்டுதியிறுதியுங்காட்டுதியெனக்கு
முன்னேக்காட்டிலேயொளிக்கினுமிலேமறையுரையால். (கoஅ)

என்னுருக்கொடிவ்வுலகினே யீனுதியிடையே
உன்னுருக்கொடுபுகுந்துநின்றேம்புதியுமையோன்
றன்னுருக்கொடுதுடைத்திமற்றிது தனியருக்கன்
முன்னுருக்கொடுபகற்செய்யுந்தரத்ததுமுதலோய். (கoகூ)

திருக்குவான்மலிசெல்வத்துச்செருக்குவேந்திறத்துத்
தருக்குமாய்வறத்தானவரரக்கர்வெஞ்சமரில்
இரிக்கமாழ்கிரொந்துனேப்புகல்யாம்புகவியையாக்
கருக்குளாய்வந்துதோற்றுதியீங்கிதுகடனே. (ககo)

ஓங்காரப்பொருடேருவோர்தாமுன்னேயுணர்வோர்
ஓங்காரப்பொருளென்றுணர்ந்திருவினேயுகுப்போர்
ஓங்காரப்பொருளாமன்றென்றூழிசென்றூலும்
ஓங்காரப்பொருளேபொருளென்கிலாவுரவோர். (கக்க)

இனையதாகவினெம்மைமூன்றுலகையுமீன்றிம்
மனேயின்மாட்சியைவளர்த்தவெம்மோயினேவாளா
முனையலென்றதுமுடித்தனன்மூந்துநீர்முளேத்த
சினேயின்பந்தமும்பகுதிகளனேத்தையுஞ்செய்தோன். (ககஉ)

சிவனுமிராமற்கவணயுணர்த்துதல்.

என்னுமாத்திரத் † தேறமர்கடவுளுமிசைத்தான்
உன்னேநீயொன்றுமுணர்ந்திலேபோலுமாலுரவோய்

---

* விளியாய் — அழியாய். † ஏறமர்கடவுள் — சிவன்.

முன்னையாதியாமூர்த்திநீமூவகையுலகின்
அன்னைசீதையாமாதுநின்மார்பின் வந்தமைந்தாள். (கககூ)

துறக்குந்தன்மையளல்லளாற்றொல்லையெவ்வுலகும்
பிறக்கும்பொன்வயிற்றன்னையிப்பெய்வளைபிழைக்கின்
இறக்கும்பல்லுயிரிராமனீயிவடிறத்திகழ்ச்சி
மறக்குந்தன்மையதென்றனன்வரதர்க்கும்வரதன். (ககச)

பின்னுநோக்கினன்பெருந்தகைமுன்புதற்பிரிந்த
இன்னலாலுயிர்துறந்திருந்துறக்கத்துளிருந்த
மன்னனூங்குவற்சென்றுநீகண்டனைவணங்க
முன்னைவான்றுயர்நீக்குதிமொய்ம்பினோயென்றான். (ககரு)

தயரதன் இராமனெதிரே வருதலும் இராமனவனடி பணிதலும்.

ஆதியான்பணியருள்பெற்றவரசருக்கரசன்
காதல்மைந்தனைக்காணியவுவந்ததோர்கருத்தால்
பூதலத்திடைப்புக்கனன்புகுதலும்பொருவில்
* வேதவேத்தனுமவன்மலர்த்தாண்மிசைவீழ்ந்தான். (ககசு)

தயரதனிராமனைத் தழுவிமகிழ்தல்.

வீழ்ந்தமைந்தனையெடுத்துத்தன்விலங்கலாகத்தின்
ஆழ்ந்தழுந்திடத்தழுவித்தன்கண்ணினீராட்டி
வாழ்ந்தசிந்தையின்மனங்களுங்களிப்புறமன்னன்
போழ்ந்ததுன்பங்கள்புறப்படநின்றிவைபுகன்றான். (கசள)

அன்றுகேகயன்மகள்கொண்டவரமென்னுமயில்வேல்
இன்றுகாறுமென்னிதயத்தினிடைநின்றதென்னைக்
கொன்றுநீங்கலதிப்பொழுதகன்றதுன்குலப்பூண்
மன்றலாகமாங்காந்தமாமணியின்றுவாங்க. (ககஅ)

மைந்தரைப்பெற்றுவானுயர்தோற்றத்துமலர்ந்தார்
சுந்தரப்பெருந்தோளினுயென்றுணைத்தாளின்
பைந்துகட்களுமொக்கிலராமெனப்படைத்தாய்
உய்ந்தவர்க்கருந்துறக்கமும்புகழும்பெற்றுயர்ந்தேன். (கககூ)

பண்டுநான்றொழுந்தேவருமுனிவரும்பாராய்
கண்டுகண்டெனைக்கைத்தலங்குவிக்கின்றகாட்சி
புண்டரீகத்துப்புராதனன்றன்னொடும்பொருந்தி
அண்டமூலத்தொராசனத்திருத்தினையழக. (கஉ0)

* வேத்தன்—என்பது தற்பவம். வேத்தியன் – என்பது வடமொழி.

தயரதனைச் சனகி வணங்குதல்.

என்றுமைந்தனையெடுத்தெடுத்திறுகுறத்தழுவிக்
குன்றுபோன்றுளதோளினன்சீதையைக்குறுகத்
தன்றுணைக்கழல்வணங்கலுங்கருணையாற்றழுவி
நின்றுமற்றிவைநிகழ்த்தினனிகழ்த்தரும்புகழோன். (௧௨௧)

தயரதனறவுரை.

நங்கைமற்றுநின்கற்பினையுலகுக்குநாட்ட
அங்கிபுக்கிடென்றுணர்த்தியவதுமனத்தடையேல்
சங்கையுற்றவர்பெறுவதுமுண்டதுசரதம்
கங்கைநாடுடைக்கணவனைமுனிவுறக்கருதேல். (௧௨௨)

பொன்னைத்தீயிடைப்பெய்தலப்பொன்னுடைத்தூய்மை
தன்னைக்காட்டுதற்கென்பதுமனக்கொளறகுதி
உன்னைக்காட்டினன்கற்பினுக்கரசியென்றுலகில்
பின்னைக்காட்டுதற்கரியதென்றெண்ணியிப்பெரியோன். (௧௨௩)

பெண்பிறந்தவரருந்ததியேமுதற்பெருமைப்
பண்பிறந்தவர்க்கருங்கலமாகியபாவாய்
மண்பிறந்தகமுனக்குநீவானின்றும்வந்தாய்
எண்பிறந்தநின்குணங்களுக்கினியிழுக்கிலையால். (௧௨௪)

என்னச்சொல்லியவ்வேந்திழைதிருமனத்தியாதும்
உன்னச்செய்யலோர்முனிவின்மைமனக்கொளாவுவந்தான்
பின்னைச்செம்மலவ்விளவலையுள்ளன்புபிணிப்பத்
தன்னைத்தானெனத்தழுவினன்கண்கணீர்ததும்ப. (௧௨௫)

கண்ணினீர்ப்பெருந்தாரைமற்றவன்சடைக்கற்றை
மண்ணினீத்தமொத்திழிதரத்தழீஇநின்றுமைந்த
எண்ணினீக்கரும்பிறவியுமென்னெஞ்சினிறந்த
புண்ணுநீக்கினையுமையனைத்தொடர்ந்துடன்போந்தாய். (௧௨௬)

புரந்தரன்பெரும்பகைஞனைப்பொராவென்றவுன்றன்
பரம்புயர்ந்ததோளாற்றலேதேவரும்பலரும்
நிரந்தரம்புகல்கின்றதுநீயிந்தவுலகின்
அரந்தையாம்பகைதுடைத்தறநிறுத்தினையைய. (௧௨௭)

தயரதன் வரங்கேளெனல்.

என்றுபின்னருமிராமனையானுனைக்கீவ
தொன்றுகூறுதியுயர்குணத்தோயெனவுனையான்
சென்றுவானிடைக்கண்டிடர்தீர்வெனென்றிருந்தேன்
இன்றுகாணப்பெற்றேனினிப்பெறுவதென்னென்றான். (௧௨௮)

ஆயினுமுனக்கமைந்ததொன் றுரையெனவழகன்
தீயளென் றுநீதுறந்தவென்றெய்வமுமகனும்
தாயுந்தம்பியுமாம்வரந்தருகெனத்தாழ்ந்தான்
வாய்திறந்தெழுந்தார்த்தனவுயிரெலாம்வழுத்தி. (௧௨௯)

இராமனுக்குத் தயரதன் வரமளித்தல்.

வரதகேளெனத்தயரதனுரைசெய்வான்மறுவில்
பரதனன்னதுபெறுகதான்முடியினைப்பறித்திவ்
விரதவேடமற்றுதவியபாவிமேல்விளிவு
சரதநீங்கலதாமென்றான்றழீஇயகைதளர. (௧௩0)

தயரதன் கைகேசியையிகழ்தலும் இராமன் சமாதானங் கூறுதலும்.

ஊன்பிழைக்கிலாவுயிர்நெடிதளிக்குநீளரசை
வான்பிழைக்கிதுமுதலெனுதாள்வுறமதித்து
யான்பிழைத்ததல்லாலென்னையீன்றவெம்பிராட்டி
தான்பிழைத்ததுண்டோவென்றானவன்சலந்தவிர்ந்தான். (௧௩௧)

இராமனுக் கிருவரமளித்த தயரதன் சுவர்க்கம் புகுதல்.

எவ்வரங்களுங்கடந்தவனப்பொருளிசைப்பத்
தெவ்வரம்பறுகானிடைச்செலுத்தினுட்கீந்த
அவ்வரங்களுமிரண்டவையாற்றினுற்கீந்த
இவ்வரங்களுமிரண்டென்றார்தேவருமிரங்கி. (௧௩௨)

வரமிரண்டளித்தழகனையிளவலைமலர்மேல்
விரவுபொன்னினைமண்ணிடைநிறுத்திவிண்ணிடையே
உரவுமானமிதேகினனும்பருமுலகும்
பரவுமெய்யினுக்குயிரளித்துறுபுகழ்படைத்தோன். (௧௩௩)

இராமனை யமரர்வரங்கேளென வேண்டுதலு மவன்
இறந்தவானரங்களை யெழுப்பக் கூறுதலும்.

கோட்டுவார்சிலைக்குரிசிலையமரர்தங்குழாங்கள்
மீட்டுநோக்குறுவீரநீவேண்டுவவரங்கள்
கேட்டியாலெனவரக்கர்கள்கிளப்பருஞ்செருவில்
வீட்டமாண்டுளகுரங்கெலாமெழுகெனவிளம்பி. (௧௩௪)

பின்னுமோர்வரம்வானரப்பெருங்கடல்பெயர்ந்து
மன்னுபல்வனமால்வரைக்குலங்கள்மற்றின்ன
துன்னிடங்கள்காய்கனிகிழங்கோடுதேன்றுற்ற
இன்னுணீருளவாகெனவிளம்பிடுகென்றான். (௧௩௫)

வானரங்கள் புகுமிடங்கள் வளமுடையதாக வெனவமரர் வரமளித்தல்.

வரந்தரும்முதன்மழுவலான்முனிவரர்வானோர்
புரந்தராதிமற்றேனையோர்தனித்தனிப்புகழ்ந்தாங்

கரந்தைவெம்பிறப்பறுக்குநாயகனைதருளால்
குரங்கினம்பெறுகென்றனருள்ளமுங்குளிர்ப்பார். (கருரு)

இறந்த வானரமுயிர் பெறுதல்.

முந்தைநாண்முதற்கடைமுறையளவையுமுடிந்த
அந்தவானரமடங்கலுமெழுந்துடனார்த்துச்
சிந்தையோடுகண்களிப்புறச்செருவெலாநினையா
வந்துதாமரைக்கண்ணனைவணங்கினமகிழ்ந்து. (கருஎ)

கும்பகன்னனோடிந்திரசித்துவெங்குலப்போர்
வெம்புவெஞ்சினத்திராவணன்முதலியவீரர்
அம்பின்மாண்டுளவானரமங்குவந்தார்ப்ப
உம்பர்யாவருமிராமனைப்பார்த்திவையுரைத்தார். (கருஅ)

தேவர் இராமனுக்கு இராவணவதம் ஒருபக்கத்திலாயதெனல்.

* இடையுவாவினிற்சுவேலம்வந்திறுத்தெயிலிலங்கைப்
புடையவாவுறச்சேனையைவளைப்புறப்போக்கிப்
படையவாவுறுமரக்கர்தங்குலமுற்றும்படுத்துக்
கடையுவாவினிலிராவணன்றன்னையுங்கட்டு. (கருகூ)

தேவர் வனவாசகால முடிந்ததெனல்.

வஞ்சரில்லையிவ்வண்டத்தினெனும்படிமடித்த
கஞ்சநாண்மலர்க்கையினுயன்னைசொற்காரும்
அஞ்சொடைஞ்சுநான்கென்றெனுமாண்டுபோய்முடிந்த
பஞ்சமிப்பெயர்படைத்துளதிதியின்றுபயந்த. (கசO)

தேவர் நீ இன்றே பரதனைக்காணுவிடி னவன்
தீப்புகுவானெனக் கூறியகறல்.

இன்றுசென்றுநீபரதனையெய்தலையென்னின்
பொன்றுமாலவனெறியிடையன்னதுபோக்க
வென்றிவீரநீபோதியாலென்பதுவிளம்பா
நின்றதேவர்கணீங்கினூரிராகவனினைந்தான். (கசக)

விபீடணன் புட்பகமுளதெனப் புகறல்.

ஆண்டுபத்தொருநாலுமின்றோடறுமாயின்
மாண்டதாமினியென்குலம்பரதனேமாயின்
ஈண்டுபோகவோரூர்தியுண்டோவெனவின்றே
தூண்டுமானமுண்டென்றடல்வீடணன்றொழுதான். (கசஉ)

வாங்கினனிருநிதியொடுதனதனிஃல்வள்ளால்
ஓங்குமால்வெள்ளமெழுபஃதேறினுமொல்கா

* இடையுவா — பூரணை.

தீங்குளாரெலாமிவருவதிவரினீயினிது
பூங்குலாநகர்புகுதியிஞ்ஞான்றெனப்புகலா. (௧௪௩)

இராமன் புட்பகங் கொடுவரக் கூறல்.

இயக்கர்வேந்தனுக்கருமறைக்கிழவனன்றீந்த
துயக்கிலாதவர்மனமெனத்தூயதுசுரர்கள்
வியக்கவான்செலும்புட்பகவிமானமுண்டென்றே
மயக்கிலான்சொலக்கொணருதிவல்லையினென்றான். (௧௪௪)

புட்பகம் கொண்டு வருதல்.

அண்டகோடிகளநந்தமொத்தாயிரமருக்கர்
விண்டதாமெனவிசும்பிடைத்திசையெலாம்விளங்கக்
கண்டையாயிரகோடிகளொலிப்புறக்கதுலக்
கொண்டணைந்தனனொடியினிலரக்கர்தங்கோமான். (௧௪௫)

தேவர் மலர்மாரி பொழிதல்.

அனையபுட்பகவிமானம்வந்தவனியையணுக
இனியசிந்தனையிராகவனுவகையோடினிநம்
வினையமுற்றியதென்றுகொண்டெழுந்தனன்விண்ணோர்
புனைமலர்ச்சொரிந்தார்த்தனராசிகள்புகன்றே. (௧௪௬)

சனகி திரிசடையைவாழ்த்தி இராமனருகிலிருத்தல்.

வணங்குநுண்ணிடைத்திரிசடைவணங்கவான்கற்பிற்
கிணங்கரின்மையாளேக்கியோரிடரின்றியிலங்கைக்
கணங்குதானெனவிருத்தியென்றையன்மாடணைந்தாள்
மணங்கொள்வேலிளங்கோளரிமானமீப்படர்ந்தான். (௧௪௭)

இராமன் விபீடணதியர்க் குரைத்தல்.

அண்டமுண்டவன்மணியணிபுதரமொத்ததிலன்
சண்டவேகமுங்குறைதரநினைவெனுந்தரத்தாய்
விண்டலந்திகழ்விமானப்புட்பகமெனுமதின்மேற்
கொண்டகொண்டறன்றுணைவரைப்பார்த்திவைகுணித்தான். (௧௪௮)

வீடணன்றனையன்புறநோக்குறுவிமலன்
தோடணைந்ததார்மவுலியாய்சொல்வதொன்றுளதுன்
மாடணைந்தவர்க்கின்பமேவழங்கினீளரசி
னூடணைந்தவர்புகழ்ந்திடவீற்றிருநலத்தால். (௧௪௯)

நீதியாறெனத்தெரிவுறுநிலைமைபெற்றுடையாய்
ஆதிநான்மறைக்கிழவனின்குலமெனவமைந்தாய்
ஏதிலார்தொழுமிலங்கைமாநகரினுளினிநீ
போதியாலெனப்புகன்றனனுன்மறைபுகன்றான். (௧௫௦)

சுக்கிரீவனின்றேருடைவன்மையாற்றசந்தெதா
கக்கிரீவனைத்தடிந்துவெம்படையினலசந்த
மிக்கவானரச்சேனையினிளைப்பறமீண்டூர்ப்
புக்குவாழ்கெனப்புகன்றனனீறிலாப்புகழோன். (கருக)

வாலிசேயினைச்சாம்பனைப்பனசனைவயப்போர்
நீலனாதியநெடும்படைத்தலைவரைநெடிய
காலின்வேலையைத்தாவிமீண்டருளியகருணை
போலும்வீரனைநோக்கிமற்றிம்மொழிபுகன்றான். (கருஉ)

விபீடணாதியர் உடன் செலவிழைதல்.

அய்யனிம்மொழிபுகன்றிடத்துணுக்கமோடவர்கள்
மெய்யுமாவியுங்குலைதரவிழிகணீர்ததும்பச்
செய்யதாமரைத்தாளிணைமுடியுறச்சேர்த்தி
உய்கிலேநின்னைநீங்கினென்றினையனவுரைத்தார். (கருங)

பாரமாமதிலயோத்தியினெய்திநின்பைம்பொன்
ஆரமாமுடிக்கோலமுஞ்செவ்வியுமழகும்
சோர்விலாதியாங்காண்குறுமளவையுந்தொடர்ந்து
பேரவேயருளென்றனருள்ளன்புபிணிப்பார். (கருச)

இராமனுமவ்வாறே யெனல்.

அன்பினலவர்மொழிந்தவாசகங்களுமவர்கள்
துன்பமெய்தியநெக்கமுநோக்கிநீர்துளங்கல்
முன்புநானினைந்திருந்ததப்பரிசுநம்முயற்சி
பின்புகாணுமாறுரைத்ததென்றுரைத்தனன்பெரியோன். (கருரு)

சுக்கிரீவாதியர் மகிழ்வுறல்.

அய்யன்வாசகங்கேட்டலுமரிகுலத்தரசும்
மொய்கொள்சேனையுமிலங்கையர்வேந்தனுமுதலோர்
வய்யமாளுடைநாயகன்மலர்ச்சரண்வணங்கி
மெய்யினோடருந்துறக்கமுற்றூரெனவியந்தார். (கருசு)

இராமனனைவரையும் புட்பகத்திலேறக் கட்டளையிடுதல்.

அனையதாகியசேனையோடரசனையநிலன்
தனையனாதியாம்படைப்பெருந்தலைவர்கடம்மை
வனையும்வார்கழலிலங்கையர்மன்னனைவந்திங்
கினிதினேறுமின்விமானமென்றிராகவனிசைத்தான். (கருஎ)

அனைவரும் புட்பகமேறியிருத்தல்.

சொன்னவாசகம்பிற்படச்சூரியன்மகனும்
மன்னுவீரருமெழுபதுவெள்ளவானரரும்

கன்னிமாமதிலிலங்கைமன்னுடெகடற்படையும்
துன்னினார்நெடும்புட்பகமிசையொருகுழல். (௧௫௮)

புட்பகத்திறம்.

பத்துநாலெனவடுக்கியவுலகங்கள்பலவின்
மெத்தியோனிகளேறினும்வெளியிடமிகுமால்
மூத்தரானவரிதனிலைமொழிகுவதல்லால்
இத்தராதலத்தியம்புதற்குரியவர்யாரே. (௧௫௯)

வேறு.

இராமன் புட்பகத்தி லிவ்வாறிருந்தானெனல்.

எழுபதுவெள்ளத்தோருமிரவிகான்முளையுமெண்ணின்
வழுவிலாவிலங்கைவேந்தும்வான்பெரும்படையுஞ்சூழத்
தழுவுசீரிளையகோவுஞ்சனகன்மாமயிலும்போற்ற
விழுமியகுணத்துவீரன்விளங்கினன்விமானத்தும்பர். (௧௬௦)

அண்டமேபோன்றதையன்புட்பகமண்டத்தும்பர்
எண்டருங்குணங்களின்றிமுதலிடையீறின்றாகிப்
பண்டைநான்மறைக்குமெட்டாப்பரஞ்சுடர்பொலிவதேபோல்
புண்டரீகக்கண்வென்றிப்புரவலன்பொலிந்தான்மன்னோ. (௧௬௧)

இராமனாணையால் சுக்கிரீவாதியர் மானுடவடிவங்கொண்டுறுதல்.

தேனுடையலங்கன்மோலிச்செங்கதிர்ச்செல்வன்சேயும்
மீனுடையகழிவேலையிலங்கையர்வேந்தும்வெற்றித்
தானையும்பிறருமற்றைப்படைப்பெருந்தலைவர்தாமும்
மானுடவடிவங்கொண்டார்வள்ளறன்வாய்மைதன்னால். (௧௬௨)

இராமன் சனகிக்கு இலங்கையாதிய காட்டிக்கூறுதல்.

குடதிசைமறைந்தபின்னர்க்குணதிசையுதயஞ்செய்வான்
வடதிசையயனமுன்னிவருவதேகடுப்பமானம்
தடையொருசிறிதின்றாகித்தாவிவான்படரும்வேலை
படையமைவிழியாட்கையனினையனபகரலுற்றான். (௧௬௩)

இலங்கையைவலஞ்செய்தேகவெனநினைந்திடுமுன்மானம்
வலங்கிளர்கிழைவாயில்வரப்பிரகத்தனிலன்
நலங்கிளர்கையின்மாண்டதிவணெனநமன்றன்வாயில்
கலந்திடவீங்குக்கண்டாய்சுபாரிசற்கட்டதென்றான். (௧௬௪)

குடதிசைவாயில்வேகக்குன்றரிந்தவனைவென்ற
விடநிகர்மேகநாதனிளவலால்வீழ்ந்ததென்முன்
வடதிசைவாயின்மேலவ்விராவணன்மவுலிபத்தும்
உடலமுமிழந்ததிங்கென்றுணர்த்திவேறுரைக்கலுற்றான். (௧௬௫)

நன்னுதனின்னைநீங்கிநாள்பலகழிந்தபின்றை
மன்னவனிரவிமைந்தன்வான்றுணையாகநட்ட
பின்னைமாருதிவந்துன்னைப்பேதறுத்துனதுபெற்றி
சொன்னபின்வானரேசர்தொகுத்ததிச்சேதுகண்டாய். (௧௬௬)

இராமன் சேதுமான்மியங்கூறுதல்.

மற்றிதன்றூய்மையெண்ணின்மலரயன்றனக்குமெட்டா
பொற்றொடித்தெரிவையானென்புகலுகேன்கேட்டியன்பால்
பெற்றதாய்தந்தையோடுதேசிகர்பிழைத்துச்சூழ்ந்த
சுற்றமுங்கெடுத்துளோருமெதிர்தரிற்சுரர்களாவார். (௧௬௭)

இந்திரற்கஞ்சிமேனாளிருங்கடல்புக்குநீங்காக்
கந்தரசயிலந்தன்னுட்சண்டவர்வினைகடீர்க்கும்
கந்தமாதனமென்றோதுங்கிரியிவண்கிடப்பகண்டாய்
பைந்தொடியடைத்தசேதுப்பாவனமாவதென்றான். (௧௬௮)

கங்கையோடியமுனைகோதாவிரியொடுகளிந்தைசூழ்ந்த
பொங்குநீர்நதிகள்யாவும்படிந்தலாற்புன்மைபோகா
சங்கெறிதரங்கவேலைதட்டவிச்சேதுவென்னும்
இங்கிதினெதிர்ந்தோர்புன்மையாவையுநீக்குமன்றே. (௧௬௯)

ஆவினைக்குரவரோடுமெருமறைமுனிவர்தம்மைப்
பாவையர்குழவையின்சொற்பாலரைப்பயந்துதம்மின்
மேவினவவரைச்செற்றோர்விரிகடற்சேதுவந்து
தோய்வரேலவர்கள்கண்டாய்சுரர்தொழுஞ்சுரர்களாவார். (௧௭0)

மரக்கலமியங்கவேண்டிவரிசிலைக்குதையாற்கீறித்
தருக்கியவிடத்துப்பஞ்சபாதகரேனுஞ்சாரின்
பெருக்கியவேழுமூன்றுபிறவியும்பிணிகணீங்கி
நெருக்கியவமரர்க்கெல்லாநீணிதியாவரன்றே. (௧௭௧)

நெற்றியினழலுஞ்செங்கணீறணிகடவுணீடு
கற்றையின்சடையின்மேவுங்கங்கையுஞ்சேதுவாகப்
பெற்றிலமென்றுகொண்டுபெருந்தவம்புரிகின்றாளால்
மற்றிதன்றூய்மையெவ்வாறுரைப்பதுமலர்க்கண்வந்தாய். (௧௭௨)

சானகிக்கிராமன் புல்லணைமுதலிய காட்டியுரைத்தல்.

தெவ்வடுஞ்சிலைக்கைவீரன்சேதுவின்பெருமையாவும்
வெவ்விடம்பொருதுமீண்டுமிளிர்தருங்கருங்கட்செவ்வாய்
நொவ்விடைக்குயிலனாட்குநுவன்றுழிவருணனோனா
திவ்விடைவந்துகண்டாய்சரணெனவியம்பிற்றென்றான். (௧௭௩)

இதுதமிழ்முனிவன்வைகுமியறருகுன்றுமுன்னே
னதுவளர்மணிமேலோங்கலப்புறத்துயர்ந்துதோன்றும்
அதுதிக * மநந்தவெற்பென்றருடரவநுமன்ரேன்றிற்
றெதுவெனவணங்கைநோக்கியிற்றெனவிராமன்சொன்னன். (௧௭௪)

வாலியென்றளவிலாற்றல்வன்மையான்மகரநீர்சூழ்
வேலையைக்கடத்தலாயும்விறலுடையவனைவீட்டி
நூலியற்றருமநீதிநுணித்தறங்குணித்தமேலோர்
போலியற்றபனன்மைந்தனுறைதரும்பொறையீதென்றான். (௧௭௫)

சனகி வானரமாதரையும் விமானத்திலேற்றவேண்டுதல்.

கிட்கிந்தையிதுவேலையகேட்டியாலெனதுபெண்மை
மட்குந்தாயவெள்ளமகளிரின்றுகிவாரேனோர்
உட்கும்போர்ச்சேனைசூழவொருத்தியேயயோத்தியெய்தின்
கட்கொந்தார்குழலினரையேற்றுதல்கடன்மைத்தென்றாள். (௧௭௬)

அனுமன் வானரமாதரை யழைத்துவருதல்.

அம்மொழியிரவிமைந்தற்கண்ணனுனுரைப்பவன்னன்
மெய்ம்மைசேரநுமன்றன்னைநோக்கிநீவிரைவின்வீர
மைம்மலிகுழலினரைமரபினற்கொணர்தியென்னச்
செம்மைசேருள்ளத்தண்ணல்கொணர்ந்தனன்சென்றுமன்னே. (௧௭௭)

வானரமாதர் சீதையையுமிராமனையும் வணங்குதல்.

வரிசையின்வழாமைநோக்கிமாருதிமாதர்வெள்ளம்
கரைசெயலரியவண்ணங்கொணர்ந்தனன்கணத்தின்முன்னம்
விரைசெறிகுழலினர்தம்வேந்தனைவணங்கிப்பெண்மைக்
கரசியையயனேடிமடியிணைதொழுதுநின்றார். (௧௭௮)

வானரமாதரைப் புட்பகத்தேற்றிக்கொள்ளுதல்.

மங்கலமுதலவாயமரபினிற்கலப்பையாவும்
அங்கவர்கொணர்ந்துபெண்மைக்கரசியைத்தொழுதுசூழ
நங்கையுமுவந்துவேரோர்நவையிலையினிமற்றென்றாள்
பொங்கியவிமானந்தானுமனமெனவெழுந்துபோன. (௧௭௯)

போதாவிசும்பிற்றிகழ்புட்பகம்போதலோடும்
சூதார்முலைத்தோகையைநோக்கிமுன்ரோன்றுசூழல்
கோதாவிரிமற்றதன்மாடியர்குன்றுநின்னைப்
பேதாய்பிரிவித்துயர்பீழைபிணித்ததென்றான். (௧௮௦)

---

* மதங்கவெற்பு.

வேறு.

சிரத்துவாசவண்டலம்பிடுதெரிவைகேளிதுநீ
டரத்துவாசவர்வேள்வியர்தண்டகமதுதான்
வரத்துவாசவன்வணங்குறுசித்திரகூடம்
பரத்துவாசவனுறைவிடமிதுவெனப்பகர்ந்தான்.

இ-ள். சிரத்து — தலையின்கண், வாசவண்டு — மணமமைந்தவண்டுகள், அலம்பிடு — தேனுண்டொலிக்கின்ற, தெரிவைகேள்-நல்லறிவையுடையாளேகேள், இது — இந்தஇடம், நீள் — மிகுந்த, தரத்து — சலியாது நிற்றலாகிய வலியமைந்த, உவாசவர் — உபாசனைசெய்பவர்களும், வேள்வியர் — யாகங்களைச்செய்பவர்களும் வசிக்கின்ற, தண்டகம் — தண்டகாரணியமாகும், அது — அந்தஇடம், வரத்து — சிறப்பையுடைய, வாசவன்-இந்திரன், வணங்குறு — வணங்குகின்ற, சித்திரகூடம் — சித்திரகூடமலையாகும், இது — இவ்விடம், பரத்துவாசவன்-பரத்துவாசமுனிவன், உறைவிடவென — வசிக்குமிடமென்று, பகர்ந்தான் — சொல்லியருளினான்,— எ-று.

தெரிவையென்னுங் காரணப்பெயர் ஈண்டு யாவுமறியவல்ல இறைவிக்காயிற்று. (கஅக)

பரத்துவாசன் இராமனையெதிர்கோடல்.

மின்னைநோக்கியவீரனிதியம்பிடும்வேலை
தன்னைநேரிலாமுனிவரனுணர்ந்துதன்னகத்தின்
என்னையாளுடைநாயகனெய்தினனென்னாத்
துன்னுமாதவர்சூழ்தரவெதிர்கொள்வான்றொடர்ந்தான். (கஅஉ)

பரத்துவாசன் வருகையை இராமன்காண்டல்.

ஆதபத்திரங்குண்டிகையொருகையினணைத்துப்
போதமுற்றியதண்டொருகையினிற்பொலிய
மாதவப்பயனுருவுகொண்டெதிர்வருமாபோல்
நீதிவித்தகனடந்தமைநோக்கினனெடியோன். (கஅங)

புட்பகத்தினைக் கீழிறங்குமாறு இராமன்நினைத்தல்.

எட்பகத்தினையளவையுங்கருணையோடிசைந்த
நட்பகத்திலாவரக்கரைநருக்கிமாமேரு
விட்பகத்துறைகோளரியெனப்பொலிவீரன்
புட்பகத்தினைவதிகெனநினைந்தனன்புவியில்.

இ-ள். எண் — மற்றையோருடைய எண்ணங்கள், பக — குலைய, தினையளவையும் — தினையளவும், கருணையோடு — கருணையுடனே, இசைந்த — பிறவுயிர்களிடத்துப்பொருந்திய, நட்பு — அன்பு, அகத்திலா — உள்ளத்திலில்லாத, அரக்கரை — இராவணன்முதலிய அரக்கர்களை, நருக்கி-சின்னபின்னஞ்செய்து, மாமேரு — பெரியமேருமலையினது, விட்பகத்

து – குகையினிடத்தில், உறை – வசிக்கின்ற, கோளரியென – வலியமைந்த சிங்கம்போல, பொலிவீரன் – பொலிகின்றசீராகவபிரான், புட்பகத்தினை – புட்பகவிமானத்தை, புவியில் – அப்பூமியின்கண், வதிகெனநினைந்தனன் – தங்குகவென்று திருவுளங்கொண்டனன், — எ-று.

விட்பு-விள்ளெனும்பகுதியும் புவ்விகுதியும்பெற்று விட்பென்றாகி விண்ட இடத்தை யுணர்த்தினமையின் ஆகுபெயர். (௧௮௪)

இராமன் பரத்துவாச னடிபணிதல்.

உன்னுமாத்திரத்துலகினையெடுத்தும்பரோங்கும்
பொன்னிறுவெந்திழிந்தெனப்புட்பகந்தாழ
என்னையாளுடைநாயகன்வல்லையினெதிர்போய்ப்
பன்னுமாமறைத்தபோதனன்றாண்மிசைப்பணிந்தான். (௧௮௫)

பரத்துவாசனிராமனை ஆசீர்வதித்தல்.

அடியின்வீழ்தலுமெடுத்துநல்லாசியோடணைத்து
முடியைமோயினனின்றுழிமுளரியங்கண்ணன்
சடிலநீகெளாழிதரத்தனதுகண்ணருவி
நெடியகாதலங்கலசமதாட்டினனெடியோன். (௧௮௬)

கருகும்வார்குழற்சனகியோடிளவல்கைதொழுதே
அருகுசார்தரவருந்தவனாசிகள்வழங்கி
உருகுகாதலினொழுகுகண்ணீரினனுவகை
பருகுமாரமிழ்தொத்துளங்களித்தனன்பரிவால். (௧௮௭)

இராமன் ஆசிரமத்துக் கழைத்துவருதல்.

வானரேசனும்வீடணக்குரிசிலுமற்றை
ஏனவீரருந்தொழுதொறுமாசிகளியம்பி
ஞானநாதனைத்திருவொடுநன்மனைகொணர்ந்தான்
ஆனமாதவர்குழாத்தொடுமருமறைபுகன்றே. (௧௮௮)

பரத்துவாசன் இராமனுக்கு அதிதிபூசை நடத்திக்கூறுதல்.

பன்னசாலையுட்புகுந்துநீடருச்சனைபலவும்
சொன்னநீதியிற்பிரிந்துபின்சூரியன்மருமான்
றன்னைநோக்கினன்பன்முறைகண்கணீர்ததும்பப்
பின்னொர்வாசகமுரைத்தனன்றபோதரிற்பெரியோன். (௧௮௯)

முனிவர்வானுளோர்மூவுலகத்துளோர்யாரும்
துனியுழந்திடத்துயர்தருகொடுமனத்தொழிலோர்
நனிமடிந்திடவலகைகணடகநடிப்பக்
குனியும்வார்சிலைக்குரிசிலேயென்னினிக்குணிப்பாம். (௧௯௦)

வேறு.

விராதனுங்கரனுமானும்விறல்கெழுகவந்தன்றானும்
மராமரமேழும்வாலிமார்பமுமகரநீரும்
இராவணனுரமுங்கும்பகருணனதேற்றந்தானும்
அராவரும்பகழியொன்றாலழித்துலகளித்தாயைய. (௧௬௧)

சித்திரகூடந்தீர்ந்துதென்றிசைத்தீமைதீர்த்திட்
டித்திசையடைந்தெம்மில்லினிறுத்தமையிறுதியாக
வித்தகமறந்திலேன்யான்விருந்தினையாகியெம்மோ
டித்தினமிருத்தியென்றான்மறைகளினிறுதிகண்டான். (௧௬௨)

பரத்துவாசன் பரதனியல் கூறுதல்.

கரதலமதனினீடுகொர்முகம்வளையவாங்கிச்
சரதம்வானவர்கடுன்பந்தணித்துலகங்கடாங்கும்
மரகதமேனிச்செங்கண்வள்ளலேலவழுவாநீதிப்
பரதனதியல்புமின்றேபணிக்குவென்கேண்மியென்றான். (௧௬௩)

வேறு.

வெயர்த்தமேனியன்விழிபொழிமழையன்மூவினையைச்
செயிர்த்தசிந்தையன்றெருமரலுழந்துழந்திழிவான்
அயர்த்துநோக்கினுந்தென்றிசையன்றிவேறறியான்
பயத்ததுன்பமேவுருவுகொண்டென்னலாம்படியான். (௧௬௪)

இந்தியங்களைந்திருங்கனிகாய்நுகர்ந்திவுளிப்
பந்திவந்தபுற்பாயலான்பழம்பதிபுகாது
நந்தியம்பதியிருந்தனன்பரதனின்றுமம்
அந்தியும்பகலதனினுமறப்பிலனுகி. (௧௬௫)

வேறு.

என்றுரைத்தரக்கர்வேந்தனிருபதென்றுரைக்குநீலக்
குன்றுரைத்தனையதோளுங்குலவரைக்குவடுமேய்க்கும்
என்றுரைத்தனையமௌலித்தலைபத்துமிறுத்தவீர
நின்றனைப்பிரிந்ததுண்டேயாவெனனகிழ்த்திருனல். (௧௬௬)

பரத்துவாசற் கிராமன் பதிலுரைத்தல்.

மின்னையேருழையிறுனும்விரைமலர்த்தவிசிறுனும்
நின்னையேபுகழ்தற்கொத்தநீதிமாதவத்தின்மிக்கோய்
உன்னையேவணங்கியுன்றனருள்கூமந்துயர்ந்தேன்மற்றிங்
கென்னையேபொருவுமைந்தர்யானலாதில்லையென்றான். (௧௬௭)

பரத்துவாசன் வாந்தருவேனென இராமன் வானரம் வாழ வரங்கேட்டல்.

அவ்வுரைபுகலக்கேட்டவறிவனுமருளினேக்கி
வெவ்வரம்பொருதவேலோய்விளம்புகேன்கேட்டிவேண்டிற்
றெவ்வரமெனினுந்தந்தேனியம்புதியெனலுமையன்
கவ்வையின்ருகிவென்றிக்கவிக்குலம்பெற்றுவாழ்க. (கக௮)

பரத்துவாசன் வானரம்வாழிடம் வளமுடைத்தாகென வரமருளுதல்.

அரியினஞ்சென்றசென்றவடவிகளனைத்தும்வானம்
சொரிதருபருவம்போன்றுகிழங்கொடுகனிகாய்துன்றி
விரிபுனல்செழுந்தேன்மிக்குவிளங்கெனவிளம்புகென்ருன்
புரியமாதவனுமஃதேயாகெனப்புகன்றிட்டானல். (கசுக)

பரத்துவாசன் ஓமத்தீயில் சுவர்க்கத்தினை யழைப்பித்தல்.

அருந்தவனையனின்றேடனிகவெஞ்சேனைக்கெல்லாம்
விருந்தினிதமைப்பெனென்றுவிளங்குமுத்தீயினப்பண்
புரிந்தொராகுதியையீந்துபுறப்படுமளவிற்போகம்
திருந்தியவானநாடுசேரவந்திறுத்ததன்றே. (உ00)

அரைசரேயாதியாகவடியவரந்தமாகக்
கரைசெயலரியபோகந்துய்க்குமாகண்டிராமற்
கரைசியல்வழாமைநோக்கியறுசுவையமைக்கும்வேலை
விரைசெறிகமலக்கண்ணனநுமனைவிளித்துச்சொன்ருன். (உ0க)

வேறு.

அநுமனையயோத்திக் கனுப்புதல்.

இன்றுநம்பதிவருதுமுன்மாருதியீண்டச்
சென்றுநீதின்மைசெப்பியத்தீயவித்தினோயோன்
நின்றநீர்மையுநினைவுநீதேர்ந்தெம்பினேர்தல்
நன்றெனுவவன்மோதிரங்கைக்கொடுநடந்தான். (உ0உ)

அநுமன் குகனுக்குமிராமன் வரவுணர்த்திச் செல்லுதல்.

தந்தைவேகமுந்தனதுநாயகன்றனிச்சிலையின்
முந்துசாயகக்கடுமையும்பிற்படமுடுகிச்
சிந்தைபின்வரச்செல்பவன்குகற்குமச்சேயோன்
வந்தவாசகங்கூறிமேல்வான்வழிபோனன். (உ0௩)

வேறு.

இன்றிசைக்கிடமாயவிராகவன்
தென்றிசைக்கருமச்செயல்செப்பினும்
அன்றிசைக்குமரியவயோத்தியின்
நின்றிசைத்துளதன்மைநிகழ்த்துவாம். (உ0ச)

நந்திக்கிராமத்துற்ற பரதன் திறம்.

நந்தியின்பதியின்றலைநாடொறும்
சந்தியின்றிகிரந்தரந்தம்முனார்
பந்தியங்கழற்பாதமருச்சியா
இந்தியங்களைவென்றிருந்தானரோ. (உ0௫)

துன்புறக்கவுஞ்சுற்றியுருக்கொணா
என்புருக்குந்தகைமையதிட்டதாய்
முன்புருக்கொண்டொருவழிமுற்றுறா
அன்புருக்கொண்டதாமெனலாகுவான். (உ0௬)

நினைக்கவுந்தடங்கண்ணிணைநீர்வர
இனத்ததண்டலைநாட்டிருந்தேயுமக்
கனத்தகந்தமுங்காயுங்கனிகளும்
வனத்தவல்லவருந்தலில்வாழ்க்கையான். (உ0௭)

நோக்கிற்றென்றிசையல்லதுநோக்குறான்
ஏக்குற்றேக்குற்றிரவிகுலத்துளான்
வாக்கிற்பொய்யான்வரும்வருமென்றுயிர்
போக்கிப்போக்கியுழக்கும்பொருமலான். (உ0௮)

உண்ணுநீர்க்குமுயிர்க்குமுயிரவன்
எண்ணுங்கீர்த்தியிராமன்றிருமுடி
மண்ணுநீர்க்குவரம்புகண்டாலன்றிக்
கண்ணினீர்க்கொர்கரையெங்குங்காண்கிலான். (உ0௯)

அனையனுயபரதனலங்கலிற்
புனையுந்தம்முனார்பாதுகைப்பூசனை
நினையுங்காலநினைத்தனனுமரோ
மனையின்வந்தவனெய்தமதித்தநாள். (உ௧0)

சோதிடர் இன்றிராமன் வரவேண்டுநாளெனல்.

யாண்டுவந்திங்கிறுக்குமென்றெண்ணினான்
மாண்டசோதிடவாய்மைப்புலவரை
ஈண்டுகூய்த்தருகென்னவந்தெய்தினார்
ஆண்டகைக்கின்றறுதியென்றாரரோ. (உ௧௧)

என்றபோதத்திராமன்வனத்திடைச்
சென்றபோதத்ததவ்வுரைசெல்வத்தை
வென்றபோதத்தவீரனும்வீழ்ந்தனன்
கொன்றபோதத்துயிர்ப்புக்குறைந்துளான். (உ௧உ)

பரதன் மயங்கித் தெளிதல்.

மீட்டெழுந்துவிரிந்தசெந்தாமரைக்
காட்டைவென்றெழுகண்கலுழிப்புனல்
ஓட்டவுள்ளவுயிரினையூசனின்
ருட்டவும்மவலத்தழிந்தானரோ. (உகரு)

இராமன் வராமையைக்குறித்துப் பரதன் பலவாறு கருதுதல்.

எனக்கியம்பியநாளுமெனின்னலும்
தனைப்பயந்தவனேயமுந்தாங்கியவ்
வனத்துவைகல்செய்யான்வந்தடுத்ததோர்
வினைக்கொடும்பகையுண்டெனவிம்மினான். (உகச)

மூவகைத்திருமூர்த்தியாராயினும்
பூவகத்தில்விசும்பிற்புறத்தினில்
ஏவர்நிற்பரெதிர்நிற்கவென்னுடைச்
சேவகற்கெனவையமுந்தேறினான். (உகரு)

என்னையின்னுமரசியலிச்சையான்
அன்னனாகினவனதுகொள்கவென்
றுன்னினான்கொலுறுவதுநோக்கினான்
இன்னதேநலனென்றிருந்தானரோ. (உகசு)

அனைத்திலங்கொன்றுமாயினுமாகுக
வனத்திருக்கவிவ்வையம்புகுதுக
நினைத்துருந்துதுயரமுழக்கிலேன்
மனத்துமாசென்னுயிரொடும்வாங்குவேன். (உகஎ)

பரதன் சத்துருக்கனை அழைப்பித்தல்.

என்னப்பன்னியிளவலையென்னுழைத்
துன்னச்சொல்லுதிரென்றலுந்தூதர்போய்
உன்னைக்கூயினனும்முனௌமுனம்
முன்னர்ச்சென்றனன்மூவர்க்கும்பின்னுளான். (உகஅ)

தொழுதுநின்றதன்றம்பியைத்தோய்கணீர்
எழுதுமார்பத்திறுகத்தழுவினான்
அழுதுவேண்டுவதுண்டையவவ்வரம்
பழுதிலாமையினுற்றரற்பாற்றென்றான். (உகக)

சத்துருக்கனை நீயரசனாதியெனப் பரதன்கூறுதல்.

என்னதாகுங்கொலவ்வரமென்றியேல்
சொன்னநாளிலிராகவன்றோன்றிலன்

மின்னுதீயிடையானினிவீடுவென்
மன்னனுதியென்சொல்லைமறுதென்றான். (உஉ0)

அதுகேட்ட சத்துருக்கன் நடுங்குதல்.

கேட்டதோன்றல்கிளர்தடக்கைகளால்
தோட்டதன்செவிபொத்தித்துணுக்குறு
ஊட்டுநஞ்சமுண்டானொத்துயங்கினன்
நாட்டமும்மனமுநடுங்காநின்றான். (உஉக)

விழுந்துமேக்குயர்விம்மலன்வெய்துயிர்த்
தெழுந்துநானுனக்கென்னபிழைத்துள
தழுந்துதுன்பத்தினுயெனச்சாற்றினன்
கொழுந்துவிட்டுநிமிர்கின்றகோபத்தான். (உஉஉ)

வேறு.

சத்துருக்கன் பதிலுரைத்தல்.

கானுளநிலமகளைக்கைவிட்டுப்போவானைக்காத்துப்பின்பு
போனுனுமொருதம்பிபோனவர்கள்வருமவதிபோயிற்றென்று
ஆனுதவுயிர்விடவென்றமைவானுமொருதம்பியயலேநானு
தீயானுமிவ்வரசாள்வெனென்னேயிவ்வரசாட்சியினிதேயம்மா. (உஉஙு)

மன்னிற்பின்வளநகரம்புக்கிருந்துவாழ்ந்தானேபரதனென்னும்
சொன்னிற்குமென்றஞ்சிப்புறத்திருந்துமருந்தவமேதொடங்கினுயே
என்னிற்பின்னிவனுளனுமென்றேபின்னடிமையுனக்கிருந்ததேனும் [ன்.
உன்னிற்பின்னிருந்ததுவு மொருகுடைக்கீழிருப்பதுவு மொக்குமென்று

முத்துருக்கொண்டமைந்தனைய முழுவெள்ளிக்கொழுநிறத்து முள
ரிச்செங்கட்,சத்துருக்கனஃதுரைப்பவவனிங்குத்தாழ்க்கின்றதன்மையா
னிங்,கொத்திருக்கலாலன்றேயுலந்தாற்பினிவ்வுலகையுலையவொட்டான்
அத்திருக்குங்கெடுமுடனே புகுந்தாளுமரசெரிபோ யமைக்கவென்றான்.

கோசலையெய்திப் பரதனைத்தடுத்தல்.

அப்பொழுதினிவ்வுரைசென்றயோத்தியினினிசைத்தலுமேயரியை
யீன்ற, ஒப்பெழுதவொண்ணுத கற்புடையாள்வயிறுபுடைத் தலமந்தேங்
கி, இப்பொழுதேயுலகிறக்கும் யாக்கையினைமுடித்தொழிந்தான் மகனே
யென்று, வெப்பெழுதினுலன்னமெலிவுடையாள்கடிதோடி விலக்கவந்
தாள். (உஉசு)

மந்திரியர்தந்திரியர்வளநகரத்தவர்மறையோர்மற்றுஞ்சுற்றச்
சுந்தரியரெனைப்பலருங்கைதலையிற்பெய்திரங்கித்தொடர்ந்துசெல்ல
இந்திரனேமுதலாயவிமையவருமுனிவருமிறைஞ்சியேத்த
அந்தரமங்கையர்வணங்கவழுதாற்றிப்பரதனைவந்தடைந்தாளன்றே. ()

எரியமைக்குமயானத்தை யெய்துகின்றகாதலனை யிடையேவந்து, விரியமைத்தநெடுவேணிபுறத்தசைந்துவீழ்ந்தொசியமேனிதள்ளச், சொரியமைப்பதரிதாய மழைக்கண்ணொடொடருதலுந்துணுக்கமெய்தாப், பரிவமைந்ததிருமனத்தானடிதொழுதானவள்புகுந்துபற்றிக்கொண்டாள். ()

வேறு.

மன்னிழைத்ததுமைந்தனிழைத்ததும்
முன்னிழைத்தவிதியின்முயற்சியால்
பின்னிழைத்ததுமெண்ணிலப்பெற்றியால்
என்னிழைத்தனையென்மகனேயென்றாள். (உஉக)

நீயிதெண்ணினையேனெடுநாடெரி
பாயுமன்னருஞ்சேனையும்பாயுமால்
தாயரெம்மளவன்றுதனியறம்
தீயின்வீழுமுலகுந்திரியுமால். (உநூ0)

தருமநீதியின்றற்பயனுவதூன்
கருமமேயன்றிக்கண்டிலங்கண்களால்
அருமையொன்றுமுணர்ந்திலையையநின்
பெருமையூழிதிரியினும்பேருமோ. (உநூக)

எண்ணில்கோடியிராமர்களென்னினும்
அண்ணனின்னருளுக்கருகாவரோ
புண்ணியம்மெனுநின்னுயிர்போயினால்
மண்ணும்வானுமுயிர்களும்வாழுமோ. (உநூஉ)

இன்றுவந்திலனேயெனினோவியே
ஒன்றும்வந்துனையுன்னியுரைத்தசொல்
பின்றுமென்றுணரேற்பிழைத்தானெனின்
பொன்றுந்தன்மைபுகுந்ததுபோயென்றாள். (உநூங)

ஒருவன்மாண்டனனென்றுகொண்டேழிவாழ்
பெருநிலத்துப்பெறலருமின்னுயிர்க்
கருவுமாண்டறக்காணுதியோகலைத்
தருமநீயலதில்லெனுந்தன்மையாய். (உநூச)

இறக்கையுஞ்சிலரேகலுமோகத்தால்
பிறக்கையுங்கடனென்றுபின்பாசத்தை
மறக்கைகாண்மகனேவலியாவது
துறக்கைதானுமென்றாண்மனந்தூய்மையாள். (உநூரு)

மைந்தனென்னைமறுத்துரைத்தானெனல்
எந்தைமெய்ம்மையுமிக்குலச்செய்கையும்

னைந்துபோகவுயிர்நிலைநச்சிலேன்
முந்துசெய்தசபதமுடிப்பனால். (உநசு)

பரதன் கோசலாதேவிக்குப் பதிலுரைத்தல்.

யானுமெய்யினுக்கின்னுயிரீந்துபோய்
வானுளெய்தியமன்னவன்மைந்தனால்
கானுளெய்தியகாகுத்தற்கேகடன்
ஏனையோர்க்கிதிழுக்கில்வழக்கன்றே. (உநஎ)

தாய்சொற்கேட்டலுந்தந்தைசொற்கேட்டலும்
பாசத்தன்பினைப்பற்றறநீக்கலும்
ஈசற்கேகடன்யானஃதிழைக்கிலென்
மாசற்றேனிதுகாட்டுவென்மாண்டென்றான். (உநஅ)

பரதன் தீயில்விழ முந்துதலும் அனுமானெய்தித்தடுத்தலும்.

என்றுதீயினையெய்தியிரைத்தெழுந்
தொன்றுபூசலிடுமுலகோருடன்
நின்றுபூசனைசெய்கின்றநேசற்குக்
குன்றுபோனெடுமாருதிகூடினான். (உநகூ)

அனுமன் கையாலெரியை யவித்தல்.

அய்யன்வந்தனனாரியன்வந்தனன்
மெய்யின்மெய்யனெனின்னுயிர்வீடினால்
உய்யுமேயவனென்றுரைத்துட்புகாக்
கய்யினாலெரியைக்கரியாக்கினான். (உசo)

ஆக்கிமற்றவனுய்மலர்த்தாள்களைத்
தாக்கத்தன்றலைதாழ்ந்துவணங்கிக்கை
வாக்கிற்கூடப்புதைத்தொருமாற்றந்
தூக்கிக்கொள்ளத்தகுமெனச்சொல்லினான். (உசக)

இராமன் வருதற்கின்னம் நாழிகைநாற்பதுளதெனல்.

இன்னநாழிகையெண்ணைந்துளதைய
உன்னைமுன்னும்வந்தெய்தவுரைத்தநாள்
அன்னதில்லையெனினடிநாயினேன்
முன்னம்வீழ்ந்திவ்வெரியின்முடிவெனால். (உசஉ)

ஒன்றுதானுளதுன்னடியேன்சொலால்
நின்றுதாழ்ந்துளநேமிச்சுடர்குணக்
குன்றுதோன்றளவும்மிதுகுன்றுமேல்
பொன்றுநீபுமுலகமும்பொய்யிலாய். (உசந)

இராமன் பரத்துவாசாச்சிரமத்தி லிருக்கின்ருனென
வனுமனுரைத்தல்.

எங்களுயகற்கின்னமுதீகுவான்
பங்கயத்துப்பரத்துவன்வேண்டலால்
அங்குவைகினனல்லதுதாழ்க்குமோ
இங்கணல்லதொன்றின்னமுங்கேட்டியால். (உசச)

அண்டர்நாதனருளியளித்துள
துண்டொர்பேரடையாளமுனக்கது
கொண்டுவந்தனென்கோதற்றசிந்தையாய்
கண்டுகொண்டருள்வாயெனக்காட்டினுன். (உசரு)

வேறு.

அனுமனிராமன் கணையாழியையளித்தல்.

காட்டியமோதிரங்கண்ணிற்காண்டலும்
ஊட்டியவல்விடமுற்றுமுற்றுவார்க்
கூட்டியநன்மருந்தொத்ததாமரோ
ஈட்டியவுலகுக்குமிளையவேந்தற்கும். (உசசு)

அழுகின்றவாயெலாமார்த்தெழுந்தன
விழுகின்றகண்ணெலாம்வெள்ளமாறிமுன்
உழுகின்றதலையெலாமுயர்ந்தெழுந்தன
தொழுகின்றகையவாய்க்காலின்ருன்றலை. (உசஎ)

ஆழிகண்டவனவரு மகிழ்வுறல்.

மோதிரம்வாங்கித்தன்முகத்தின்மேலணைத்
தாதரம்பெறுவதற்காக்கையோவெனு
ஓதினர்நாணுறவோங்கினன்ருேழும்
தாதனைமுறைமுறைதொழுதுதுள்ளுவான். (உசஅ)

ஆதிவெந்துயரலாலருந்தலின்மையால்
ஊதுறப்பறப்பதாயுலர்ந்தயாக்கைபோய்
ஏதிலனொருவன்கொலென்னலாயது
மாதிரம்வளர்ந்தனவயிரத்தோள்களே. (உசகூ)

அழுநகுமநுமனையாழிக்கைகளால்
தொழுமெழுந்துள்ளும்வெங்களிதுளக்கலால்
விழுமழிந்தேங்கும்போய்வீங்கும்வேர்க்குமக்
குழுவொடுங்குனிக்குந்தன்றடக்கைகொட்டுமால். (உருo)

ஆடுமினுடுமினென்னுமையன்பால்
ஓடுமினேடுமினென்னுமோங்கிசை

பாடுமின்பாடுமினென்னும்பாவிகாள்
சூடுமின்சூடுமின் றாதன்றேளெனும். (உ௫௧)

வஞ்சனையியற்றியமாயக்கைகையார்
துஞ்சுவரினியெனத்தோளைக்கொட்டுமால்
குஞ்சிதவடிகண்மண்டிலத்திற்கூட்டுற
அஞ்சனக்குன்றுநின்றாடும்பாடுமால். (உ௫உ)

வேதியர்தமைத்தொழும்வேந்தரைத்தொழும்
தாதியர்தமைத்தொழுந்தன்னைத்தான்றொழும்
ஏதுமொன்றுணர்குறாதிருக்குநிற்குமால்
காதலென்றதுவுமோர்கள்ளிற்றேற்றிற்றே. (உ௫௩)

அனுமனைப்பரதன் நின் வரலாறறிய விரும்புகின்றேனெனல்.

அத்திறத்தாண்டகையநுமன்றன்னைநீ
எத்திறத்தாயெமக்கியம்பியீதியால்
முத்திறத்தவருளேயொருவன்மூர்த்திவே
றுத்திருந்தாயெனவுணர்கின்றேனென்றான். (உ௫௪)

மறையவர்வடிவுகொண்டணுகவந்தனை
இறைவரினொருவனென்றெண்ணுகின்றனென்
துறையெனக்கியாதெனச்சொல்லுசொல்லென்றான்
அறைகழலநுமனுமறியக்கூறுவான். (உ௫௫)

அனுமன் தன்வரலாறு கூறுதல்.

காற்றினுக்கயல்வந்தகவிக்குலத்துளான்
நோற்றனள்வயிற்றின்வந்துதித்துநும்முனூற்
கேற்றிலாவடித்தொழிலேவலாளனேன்
மாற்றினெனுருவொருகுரங்குமன்னயான். (உ௫௬)

அனுமன் சுயவுருவம் கோடல்.

அடித்தொழிலுயினேனற்பயாக்கையைக்
கடித்தடந்தாமரைக்கண்ணிஞேச்கெனப்
பிடித்தபொய்யுருவினைப்பெயர்த்துநீக்கினன்
முடித்தலம்வானவர்நோக்கின்முன்னுவான். (உ௫௭)

வெஞ்சிலையிருவரும்விரிஞ்சன்மைந்தனும்
எஞ்சலிலதிசயமிதுவென்றெண்ணினர்
துஞ்சிலதாயினுஞ்சேனைதுண்ணென
அஞ்சினதஞ்சனைசிறுவனாக்கையால். (உ௫அ)

பரதன் அனுமனை உருவஞ்சுருக்க வேண்டுதல்.

ஈங்குநின்றியாமுனக்கிசைத்தமாற்றமத்
தூங்கிருங்குண்டலச்செவியின்சூழ்வர
ஓங்கலவாதலினுலப்பில்யாக்கையை
வாங்குதிவிரைந்தெனமன்னன்வேண்டினான். (உருக)

அனுமனுக்குப் பரதன் சன்மானமளித்தல்.

சுருக்கியவுருவனுத்தொழுதுமுன்னின்ற
அருக்கன்மாணவகனுக்கையனன்பினால்
பொருக்கெனநிதியமும்புனைபொற்பூண்களின்
வருக்கமும்வரம்பிலநனிவழங்கினான். (உசூ0)

கோவொடுதூசுநற்குலமணிக்குலம்
மாவொடுபரிக்குலம்வாவுதேரினம்
தாவுநீருடுத்தநற்றரணிதன்னுடன்
ஏவருஞ்சிலைவலான்யாவுநல்கினான். (உசூக)

பரதன் சத்துருக்கனை நகரலங்காரச் செய்பத்திட்டஞ் செய்தல்.

இளவலையண்ணலுக்கெதிர்கொளென்றுநம்
வளமதிலயோத்தியில்வாழுமாக்களைக்
கிளையொடுமேகெனக்கிளத்திஎங்கணும்
அளையொலிமுரசினமறைவிப்பாயென்றான். (உசூஉ)

தோரணநட்டுமேற்றுகில்பொதிந்துநற்
பூரணப்பொற்குடம்பொலியவைத்துநீள்
வாரணமிவுளிதேர்வரிசைதான்வழாச்
சீரணியணிகெனச்செப்புவாயென்றான். (உசூங)

பரத்துவனுறைவிடத்தளவும்பைம்பொனீள்
சிரத்தொகைமதிற்புறத்திறுதிசேர்தர
வரத்தகுதரளமென்பந்தர்வைத்துவான்
புரத்தையும்புதுக்குவபுகறிபோயென்றான். (உசூச)

என்றலுமவனடியிறைஞ்சியெய்தியக்
குன்றுறழ்வரிசிலைக்குவவுத்தோளினான்
நன்றுணர்கேள்வியனவையில்செய்கையன்
தன்றுணைச்சுமந்திரற்கறியச்சாற்றினான். (உசூரு)

அவ்வுரைகேட்டலுமறிவின்வேலையான்
கவ்வையிலன்பினிற்களிக்குஞ்சிந்தையான்
வெவ்வெயிலெறிமணிவீதியெங்கணும்
எவ்வமின்றறைபறையெற்றுகென்றிட. (உசூசூ)

இராமனை எதிரேற்க வனைவரும்வருதிரென முரசறைதல்.

வானையுந்திசையையுங்கடந்தவான்புகழ்க்
கோனையின்றெதிர்கொள்வான்கோலமாநகர்த்
தானையுமரசருமெழுகதானென
யானையின்வள்ளுவன்முரசமெற்றினன். (உகஎ)

முரைசொலிகேட்டலுமுழங்குமாநகர்
அரைசருமாந்தருமந்தணாளரும்
கரைசெயலரியதோருவகைகைதரத்
திரைசெறிகடலெனவெழுந்துசென்றதால். (உகஅ)

அனகனையெதிர்கொளென்றறைந்தபேரிநற்
கனகநல்கூர்ந்தவன்கைப்பட்டென்னவும்
சனகனதூர்க்கென முன்னஞ்சாற்றிய
வனைகடிப்பேரியுமொத்தவாமரோ. (உகக)

அறுபதினாயிரமக்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமேனைவேந்தரும்
செறிநகர்மாந்தருந்தெரிவைமார்களும்
உறுபொருளெதிர்ந்தெனவுவந்துபோயினர். (உஎ0)

அன்னையர்மூவருமமரர்போற்றிடப்
பொன்னினற்சிவிகையினெழுந்துபோயபின்
தந்நிகர்முனிவருந்தமருஞ்சூழ்தர
மன்னவன்மாருதிமலர்க்கைபற்றுரு. (உஎக)

திருவடியிரண்டுமேசெம்பொன்மௌலியா
இருபுறஞ்சாமரையிரட்டவேழ்கடல்
வெருவருமுழக்கெனவேழமார்த்தெழப்
பொருவருவெண்குடைநிழற்றப்போயினன். (உஎஉ)

சூரியாத்தமனம்.

எல்லவன்மறைந்தனனென்னையாளுடை
வில்லியையெதிர்கொளப்பரதன்மீச்செல்வான்
அல்லியங்கமலமேயனையதாள்களில்
கல்லதர்சுடுந்தனகதிரினென்னவே. (உஎங)

பரதன் அனுமனை இராமனிருப்பிட மாதியகேட்டல்.

அவ்வழிமாருதியங்கைபற்றிய
செவ்வழியுள்ளத்தான்றிருவினையகன்
எவ்வழியுறைந்ததச்செயலெலாம்விரித்
திவ்வழியெமக்குரீயியம்புவாயென்றான். (உஎச)

## அனுமன் இராமன்றிறமுரைத்தல்.

என்றனுமாருதிதொழுதிங்கெம்பிரான்
மன்றலர்தொடையினயோத்திமாநகர்
நின்றதுமணவினைநிரப்பிமீண்டுதான்
சென்றதுநாயினேன்செப்பல்வேண்டுமோ. (உஎரு)

சித்திரகூடத்தைத்தீர்ந்தபின்சிரம்
பத்துடையவனுடன்விளைந்தபண்புந்தான்
இத்தலையடைந்ததுமிறுதியாமென
வித்தகத்தூதனும்விரிக்குஞ்சிந்தையான். (உஎசு)

குன்றுறழ்வரிசிலைக்குரிசிலெம்பிரான்
தென்றிசைச்சித்திரகூடந்தீர்ந்தபின்
வன்றிறல்விராதனைமடித்துமாதவர்
துன்றியதண்டகவனத்துட்டுன்னினான். (உஎஎ)

ஆங்குறைதபோதனரரக்கர்க்காற்றலே
நீங்கினந்தவத்துறைநீதியோவெனத்
தீங்குசெய்தவர்களைச்செகுத்தறிண்ணநீர்
வாங்குமின்மனத்துயர்வாய்மையாலென்றான். (உஎஅ)

ஆறுநாலாண்டவண்வைகியப்புறத்
தீறிலாமுனிவரரேயவாணையால்
மாறிலாத்தமிழ்முனிவனத்தைநண்ணினான்
ஊறிலாமுனிவரனுவந்துமுன்வர. (உஎகூ)

குடங்கையில்வாரிதியினைத்துங்கொண்டவன்
தடங்கணான்றனையெதிர்தழுவிச்சாபமும்
கடுங்கணைப்புட்டிலுங்கவசந்தானுமற்
றிடம்படுசுரிகையுஞ்சேரவீந்தனன். (உஅ௦)

அப்புறத்தெருவையினரசைக்கண்ணுறுத்
துப்புறச்சிவந்தவாய்த்தோகைதன்னுடன்
மெய்ப்புகழ்த்தம்பியும்வீரன்றானும்போய்
மைப்பொழிறுறுபஞ்சவடியின்வைகினான். (உஅக)

வேறு.

பல்பகலிறந்தபின்றைப்பாதகவரக்கிதோன்றி
மெல்லியவிடையினாளைவெகுண்டுழியிளையவீரன்
அல்கியதிருவைத்தேற்றியவளுடைச்செவியுமூக்கும்
மல்கியமுலையுங்கொய்தான்மறித்திவள்கரற்குச்சொன்னாள். (உஅஉ)

கரனொடுதிரிசிராவுங்கரியதூடணனுங்காந்தி
எரியுமூன்றனலையொப்பாரெழுந்துவெஞ்சேனையோடும்
விரவினரையன்செங்கைவில்லினைநோக்குமுன்போர்
எரிதழற்பஞ்சியொத்தாரரக்கியுமிலங்கைபுக்காள். (௨௮௩)

இருபதுதடக்கையான்மாட்டிசைத்தலுமெழுந்துபொங்கி
ஒருபதுதிசையுமுட்கவஞ்சகவுழையொன்றேவித்
தருபதஞ்சமைந்தமுக்கோற்றாபதர்வடிவங்கொள்ளாத்
திருவினைநிலத்தோடேந்தித்தென்றிசையிலங்கைபுக்கான். (௨௮௪)

போகின்றகாலையேற்றசடாயுவைப்பொருதுவீட்டி
வேகின்றவுள்ளத்தாளைவெஞ்சிறையதனின்வைத்தான்
ஏகின்றவஞ்சமான்மாரீசற்கொன்றிளவலோடு
பாகின்றகீர்த்தியண்ணறந்தையைப்பரிவிற்கண்டான். (௨௮௫)

அன்னவன்றனக்குவேண்டுமருங்கடன்முறையினாற்றி
நன்னுதறன்னைத்தேடித்தென்றிசைநடக்குமையன்
மன்னியகவந்தன்றன்னையுயிரொடுசாபமாற்றித்
தன்னையேமறப்பிலாதசவரிபூசனையுங்கொண்டான். (௨௮௬)

ஆங்கவடனதுசொல்லாலருக்கன்மாமகனையெய்திப்
பாங்குறநட்டுவாலிபருவரல்கெடுப்பேனென்று
ஓங்கியமராமும்வாலியுரமுமூடுருவவெய்திட்
டாங்கவன்றனக்குச்செல்வமரசொடுமருளினீந்தான். (௨௮௭)

காலமாமாரிநீங்கக்கயவனோடிடவன்காந்து
நீலன்மாமயிந்தன்சாம்பன்சதவலிபநசனீடும்
வாலிமாமைந்தனென்றிவ்வானரத்தலைவராய
கூலவான்சேனைசூழவடைந்தனனங்கள்கோமான். (௨௮௮)

எழுபதுவெள்ளத்துற்றகுரங்கினமெழுந்துபொங்கி
அழுவநீர்வேலையென்னவடைந்துழியருக்கன்மைந்தன்
தழுவியதிசைகடோறுந்தனித்தனியிரண்டுவெள்ளம்
பொழுதிறைதடாதுமீளப்போக்கினன்றிருவைநாடி. (௨௮௯)

தென்றிசையிரண்டுவெள்ளஞ்சேனையும்வாலிசேயும்
வன்றிறற்சாம்பனோடுவாவினரேவநாயேன்
குன்றிடையிலங்கைபுக்குத்திருவினைக்குறித்துமீண்ட
பின்றைவந்தளக்கர்வேலைபெரும்படையிறுத்ததன்றே. (௨௯0)

அறிவினுக்கறிவுபோல்வான்வீடணனலங்கற்றோளான்
செறிபுயத்தரக்கன்றம்பிதிருவினைவிடுதியன்றேல்

இறுதியுற்றனைநின்வாழ்நாளெனவவனுரைப்பச்சீறிக்
கறுவுறப்பெயர்ந்துபோந்துகருணையான்சரணம்பூண்டான். (உகக)

ஆங்கவற்கவயாசல்கியரசொடுமுடியுமீந்து
பாங்கினால்வருணன்றன்னையழைத்திடப்பரிவிலாமை
தாங்கினன்சிறிதுபோதுதாமரைநயனஞ்சேப்ப
ஓங்கிநீரேழுமன்றனுடலமும்வெந்தவன்றே. (உகஉ)

மற்றவனவயமென்னமலர்ச்சரணடைந்தவேலை
வெற்றிவானரர்கள்பொங்கிவெற்பினால்வேலைதட்டல்
முற்றுறநன்கியற்றிமொய்யொளியிலங்கைபுக்குப்
பற்றினர்சுற்றியார்த்தார்வானவர்பயங்கடீர்ந்தார். (உகங)

மலையினையெடுத்ததோளுமதமலைதிளைத்தமார்பும்
தலையொருபத்துஞ்சிந்தித்தம்பிதன்றோளுந்தாளும்
கொலைதொழிலரக்கராயோர்குலத்தொடுந்தலத்துவீழச்
சிலையினைவளைவித்தையதேவர்களிடுக்கண்டீர்த்தான். (உகச)

இலக்குவன்பகழியொன்றாலிந்திரசித்தென்றோதும்
விலக்கருவலத்தினானுமிளைஞருங்கிளையும்வீழ்ந்தார்
அலக்கணுண்டுழலுந்தேவரலர்மழைதூவியார்த்தன்
றுலக்குநர்குழுக்கடோறுமுடற்குறையாடல்கண்டார். (உகரு)

தேவருமுனிவர்தாமுஞ்சித்தருந்தெரிவைமாரும்
மூவகையுலகுளோருந்தனித்தனிப்புகழ்ந்துமொய்ப்பப்
பூவைபோனிறத்தினானும்வீடணப்புலவர்கோமாற்
கியாவையுமியம்பிமாண்டோர்க்கியற்றுதிகடன்களென்றான். (உகசு)

நான்முகன்விடையையூருநாரியோர்பாகத்தண்ணல்
மான்முகன்முதலாயுள்ளவானவர்தொழுதுபோற்ற
ஊன்முகங்கெழுவுவேலாயும்பர்நாயகியைச்சீறித்
தேன்முகமலருந்தாரானரிசொலச்சீற்றந்தீர்ந்தான். (உகஎ)

மெய்யினுக்குயிரையீந்தவேந்தர்கோன்விமானத்தெய்த
அய்யனுமிளையகோவுமன்னமுமடியில்வீழக்
கய்யினாற்பொருந்தப்புல்லிக்கண்ணினீர்க்கலசமாட்டிச்
செய்வரமருளுகென்றான்றிருவினையகனுங்கொண்டான். (உகஅ)

என்னைநன்கருணைதன்னாலீன்றெடுத்தினிதுபேணும்
அன்னையுமகனுமுன்போலாகெனவருளினீந்து
மன்னவன்போயபின்றைவானரம்வாழ்வுகூரப்
பொன்னெடுநாட்டிலுள்ளார்வரம்பலவழங்கிப்போனார். (உகக)

வெள்ளமோரேழுபத்துவிலங்கரும்வீரராகி
உள்ளவரறுபத்தேழுகோடியுமொற்றையாழி
வள்ளறன்மகனுமுள்ளமகிழ்வுறவிமானமீந்தான்
எள்ளலிலாதகீர்த்திவீடணனிலங்கைவேந்தன். (ரு00)

ஆரியன்பின்னைநின்னையன்பினனினைந்துகாதற்
சூரியன்மகனுந்தொல்லைத்துணைவருமிலங்கைவேந்தும்
பேரியற்படையுஞ்சூழப்பெண்ணினுக்கரசியோடும்
சீரியவிமானத்தேறிப்பரத்துவனிருக்கைசேர்ந்தான். (ரு0க)

அன்பினுலென்னைநின்பாலாழியுங்காட்டியான்ற
துன்பெலாந்துடைத்தியென்றேதுரந்தனன்றான்றலென்று
முன்பினுவியன்றவெல்லாமொழிந்தனன்முதுநீர்தாவி
அன்பினுலிலங்கைமுற்றுமெரிக்குணவாகவைத்தோன். (ரு0உ)

அனுமனு விராமசரிதமுணர்ந்த பரதன்வருந்தி நிற்றல்.

காலின்மாமதலைசொல்லப்பரதனுங்கண்ணீர்சோர
வேலிமாமதில்கள்சூழுமிலங்கையில்வேட்டங்கொண்ட
நீலமாமுகில்பின்போனுனொருவனுனின்றுணைவேன்
போலுமாலிவைகள்கேட்பேன்புகழுடைத்தடிமைமன்னே. (ரு0ங)

பரதன் கங்கைக்கரை யடைதல்.

என்றவனிரங்கியேங்கியிருகணுமருவிசோர
வன்றிறலநுமன்செங்கைவலக்கையாற்பற்றிக்காலின்
சென்றனனிருளினூடுசெறிபுனற்கங்கைசேர்ந்தான்
குன்றினைவலஞ்செய்தேரோன்குணகடற்றேன்றுமுன்னர். (ரு0ச)

சூரியனுதித்தல்.

இராவணன்வேட்டம்போய்மீண்டெம்பிரானயோத்தியெய்தித்
தராதலமகளும்பூவிற்றையலுமகிழச்சூடும்
அராவுபொன்மௌலிக்கேய்ந்தசிகாமணிகுணபாலண்ணல்
விராவுறவெடுத்தாலென்னவெய்யவனுதயஞ்செய்தான். (ரு0ரு)

காலைவந்திறுத்தபின்னர்க்கடன்முறைகமலக்கண்ணன்
கூலநீள்கழல்களேத்திக்குரக்கினத்தரசைநோக்கிச்
சாலவுங்கலைகள்வல்லோய்தவறுண்டுபோலும்வாய்மை
மூலமேயுணரினுன்றன்மொழிக்கெதிர்மொழியுமுண்டோ. (ரு0சு)

பரதன் சந்தேகத்தாலனுமனை வினுதல்.

எழுபதுவெள்ளஞ்சேனைவானரிலங்கைவேந்தன்
முழுமுதற்சேனைவெள்ளங்கணக்கிலமொய்த்தவென்றால்
அழுவநீர்வேலைசுற்றுமரவமின்றாகவற்றே
விழுமிதெம்பிரான்வந்தானென்றுரைத்ததுமீரவென்றான். (ரு0எ)

பரதன் இராமனிருப்பிடம் யாண்டெனல்.

ஓசனையிரண்டுண்டன்றேபரத்துவனுறையுஞ்சோலை
வீசுதெண்டிரையிற்றூயவெள்ளமோரேழுபத்தும்
மூசியபழுவமிங்ஙன்கிடப்பதோமூரற்றலின்றிப்
பேசியதமையுநங்கோனெங்குளன்பெருமவென்றான் (௩௦௮)

அனுமன் சமாதானங்கூறுதல்.

பரதனஃதுரைத்தலோடும்பணிந்துமாருதியுஞ்சீர்சால்
விரதமாதவன்மற்றோரைவிண்ணவர்தமையும்வேண்டி
வரதனுண்டளிப்பவந்தவரத்தினான்மலருந்தேனும்
சுரதமேமாந்திமாந்தித்துயின்றதுபோலுந்தானை. (௩௦௯)

வானவர்கொடுக்கவந்தவரத்தினான்மதுபமூசும்
தேனொடுகிழங்குங்காயுங்கனிகளும்பிறவுஞ்சேர்த்துக்
கானகம்பொலிதலாலேகவிக்குலமவற்றைமாந்தி
ஆனனமலர்ந்ததில்லையாகுநீதுயரலெந்தாய். (௩௧௦)

இனியொருகணத்தினங்கோனெழுந்தருடன்மையீண்டுப்
பணிவருங்கண்ணினீயேபார்த்தியென்றுரைத்தானிப்பால்
முனிதனதிடத்துவந்தமுளரியங்கண்ணன்வண்ணக்
குனிசிலைக்குரிசில்செய்ததிற்றெனக்குணிக்கலுற்றாம். (௩௧௧)

இராமனிடம் குகன் வருதல்.

அருந்தவன்சுவைகளாறோடமுதினிதளிப்பவையன்
கருந்தடங்கண்ணியோடுங்கிளைகளுந்துணைவரோடும்
விருந்தினிதருந்தினின்றவேலையின்வேலைபோலும்
பெருந்தடந்தானையோடுங்கிராதர்கோன்பெயர்ந்துவந்தான். (௩௧௨)

குகன்வணங்கலும் இராமன் தழுவிமகிழ்தலும்.

தொழுதனன்மனமுங்கண்ணுந்துளங்கினன்சூழவோடி
அழுதனன்கமலமன்னவடித்தலமதனின்வீழ்ந்தான்
தழுவினனெடுத்துமார்பிற்றம்பியைத்தழுவுமாபோல்
வழுவிலாவலியரன்றேமக்களுமனையுமென்றான். (௩௧௩)

இராமனுக்குக் குகன்மறுமொழி கூறல்.

அருளுனதுளதுநாயேற்கவரெலாமரியவாய
பொருளலர்நின்னைநீங்காப்புணர்ப்பினாற்றொடர்ந்துபோந்து
தெருடருமிளையவீரன்செய்வனசெய்கலாதேன்
மருடருமனத்தினேனுக்கினிதன்றோவாழ்வுமன்றோ. (௩௧௪)

குகனிலக்குமணனையும் சனகியையும் வணங்குதல்.

ஆயனபிறவும்பன்னியழுங்குவான்றன்னையைய
நீயிவையுரைப்பதென்னோபரதனினீவேறுண்டோ

போயினிதிருத்தியென்னப்புளிஞர்கோனிளவல்பொற்றாள்
மேயினன்வணங்கியன்னேவிரைமலர்த்தாளின்வீழ்ந்தான். (ருகரு)

இராமன் சுக்கிரீவாதியர்க்குக் குகனையறிவித்தல்.

தொழுதுநின்றவனைநோக்கித்துணைவர்கடமையுநோக்கி
முழுதுணர்கேள்விமேலோன்மொழிகுவான்முழுநீர்க்கங்கை
தழுவிருகரைக்குநாதன்றாயினுமுயிர்க்குநல்லன்
வழுவிலாவெயினர்வேந்தன்குகனெனும்வள்ளலென்பான். (ருகசு)

சுக்கிரீவாதியர் குகனைத்தழுவி நண்புகோடல்.

அண்ணலஃதுரைத்தலோடுமரிகுலத்தரசனாதி
நண்ணியதுணைவர்யாருமினிதுறத்தழுவிநட்டார்
கண்ணகன்ஞாலமெல்லாங்கங்குலாற்பொதிவான்போல
வண்ணமால்வரைக்குமப்பான்மறைந்தனனிரவியென்பான். (ருகஎ)

அலங்கலந்தொடையினனுமந்தியின்கடன்களாற்றிப்
பொலங்குழைமயிலினோடுதுயிலுறப்புணரிபோலும்
இலங்கியசேனைசூழவிளவலுமெயினர்கோனும்
கலங்கலர்காத்துநின்றார்கதிரவனுதயஞ்செய்தான். (ருகஅ)

புட்பகமேறியிராமன் பரத்துவாசாச்சிரமங் கடந்துசெல்லுதல்.

கதிரவனுதயகாலைக்கடன்கழித்திளவலோடும்
அதிர்பொலன்கழலினனவ்வருந்தவன்றன்னையேத்தி
விதிதருவிமானமேவிவிளங்கிழையோடுங்கொற்றம்
முதிர்தருகருணையோடுமுனிமனந்தொடரப்போனான். (ருகக)

தாவிவான்படர்ந்துமானந்தடையிலதேகும்வேலைத்
தீவியகன்னியாகிச்செருக்கியகாமச்செவ்வி
ஓவியமுயிர்பெற்றென்னவும்பர்கோனகருமொவ்வா
மாவியலயோத்திசூழுமதிற்புறந்தோன்றிற்றன்றே. (ருஉ0)

இராமன் இஃதயோத்தியென வானரராதியரெழுந்துவணங்குதல்.

பொன்மதிற்கிடக்கைசூழப்பொலிவுடைநகரந்தோன்ற
நன்மதிக்கிழவர்தம்மைநோக்கியஞானமூர்த்தி
சொன்மதித்தொருவராலுஞ்சொலப்படாவயோத்திதோன்றிற்
றென்னலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சிநின்றார். (ருஉக)

வேறு.

அன்னதோரளவையின்விசும்பதாயினும்
துன்னிருங்கதிரவர்தோன்றினாலெனப்
பொன்னணிபுட்பகப்பொருவின்மானமும்
மன்னவர்க்கரசனுந்தானுந்தோன்றிற்றால். (ருஉஉ)

அனுமன் இராமன் வருகையைப் பரதனுக்குக் காண்பித்தல்.

அண்ணலேகாண்டியாலலர்ந்ததாமரைக்
கண்ணனும்வானரக்கடலுங்கற்புடைப்
பெண்ணருங்கலமுநின்பின்புதோன்றிய
வண்ணவிற்குமரனும்வருகின்றார்களே. (௩௨௩)

ஏழிரண்டாகியவுலகமேறினும்
பாழ்புறங்கிடக்குறுபடியதாயதோர்
சூழொளிமானத்துத்தோன்றுகின்றனன்
ஊழியோனென்றுகொண்டுணர்த்துங்காலையே. (௩௨௪)

இராமனைக்கண்ட நகரமாந்தராரவாரித்தல்.

பொன்றெளிமேருவின்பொதும்பிற்புக்கதோர்
மின்றெளிமேகம்போல்வீரன்றோன்றலும்
மன்னெதிர்வருநகர்களார்ப்பிராவணன்
தென்னகர்க்கப்புறத்தளவுஞ்சென்றதால். (௩௨௫)

இராமனை பரதன் தரிசித்தல்.

ஊனுடையாக்கைவிட்டுண்மைவேண்டிய
வானுடைத்தந்தையார்வரவுகண்டெனக்
கானிடைப்போகியகமலக்கண்ணனைத்
தானுடையுயிரினைத்தம்பிநோக்கினன். (௩௨௬)

கெட்டவான்பொருள்வந்துகிடைப்பமுன்புதாம்
பட்டவான்படரொழிந்தவரிற்பையுளேய்
சுட்டவான்மானவற்றெழுதலுன்னியே
விட்டனன்மாருதிகரத்தைமேன்மையான். (௩௨௭)

அனுமனுகாயத்தி லிராமனை யடைந்து பரதன்றிறமாதியகூறுதல்.

அக்கணத்தநுமனுமவணின்றேகியத்
திக்குறுமானத்தைச்செவ்வனெய்தியச்
சக்கரத்தண்ணலைத்தாழ்ந்துமுன்னின்றான்
உக்குறுகண்ணநீரொழுகுமார்பினன். (௩௨௮)

உருப்பவிர்கனலிடையொளிக்கலுற்றவப்
பொருப்பவிர்தோளனைப்பொருந்திநாயினேன்
திருப்பொலிமார்பநின்வரவுசெப்பினேன்
இருப்பனவாயனவுலகம்யாவையும். (௩௨௯)

இராமனனுமனைப்புகழ்ந்து தழுவுதல்.

தீவினையாம்பலசெய்யத்தீர்விலா
வீவிலமுறைமுறைவிளைவமெய்ம்மையால்

